# நினைவிலிருத்தவேண்டிய நிகழ்ச்சிகள்

1911 டிஸம்பரில், பீகார் தனி மாகாணப் பதவி யடைந்தது. புராதனப் புகழ்பெற்ற பீகாரின் சரித்திரத்தில் அன்றொரு புதிய சகாப்தம் ஆரம்பித்திருக்கிறது.

மாகாணப் பதவி எய்தியதுடன், மற்றொரு குறிப்பிடத்தக்க நற்சம்பவமும் சம காலத்தில் நடந்தது. அதே 1911 டிஸம்பரில், ஸாக்சி என்ற பெயருள்ள காடுகள் சூழ்ந்த குக்கிராமமொன்றில், புதிதாகநிர்மாணிக்கப்பட்ட டாடா அயர்ன் & ஸ்டீல் வர்க்ஸின் இயந்திரங்கள், சூழ்ந்திருந்த நிசப்தத்தைக் கலைத்துக்கொண்டு, பெரு முழக்கத்துடன் தம் பணியைத்துவக்கின. இன்று ஜம்ஷெட்பூர் எனப்படும் அங்கு, இந்தியாவிலேயே முதல் தடவையாக இரும்பு உருக்கி வார்க்கப்பட்டது. நாட்டின் பொருளாதார முதிர்ச்சிக்கு நல்வழி காட்டி, இந்திய கனத்தொழில் திட்டத்தில் பீகாருக்கென ஒரு தனிப் பதவியை ஏற்படுத்திக் கொடுத்தது ஜம்ஷெட்பூர்.

கடந்த ஐம்பது ஆண்டுகளில் பீகார் வெகுவாக முன்னேற்ற மடைந்துள்ளது. இதன் இரண்டாவது பெரிய நகரமான ஜம்ஷெட்பூர், எஃகு உற்பத்தி சாலையை ஆதாரமாகக் கொண்டு, நாட்டின் தலைசிறந்த தொழில் நகரங்களுள் ஒன்றாகத் திகழ்கிறது. இயந்திரத் தொழிலும், உழைப்பாற்றலும் ஜம்ஷெட்பூரில் கேவலம் பிழைப்பிற்கு வழிமட்டுமன்று ; ஒரு தனி வாழ்க்கை முறையே.



1911ல் டாடா ஸ்டீல் தொழிற்சாலையின் ஒரு தோற்றம்

**ஜம்ஷெட்பூர்** எஃகு நகரம்

The Tata Iron and Steel Company Limited

JWTTN 5456

பிலவ, மாசி 7

# கல்கி

பிப்ரவரி 18, 1962



## பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.

ஆந்திரத்தின் குண்டூர், கிருஷ்ணா, கிழக்கு கோதாவரி, மேற்கு கோதாவரி ஜில்லாக்களில் புகையிலை பதனிடல் நூதன முறையில் நடைபெறுகிறது. அந்த ஜில்லாக்களில் விரவியுள்ள பண்டகசாலைகளில் சிகரெட் தயாரிப்புக்காக வர்ஜீனியா புகையிலை கணப்புப் போடப்பட்டுப் பக்குவப்படுத்தப்படுகிறது. அத்தகைய புகையிலையை, அதற்கான விற்பனைத் தலமாகிய குண்டூரில், ஐக்கிய ராஜ்யம், ருஷியா மற்றும் இதர நாடுகளின் சிகரெட் தயாரிப்பாளர்கள் வாங்கி ஏற்றுமதி செய்கின்றனர்.



## புகையிலையின் வரலாறு... 5

Panama

20

CIGARETTES



பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

**பனாமா**

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

GT.705 TM

Grants' Advtg.

# புண்ணியத் திருப் போர்

**த**ருணம் வந்து விட்டது!

அடிமை வாழ்வை உதறி விட்டுச் சுதந்திர வாழ்வைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு மக்களுக்குக் கிடைத்து விட்டது!

ஜனநாயகம் என்பது இரு சக்கரம் கொண்ட வண்டி. ஒரு கட்சியின் எதேச்சாதிகாரம் அல்ல என்பதை மெய்ப்பிக்கும் பொதுத் தேர்தல்கள் இம்மாதம் 17-ந் தேதி தொடங்கி 25-ந் தேதி வரை நடக்கின்றன.

வாக்காளர்கள் அனைவரும் விவேகத்துடன் நடந்து கொள்ளவேண்டிய சமயம் இது. பயத்தையும், பொறாமையையும், பொருளாசையையும் ஒதுக்கி விட்டுத் தர்மமாக, நியாயமாக, சத்தியமாக நடந்து காட்டவேண்டிய தருணம் இது.

பயம், பொறாமை, பொருளாசை இம்மூன்றையும் ஆதாரமாக வைத்தே காங்கிரஸ் இந்தத் தேர்தலில் வெற்றி காண எண்ணியிருக்கிறது. இவற்றுக்கு வசப்பட்டு விடாமல் மனச்சாட்சிக்கு விரோதமின்றி மக்கள் நடக்க வேண்டும்.

**போரெனில் இதுபோர்! புண்ணியத் திருப்போர்**
**பாரினில் இதுபோற் பார்த்திடற்கிலரே!**

என்று போற்ற வேண்டிய புண்ணியப் போர் இந்தத் தேர்தல். காங்கிரஸின் பதவி பலத்தையும் பண பலத்தையும் எதிர்த்துச் சுதந்திரக் கட்சியின் தர்ம பலம் செய்யும் போர் இது. சூரபதுமனைக் குழந்தை கார்த்திகேயன் எதிர்த்ததுபோல், பதினைந்து ஆண்டுகளாக எதேச்சாதிகாரம் செய்து வரும் காங்கிரஸை, பிரம்மாண்டமான ஸ்தாபன அமைப்புடன் கூடிய காங்கிரஸை, இரண்டரை ஆண்டே முடித்த சுதந்திரக் கட்சி எதிர்க்கப் புறப்பட்டிருக்கிறது. தர்மத்துக்காக நடக்கும் இந்த யுத்தத்தில் உங்கள் பங்கைச் செலுத்த மறக்காதீர்கள். திண்ணமாக வோட்டுச் சாவடிக்குச் சென்று சத்திய சுதந்திரக் கட்சிக்கு வோட்டுப் போடுங்கள். இப்போரில் சுயநலத்தையோ, பயங்காளித்தனத்தையோ, துவேஷத்தையோ, சாதிப் பற்றையோ கலந்து மாசு படியச் செய்யாதீர்கள்.

காங்கிரஸ் கட்சி எல்லாத் துறைகளிலும் மனம் போனபடி பிரவேசித்து எல்லாரையும் ஆட்டி வைக்கும் எல்லையற்ற அதிகாரம் பெற்றிருக்கிறது. காங்கிரசுக்கு விரோதமாக நடந்தால் தங்கள் கதி என்னாகுமோ என்று தொழிலதிபர்களும், வியாபாரிகளும், சர்க்கார் ஊழியர்களும், பொதுமக்களும் நடுங்குகின்றனர். மக்களிடையே இப்படியொரு பயத்தை வளர்த்தே, தான் வளர்ச்சி பெற எண்ணுகிறது காங்கிரஸ்.

பாரதப் பெருமக்களே! பயந்து நடுங்காதீர்கள்! காங்கிரஸின் அடக்குமுறையில் ஒடுங்கி வாழ்ந்ததெல்லாம் போதும். இரகசியத் தேர்தல் முறையைப் பயன்படுத்திக் கொண்டு இப்போதாவது உங்கள் சுதந்திரத்தைக் காத்துத் தரத் தோன்றியுள்ள சுதந்திரக் கட்சிக்குத் தைரியமாக வாக்களியுங்கள். சொந்த முன்னேற்றத்துக்காக நிற்கும் அபேட்சகர்களை ஆதரிக்காதீர்கள். உங்களுடைய ஊக்கமும் செயல் திறனும் வெளிவராமல் செய்த காங்கிரஸை ஒரு போதும் ஆதரிக்காதீர்கள்!

விளம்பரமும் விளக்குகளும் அலங்காரமும் படாடோபமும் கண்டு மயங்காதீர்கள். யார் அடக்கமாக வேலை செய்கிறார்களோ அவர்களே யோக்கியர்கள். உங்கள் ஆதரவைப்பெறத்தகுந்தவர்கள்.

**ப**யத்துக்கு அடுத்தபடியாகப் பொறாமையைத் தூண்டி விட்டு வோட்டு வேட்டையில் கொழுத்த லாபம் பெற எண்ணுகிறது காங்கிரஸ். தொழிலாளிகளை முதலாளிகளுக்கு விரோதமாகவும், உழவர்களை நில உரிமையாளருக்கு விரோதமாகவும் கிளப்பி விட்டு அந்தப் பகையிலேயே தனக்கு வெற்றியைப் பயிர்செய்து கொள்ள எண்ணுகிறது.

சூது வாது தெரியாத தொழிலாளிகளே, உழவர்களே! காங்கிரஸின் சோஷலிஸத்தால் உங்களுக்கு ஒரு விதமான நன்மையும் கிடையாது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். நில உடைமைக்கு வரம்பு கட்டுவதால் மொத்தத்தில் கிடைக்கப் போகும் பத்து லட்சம் ஏக்கராக்களை உழவர் குடும்பத்தைச் சேர்ந்த இரண்டாயிரம் லட்சம் பேருக்குப் பங்கு போட முடியுமா? அதேபோல் மாதம் முந்நூறு ரூபாய்க்கு மேல் குடும்ப வருமானமுள்ள பதினைந்து சத விகிதத்தினரின் சொத்தைக் கொண்டு மீதி எண்பத்தைந்து சத விகித மக்களின் வாழ்நிலையை உயர்த்துவதுதான் சாத்தியமா?

இதெல்லாம் காங்கிரசுக்கும் தெரியும். உண்மையில் உழவையும் தொழிலையும் மக்களுக்கு உரிமையாக்கும் எண்ணமே அதற்குக் கிடையாது; ஏனென்றால் அது இயலாத காரியமாகும். என்றாலும் சோஷலிஸம் என்ற பெயரைச் சொல்லிக் கொண்டு உழவையும், தொழிலையும் சர்க்காரின், அதாவது ஒரு கட்சியின் உடைமையாக்கிக் கொள்ளப் பார்க்கிறது காங்கிரஸ்.




கூட்டுறவுப் பண்ணைகளும், சர்க்கார் வர்த்தகக் கார்ப்பரேஷனும் இந்தக் காங்கிரஸ் குத்தகையின் புறச் சின்னங்களே. சர்க்கார் நேரடியாக மேற்கொள்ளாத தொழில்களிலும் கண்ட்ரோல்களைப் பிரயோகித்து அவற்றில் ஈடுபட்டுள்ளவர்களைக் காங்கிரஸின் கையாட்களாக்கி வருகிறது அது. இம் முறையினால் காங்கிரஸை ஆட்சி பீடத்திலிருந்து அசைக்க முடியாதபடி செய்து கொள்வதே அதன் நோக்கம். வஞ்சகமும், கபடமும் தெரியாத அப்பாவி மக்கள் இதையெல்லாம் உணர்ந்து துவேஷத்துக்கு வித்திடும் ஆட்சியாளர்களை உதறித் தள்ள வேண்டும்.

தனி மனிதர்கள் ஊக்கத்துடனும், தங்கள் சொத்து என்ற அக்கறையுடனும் செய்து வந்த உழவும் தொழிலும் இயற்கைக்கு இணைந்த முறை. இவற்றை அதிகாரிகளுக்கும், அரசியல்வாதிகளுக்கும் விட்டுக் கொடுத்து விட்டால் நாட்டின் உற்பத்தி நாசமாகும்; அதனால் தங்கள் எதிர்காலம் நாசமாகும் என்பதைப் பாட்டாளிகள் யாவரும் அறிய வேண்டும். சுதந்திரத் தொழிலுரிமையைப் பேணிக் காக்கவென்றே பிறந்துள்ள சுதந்திரக் கட்சிதான் தங்கள் நலனுக்குகந்தது என்று புரிந்து கொண்டு அதற்கே வாக்களிக்க வேண்டும்.

அதிகார பலமும் பிரசார பலமும் போக மூன்றாவது ஆயுதம் ஒன்றைப் பிரயோகித்துத் தேர்தலில் வெற்றி காண முனைந்திருக்கிறது காங்கிரஸ். அதுதான் அக்கட்சியின் பணபலம். தொழில் துறையினரின் கழுத்தைச் சுற்றி மாட்டியுள்ள கண்ட்ரோல் சுருக்கை மேலும் மேலும் இறுக்கி அவர்களைப் பணம் கக்க வைத்திருக்கிறது காங்கிரஸ். இவ்விதமாகக் கோடிக் கணக்கில் நிதி திரட்டியிருக்கிறது. இவ்வளவையும் இந்தத் தேர்தலில் செலவிடப் போகிறது அது. பணத்தைக் கொண்டு வோட்டு திரட்டி விடலாம் என்று மனப்பால் குடிக்கிறது காங்கிரஸ். மக்களுடைய மகத்தான ஜனநாயக உரிமையைச் சந்தைப் பொருளாகக் கருதிப் பெற எண்ணுகிறது. பணத்துக்காக ஆத்மாவைப் பறிபோக்கிய பாவம் உங்களுக்கு வேண்டாம். எந்தக் கட்சியாவது லஞ்சம் தரவந்தால் அதற்கு அடிபணிய மாட்டோம் என்று துரத்தி விடுங்கள். ஆத்ம சோதனைக்கு இந்தத் தேர்தலை ஒரு நல்ல வாய்ப்பாகக் கருதுங்கள்!

அந்நிய ஆட்சியின் கொடுமைகள் பலவற்றையும் பொருட்படுத்தாது நாட்டுச் சுதந்திரம் பெற்றவர்கள் நம் மக்கள். அது இன்று காங்கிரஸுக்கு மட்டுமே கிடைத்த சுதந்திரமாகி விட்டது. ராஜாஜி கூறியது போல் இந்த நாடே இன்று ஒரு சிறைக் கூடமாகி அதில் மக்களெல்லாம் பயந்து நடுங்கும் கைதிகளாக வாழ்கிறார்கள். ஆனால் இந்தச் சிறைக் கூடத்தின் பூட்டைத் திறந்து கொள்ளும் சாவி அவர்கள் கையிலேயே இருக்கிறது. அதுதான் வாக்குச் சீட்டு. நட்சத்திரச் சின்னத்தை ஆதரித்து அடையாளமிடுவதன் மூலம் அடிமை வாழ்வென்ற இருளில் சுதந்திர வாழ்வுக்குத் திசைகாட்டும் துருவ நட்சத்திரத்தைக் கண்டு கொள்ளுங்கள்!

**பூமியில் எவர்க்குமினி அடிமை செய்வோம்-பரி பூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்.**
என்ற ஆனந்த நிலையை அடையுங்கள்!

# காரணம் காட்டுகிறோம்

பொதுத் தேர்தலில் மக்கள் ஏன் சுதந்திரக்கட்சிக்குத்தான் வாக்களிக்க வேண்டுமென்பதற்கு அசைக்க முடியாத காரணங்கள் சிலவற்றைக் கூற விழைகிறோம். உழவும், தொழிலும் வளம்பெற வேண்டுமானல், வேலையில்லாத் திண்டாட்டம் தீர வேண்டுமானல், உலகில் செல்வாக்கு உயர வேண்டுமானல், சமய உணர்வு பெருக வேண்டுமானல் சுதந்திரக் கட்சியைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதைத் தெளிவுபடுத்துகிறோம். இவற்றுக்கெல்லாம் மேலாக அரசாங்கத்தின் சர்வாதிகாரம் ஒழிந்து மக்கள் சுதந்திரமாகத் தொழில் நடத்தவும், சொத்துக்களைச் சேர்க்கவும், சேர்ந்த சொத்துக்களைப் பராமரிக்கவும் சுதந்திரக் கட்சிதான் உதவி புரியும். நியாயத்தின் ஆட்சி ஏற்படவேண்டுமானல் சுதந்திரக் கட்சிக்கு வாக்களிப்பது ஒன்றே சிறந்த வழி.

## 1. விடுதலை வாழ்வு பெற...

நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தைச் சாதிக்கப் பல வழிகளைக் கைக்கொள்ளலாம். பலாத்கார முறையில் அபிவிருத்தி ஏற்படுத்தவே காங்கிரஸ் கட்சி விரும்புகிறது. இவ்வித முறையால் பொருளாதாரத்தில் முன்னேற்றம் பெற்றாலும் கூட மக்கள் தங்கள் ஆத்மாவை இழந்துவிடுவது உறுதி. எல்லாவற்றுக்கும் அரசாங்கத்தையே எதிர்பார்க்கும் அடிமை வாழ்வில் இன்பம் என்பது இருக்கவே இருக்காது.

நியாயமாகத் தொழில் செய்து நேர்மையாக ஈட்டிய சொத்தைச் சிக்கனமாகவும், திறமையுடன் மக்கள் நிர்வகித்து வரும்போது மக்களுடைய சொத்துக்களைக் காத்துத் தரவேண்டிய அரசாங்கமே இன்று அவற்றைப் பறித்து வருகிறது. ஜனநாயக சாஸனமாகிய அரசியல் சட்டத்தை மீறி இந்த அக்கிரமத்தைச் செய்து வருகிறது. தன்னுடைய பெரும்பான்மை பலத்தால் பார்லிமெண்டில் சட்டங்களைத் தன் இஷ்டப்படி திருத்தி — அதாவது திரித்து — மக்களின் நிலங்களைப் பிடுங்கிக் கொள்கிறது. அதற்கு நஷ்ட ஈடு என்ற பெயரில் என்ன தொகை கொடுத்தாலும் அதற்காக அவர்கள் எதிர்த்து வழக்காட முடியாமல் செய்திருக்கிறது.

தங்களுக்கும் தங்கள் குடும்பத்தாருக்கும் எதிர்கால வாழ்வுக்கு உதவியளிப்பதற்காக வசதியுள்ள ஒரு சில மக்கள் சேமிப்பு செய்வதற்குத் தயங்கும்படி செய்து என்றென்றும் அவர்கள் காங்கிரஸையே அண்டி வாழும்படி செய்துவிட்டது. இந்த அநீதி ஒழிய வேண்டுமானல் நமது மூல அரசியல் சட்டத்தையே மீண்டும் நடைமுறைக்குக் கொண்டுவர விரும்பும் சுதந்திரக் கட்சியைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

மூதலும், நிலமும் உள்ளவர்கள் அவற்றைத் தர்ம நியாயமாகச் சமூக நலனுக்கு உபயோகிக்கிறார்களா, தொழிலாளர்களுக்கு உரிய பங்கினை அளிக்கிறார்களா என்று மேற்பார்வை மட்டுமே செய்ய வேண்டிய சர்க்கார் தானே தொழிலையும் விவசாயத்தையும் நடத்துவேன் என்கிறது. பொருளாதாரம் சர்க்கார் வசமாகி அது விலைகளையும், ஊதியங்களையும் தனக்குத் தோன்றிய படி நிர்ணயித்தால் அதனை எப்படி மக்கள் எதிர்க்க முடியும்? தனியார் செய்யும் தவறுகளுக்குச் சர்க்கார் மூலம் பரிகாரம் காணலாம்; சர்க்காரே தவறு இழைக்க ஆரம்பித்தால் எப்படி, யார் மூலம் பரிகாரம் காணமுடியும்? இன்று நில நஷ்டஈட்டுக்குச் செய்திருப்பது போலவே நாளைக்கு இதர விஷயங்களையும் நீதி மன்றங்களுக்கு எடுத்துச் செல்ல முடியாமல் காங்கிரஸ் சர்க்கார் தடை செய்து விடும். எந்தக் கட்சி ஆட்சிபீடத்திலிருந்தாலும் சர்க்கார் நீதித் துறையில் தலையிடுவதைச் சுதந்திரக்கட்சி அடியோடு கண்டிக்கிறது.

ரேடியோ, சினிமா செய்திச் சுருள் இவற்றைச் சர்க்காரின் பிரசாரத்துக்கே உபயோகித்து வரும் காங்கிரஸ், பத்திரிகைகளையும் பலவிதக் கெடுபிடிகளின் கீழ் வைத்திருக்கிறது. இந்த நிலையில் கல்வி கேள்விகளில் உயர்ந்தோர் தங்கள் கருத்துக்களை எப்படிப் பயமின்றி நாட்டுக்கு அளிக்க முடியும்? பல்கலைக் கழகங்கள் முதலிய கல்வி ஸ்தாபனங்களும் சர்க்காரின் ஆதிக்கப் பசிக்கு இலக்காகி வருகின்றன. 'நாங்களே பாட புத்தகம் போடுவோம்' என்கிறது சர்க்கார். வருங் காலப் பிரஜைகளை இளமையிலேயே பிடித்து ஒரு கட்சியின் கருத்துக்களைப் பதிய வைக்க எண்ணுகிறது. உடலுக்குத் தேவையான பொருளாதாரத்தோடு, உள்ள நிறைவுடன் வாழ அவசியமான சிந்தனை சக்தியையும் சர்க்காருக்கு அடகு வைத்த பின் ஜீவனம் நடத்துவதில் சாரம் ஏது?

இந்தப் பயங்கரமான கம்யூனிஸக் கொடுங்கோன்மையைக் கடைப்பிடித்திருக்கிறது காங்கிரஸ். இது நீங்கவேண்டுமானல் மக்கள் காங்கிரஸுக்குத் தலை

முழுகியே ஆக வேண்டும். 'மக்கள் ஒருவரையொருவர் ஏய்த்தும், சுரண்டியும் பிழைக்காமல் பார்த்துக் கொள்ளும் அளவுக்கே சர்க்கார் அதிகாரம் பெற்றிருக்க வேண்டும்; மக்கள் செய்ய முடியாத தொழில்களையே சர்க்கார் செய்ய வேண்டும்' என்ற காந்திய தத்துவத்தைக் கூறும் சுதந்திரக் கட்சிதான் மக்கள் விடுதலை வாழ்வை இழக்காமல் வளம் காண உதவி புரியும்.

## 2. உழவு தழைக்க...

இந்தியா ஒரு விவசாய நாடு. மொத்த ஜனத்தொகையில் முக்கால் பங்கினர் உழவுத் தொழிலில் ஈடுபட்டுள்ள நமது நாடு உணவுக்கு அந்நியரை எதிர்பார்ப்பது வெட்கப்பட வேண்டிய நிலைமையாகும். இந்த நிலவரத்தை மாற்றுவது நம் கையிலேயே இருக்கிறது. சர்க்கார் விவசாயிகளுக்கு நல்ல உரமும், விதைகளும், கடன்களும், மானியமும், அவசியமானால் இயந்திரங்களும் வழங்குவதன் மூலம் உணவுப் பண்ட உற்பத்தியைப் பெருக்க வேண்டும். அதோடு இன்று தரிசாகக் கிடக்கும் பத்து கோடி ஏக்கரா நிலங்களைச் சிறுகச் சிறுக விளைச்சலுக்குக் கொண்டு வர வேண்டும். இவையெல்லாம் சுதந்திரக்கட்சியின் கொள்கைகள்.

இவற்றுக்கெல்லாம் மேலாக, உற்பத்தி உயருவதற்கு விவசாயிகளின் உற்சாகம் உயர வேண்டியது அத்தியாவசியமல்லவா? எனவே தான் சுதந்திரக்கட்சி நிலத்துக்கு வரிகள் இருக்கக் கூடாது; உணவு படைக்கும் விவசாயிக்கு வரி போடுவது பாலூட்டும் தாய்க்கு அபராதம் விதிப்பது போலாகும் என்கிறது. ஆகவே நாட்டில் உழவு தழைத்து, இங்கு தானியங்கள் கொழிக்க வேண்டுமானால் சுதந்திரக் கட்சிதான் அதற்கு வகை செய்யும்.

இன்று ஆட்சியிலுள்ள காங்கிரஸ், உற்பத்தியைப் பெருக்குவதை விட்டு விட்டு இருக்கும் சாகுபடி நிலங்களைச் சம விநியோகம் செய்வதாக ஜாலம் காட்டுவதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறது. நில உடைமைக்கு வரம்பு கட்டுவோம்; உபரி நிலத்தை உழவுத் தொழிலாளருக்கு வழங்குவோம் என்று புளுகி வோட்டுப் பெட்டியை நிரப்பிக் கொள்ளப் பார்க்கிறது அது.

தரிசாகக் கிடக்கும் பத்துக் கோடி ஏக்கராக்களில் ஐந்தே சதவிகிதத்தை விளைச்சலுக்குக் கொண்டு வந்து நிலமற்றோருக்குப் பகிர்ந்தளித்தால் கூட அவர்களுக்கு நிலவரம்புச் சட்டத்தால் கிடைப்பதைப் போல் ஐந்து மடங்கு கிடைக்கும். ஆனால் நிலமற்ற உழவுத் தொழிலாளர் நில உரிமை பெறுவது பற்றிக் காங்கிரஸுக்கு உண்மையில் சிரத்தை ஏதும் கிடையாது. உபரி நிலங்களைக் கூட்டுறவு என்ற முறையில் தானே நிர்வகித்து விவசாயிகளை அரசாங்கக் கூலிகளாக்குவதுதான் அதன் நோக்கம். 'பலாத்காரமில்லை, சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் தலையிட மாட்டார்கள்' என்றெல்லாம் நேருஜி சொல்லுவதில் பொருளில்லை. உண்மை, அந்தக் கூற்றுக்கு நேர்விரோதம். விவசாயிகள் என்றும் காங்கிரஸுக்கே பயந்து வாழ்ந்து காங்கிரஸையே ஆட்சியில் இருத்துமாறு செய்வதுதான் நிலச் சீர்திருத்தச் சட்டங்களின் குறிக்கோள்.

## 3. தொழில் செழிக்க.....

'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்ற அமரகவியின் வாக்குக்கிணங்க விவசாயத்தோடு, நாட்டின் தொழிலையும் போற்றி வளர்ப்பது சுதந்திரக் கட்சியின் கொள்கையாகும். நிலத்துக்குக் கூறிய அதே வாதங்கள் எல்லாத் தொழிலுக்கும் பொருத்தமாகும். தனி மனிதர்கள் தங்கள் சொத்துக்களை அக்கறையுடன் பராமரிப்பது போல் சர்க்கார் ஒருகாலும் செய்யாது. எனவே தொழில் துறையைத் தேசிய மயமாக்குவது என்ற பெயரில் ஆளும் கட்சிக்கு வசமாக்குவது உற்பத்தியைப் பெரிதும் பாதிக்கும்.

சர்க்கார் தொழிலின் ஓர் அம்சத்தைத் தொழிலாளர்கள் ஆழ்ந்து யோசித்துப் பார்க்க வேண்டும். தனி மனிதர்களிடம் தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்வதற்காக வேலைநிறுத்தம் உள்ளிட்ட பல நடவடிக்கைகளைத் தொழிலாளர்கள் மேற்கொள்ள முடிகிறது. ஆனால் சர்க்கார் எஜமானனாகும் போது இந்த உரிமைகளை அது பறித்து விட்டால் அவர்கள் என்ன செய்ய முடியும்? 'நான் நடத்தும் எல்லாத் தொழிலுமே தேசிய வாழ்வுக்கு அத்தியாவசியமானவை. எனவே அவை ஸ்தம்பித்துப் போகும்படியான எந்த நடவடிக்கையாவது தொழிலாளர்கள் எடுத்தால் அதனால் நாட்டு வாழ்வே பாதிக்கப்படும்; அவ்விதம் செய்வது தண்டிக்க வேண்டிய குற்றமாகும்' என்று சர்க்கார் உத்தரவு இட்டு விட்டால் தொழி

லாளர் என்ன செய்ய முடியும்? அதே போல் இன்று தொழிலாளி—முதலாளித் தகராறுகளை விசாரணைக் குழுவின் முன் கொண்டு வருவதற்குத் தொழிலாளிகள் பெற்றிருக்கும் உரிமைகளையும் சர்க்கார் மறுத்து விடலாமல்லவா? இப்போதே சில துறைகளில் இவ்விதம் விசாரணை நடக்க முடியாதபடி சர்க்கார் தடை செய்து விட்டதல்லவா?

எனவே தொழிலாளர் நலனுக்காகவே ஏற்பட்டதாகச் சொல்லப்படும் கம்யூனிஸ முறையிலோ, அந்தக் கம்யூனிஸ சித்தாந்தத்தையே தழுவியுள்ள காங்கிரஸ் ஆட்சியிலோ தாங்கள் இன்று காணும் நன்மைகளையும் உரிமைகளையும் கூடப் பெற முடியாது என்ற பேருண்மையைத் தொழிலாளிகள் உணர வேண்டும்.

தொழிலாளிகளை முதலாளிகள் உரியபடி நடத்தி அவர்களுக்கு நியாயமான ஊதியம் தரச் சுதந்திரக் கட்சி உழைக்கும். உற்பத்தி அபிவிருத்திக்கேற்பத் தொழிலாளிகள் லாபத்தில் பங்கு பெற வேண்டுமென்பதும் அதன் கொள்கைகளில் ஒன்று. சின்னஞ் சிறு முதலீடுகளை வளர்த்துத் தொழிலாளர்களும் முதலுரிமை பெற அது வழிகாணும். காரிய சாத்தியமற்ற வாக்குறுதிகளைக் கண்டு மயங்காமல் நடைமுறைக்கு வரக்கூடிய சுதந்திரக் கட்சிக் கொள்கைக்கே தொழிலாளர்கள் தமது பேராதரவைத் தர வேண்டும்.

சர்க்கார் தொழில் நடத்துவதால் தொழிலாளருக்கு மட்டுமன்றிப் பொது மக்கள் யாவருக்கும் தீங்கு இழைக்கப் படும். தரமான பண்டங்களைப் பெற முடியாது. சர்க்கார் தயாரிக்கும் பண்டங்களுக்கு எவ்வளவு விலை போட்டு விற்றாலும் அதைத்தான் வாங்க வேண்டும். நேரு அவர்களின் சர்க்கார் அந்நிய நாட்டினருக்குக் காட்டிப் பெருமைப் படுவதற்காக விமானக் கப்பல்களிலும் அணு உலைகளிலும்தான் கோடிக்கணக்கான ரூபாய்களைக் கொட்டுவார்கள். மக்களுக்கு வேண்டிய பொருள்களே கிடைக்காமல் போகும்.

சர்க்கார் சில துறைகளில் நேரடியாகத் தொழிலை ஏற்றிருக்கிறது என்றால் அதே சமயம் இதர தொழில் துறை முழுதும் வேறு விதத்தில் தன் சர்வாதிபத்தியத்தைக் காட்டி வருகிறது.

தங்களுக்குத் தாளம் போடக் கூடியவர்களுக்கே உற்பத்தியும் விநியோகமும் செய்வதற்கான பெர்மிட், லைசென்ஸ், இவற்றை வழங்குகிறது அது. இவர்கள் ஏகபோக உரிமை பெற்று வருகிறார்கள். இந்தப் பெர்மிட் முறையைச் சுதந்திரக் கட்சி அடியோடு வெறுக்கிறது. போரோ, வேறெந்த நெருக்கடியோ இல்லாத இன்று பொருள் வசதியும், துணிவும், வியாபாரத் திறனும் படைத்த எல்லாரும் தொழில் புரிவதற்கான வாய்ப்பை அளிக்க மறுப்பது மாபெரும் குற்றமென அது கருதுகிறது. தொழில் சுதந்திரம் இருந்தால்தான், எல்லாரும் உற்பத்தியிலும், விநியோகத்திலும் ஈடுபட முடியும். இந்தப் போட்டா போட்டியினால் யார் நல்ல பண்டங்களைக் குறைவான விலைக்கு விற்கிறார்களோ அவர்களிடமிருந்து பொருள்களை வாங்கும் வாய்ப்பு மக்களுக்குக் கிடைக்கும். தங்கள் பொருட்கள் விலைபோக வேண்டும் என்பதால் தொழில் துறையினர் தாங்களாகவே, தரமான பண்டங்களைச் சரசமான விலைகளுக்கு வழங்க முன்வருவார்கள்; மக்களுக்குத் தேவைப்படும் பொருட்களையே தயாரிப்பார்கள். பெர்மிட் முறையின்கீழ் சிலரே போட்டியின்றி உற்பத்தியும் விற்பனையும் செய்வதால் விலைகள் நியாயமாக இரா; நல்ல பொருள்களும் கிடைக்கமாட்டா.

நேரு அவர்களே சோஷலிஸத்தில் சில நாட்கள் வரையில் பெர்மிட் - லைசென்ஸ்கள் இருக்கத்தான் வேண்டுமென்கிறார். ஆனால் இது எந்தக் கட்டத்தில் எப்படி முடிவடையும் என்பதை மட்டும் அவர் கூறாது போய் விட்டார். சோஷலிஸம் உள்ளவரை தொழில் துறையில் அடியிலிருந்து நுனிவரை லைசென்ஸ் அடக்குமுறை இருந்தே தீரும்.

பொதுமக்கள் யாவரும் சுதந்திரக் கட்சியை ஆதரிக்க வேண்டும் என்பதற்கு இது ஒரு முக்கியமான காரணமாகும்.

## 4. நிர்வாகம் சிறக்க...

உங்களை ஆளும் அரசாங்கமும், அரசாங்கப் பொறுப்பை ஏற்றுள்ள அரசியல் கட்சியும், அரசாங்க உத்தரவுகளையும், சட்டங்களையும் அமுலாக்கும் நிர்வாகத் துறை உத்தியோகஸ்தர்களும் நேர்மையாக இருக்க வேண்டும் என்பது தானே உங்கள் விருப்பம்? காங்கிரஸ் ஆட்சியில் இந்த விருப்பம் ஒருபோதும் ஈடேற முடியாது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

சர்க்காருடைய அனுமதியைப் பெற்றுத்தான் இன்று நாட்டில் எந்தக் காரியமும் நடக்க முடியும். வியாபாரம் செய்வதற்கோ உற்பத்தி செய்வதற்கோ அரசாங்கத்தின் அனுமதியைப் பெறவேண்டியிருக்கும் வரையில் மக்கள் அரசாங்க




அதிகாரிகளை அணுகத்தான் வேண்டும். பலர் இவ்வித அனுமதியைப் பெறுவதற்காகக் காத்துக் கிடந்தாலும் சிலர் மட்டும்தான் அதனைப் பெற முடிகிறது. எனவே சர்க்காரின் அனுமதியைப் பெறுவதற்காக அதிகாரிகளைத் தூய்மைக் குறைவான முறையில் திருப்தி செய்ய வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. நெருப்பையும் பஞ்சையும் ஒன்று சேர்த்து வைப்பதுபோல் அதிகார வர்க்கத்துக்கும் பொதுமக்களுக்கும் தொடர்பு ஏற்படுத்தி நாட்டில் லஞ்சப் பேயைத் தலைவிரித்தாடச் செய்கிறது பெர்மிட் முறை.

இப்படியிருந்தும் இந்தச் சர்க்கார் அதிகாரிகள் தம் இஷ்டப்படி அனுமதிகள் வழங்கவும் முடியாது. ஆள்கிற காங்கிரஸ் கட்சிக்காரர்கள் இழுத்த இழுப்புக்கெல்லாம் வளைந்து கொடுத்து, அவர்கள் கூறுபவர்களுக்கே லைசென்சுகளை வழங்குகிறது நிர்வாக இயந்திரம். அதிகாரிகளும் மக்களும் முறையற்ற விதத்தில் சேருவது அக்கிரமம் என்றால் அரசியல் கட்சியானது அதிகாரிகள் மீது சக்தியைப் பிரயோகிப்பது அதைவிடப் பெரிய அக்கிரமமாகும்.

அநாவசியமாக எல்லாவற்றுக்கும் சர்க்கார் அனுமதி அளிக்க வேண்டும் என்ற நிலையில் இந்த இருவிதமான முறைகேடுகளும் நிரந்தரமாக வளர்ந்து கொண்டேதானிருக்கும். மக்கள் சுதந்திரமாகத் தொழில் நடத்தும்போது, அதிகாரிகளையோ, ஆளும் கட்சியையோ அணுக வேண்டிய சந்தர்ப்பமே ஏற்படாது.

எனவே இந்நாட்டிலிருந்து லஞ்சப் பிசாசைத் துரத்த வேண்டுமானால் அதற்கான மந்திரம் சுதந்திரக் கட்சிக்கு வோட் செய்வதுதான்.

## 5. வேலை வாய்ப்பு வளர.....

**கா**ங்கிரஸ் கடன்வாங்கியும் வரிகளை உயர்த்தியும் எவ்வளவோ பெரிய பெரிய திட்டங்களைப் போட்டபோதிலும் மக்களின் வேலை வாய்ப்புக்கள் பெருகவே இல்லை. மூன்றும் திட்ட காலத்தில் புதிதாக முப்பது லட்சம் பேர்கள் வேலையில்லாமல் தவிப்பார்கள் என்று நிபுணர்கள் கூறுகிறார்கள்.

இதற்குக் காரணம் நேரு சர்க்காரின் இயந்திர மோகம்தான். மக்களின் சக்தியைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்ளாமல் அயல் நாடுகளிலிருந்து கோடானுகோடி ரூபாய் மதிப்புள்ள இயந்திரங்களைத் தருவித்து என்றைக்கோ பயன் தரப் போவதாகக் கருதப்படும் கன ரகத் தொழிற்சாலைகளை நடத்துகிறது சர்க்கார். நாட்டில் எல்லாப் பிரதேசங்களிலும் பரவலாகச் சிறு தொழில்கள் நடைபெற வேண்டும். அதற்கு ஏதும் வழி செய்யவில்லை காங்கிரஸ். சிறு தொழில்களுக்கும், குடிசைத் தொழில்களுக்கும் அது காட்டும் கவனமெல்லாம் வெறும் கண்துடைப்பே.

இதற்கு மாறாகச் சுதந்திரக் கட்சியானது மக்களுக்கு உடனடியாகத் தேவைப்படும் பொருள்களை உற்பத்தி செய்யும் சிறு சிறு தொழில்களை ஏற்படுத்த வேண்டுமென்கிறது. கிராமப்

பொது மராமத்து வேலைகளுக்கு எல்லாம் முடிந்தமட்டும் மனித சக்தியையே பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்கிறது. இவற்றின் மூலம் விவசாயத்தை நம்பி வாழும் மக்களுடைய நெரிசலைத் தீர்த்து, சில பருவ காலங்களில் வேலையற்றிருக்கும் விவசாயிகளுக்கும் துணைத் தொழில்கள் உண்டாக்கித் தர வழி கண்டிருக்கிறது.

முக்கியமாக, கைத்தறி நெசவாளர்கள் யாவரும்சுதந்திரக்கட்சிக்கே வோட்டுஅளிக்க வேண்டும். கைத்தறியை நசுக்கும் ஆலைத் தொழிலதிபர்கள் தரும் பிச்சையைக் கொண்டு, கூட்டுறவு சங்கத்து எஜமானர்களுக்கும் கூட்டுறவுகளில் இடம் பெற்றுள்ள கைத்தறி நெசவாளருக்கும் மட்டும் காங்கிரஸ் சர்க்கார் நன்மை செய்கிறது. இவ்வாறு அந்நியர் யாசகத்தில் நம் நெசவாளர்கள் வாழ வேண்டிய அவசியமே கிடையாது. வேஷ்டி, புடவை முதலிய கரைபோட்ட இனங்களைத் தயாரிக்கும் பூரண உரிமையையும் கைத்தறிக்காரர்களுக்கே விட்டுக் கொடுத்தால் அவர்கள் சுயபலத்தில் ஜீவனம் செய்வார்கள். இன்று கைத்தறியை விட்டு விட்டு வெளியேறி வேலையில்லாமல் திண்டாடுபவர்களின் எண்ணிக்கையும் இதனால் குறையும். காந்தி அடிகளின் ஆணையை நம்பி மனித ஆற்றலை மதிக்கும் சுதந்திரக் கட்சியே வேலை இல்லாப் பிரச்னையைத் தீர்த்து வைக்கும்.

## 6. ஆஸ்திகம் ஓங்க.....

காங்கிரஸ் ஆட்சியால் ஏற்பட்டுள்ள பல விபரீதமான விளைவுகளில் ஒன்று நாட்டின் தர்ம நெறிகள் உருக்குலைந்து போயிருப்ப தாகும். பணத்தையும், அடக்கு முறையையும், பெர்மிட்டையும் கொண்டு தேசத்தின் அறப் பண்புகள் இருந்த இடம் தெரியாமல் செய்வதற்குக் காங்கிரஸ் கங்கணம் கட்டிக் கொண் டிருக்கிறது. நமக்கெல்லாம் மேம்பட்ட ஒரு மகா சக்தி இருப்பதைக் காங்கிரஸ் தலைவர்கள் நம்பாததால் தான் அக்கட்சியினர் இவ்வளவு அநியாயங்களையும் செய்து வருகிறார்கள்.

அரசாங்கத்தின் அதிகார வரம்புகளைப் பெருமளவுக்குக் குறைப்பதன் மூலம் சுதந்திரக் கட்சியானது இந்தத் தருமச் சீர்குலைவைத் தடுத்து நிறுத்தும்.

பொருளாதார உயர்வே வாழ்க்கை என்று கருதுகிறது காங்கிரஸ். மனிதர்கள் பண்பில் உயருவதற்கு அது வழி தேடவில்லை. எல்லோரும் நன்னெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டுமானால், அதற்கு எளிமை உணர்ச்சியும், ஆண்டவனிடம் பயமும் அவசியம்—அதாவது மத உணர்வு அவசியம்.

மதங்கள் ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொள்வதைத் தடை செய்ய வேண்டுமேயன்றி, மதங்களையே வேரறுப்பது மடமையாகும். காங்கிரஸ் ஆட்சியில் மத உணர்வு வளர வழியே கிடையாது. மதச் சார்பற்ற சர்க்கார் என்ற பெயரில் மக்களின் சமய நம்பிக்கையை அது தகர்த்து வருகிறது. சுதந்திரக் கட்சியோ மக்கள் பண்பும், தூய உள்ளமும், நேரிய நடத்தையும் பெறுவதற்குச் சமய உணர்வு தேவை என்று கருதுகிறது. எனவே குழந்தைப் பருவத்திலேயே பள்ளிகளில் சமயக் கல்வி அளிக்கப்படுவதற்கு அது ஆதரவளிக்கிறது. அதே சமயம் பள்ளி நிர்வாகத்தினர் பிறமதத்தினர் மீது தங்கள் சமயத்தைத் திணிக்காமல் காப்பளிக்க வேண்டுமென்றும் அது கருதுகிறது.

மத ஸ்தாபனங்களின் சொத்துக்களை அரசாங்கம் தீண்டக் கூடாது என்பது சுதந்திரக் கட்சியின் கொள்கை. மத ஸ்தாபனங்களுக்காக அளிக்கும் நன்கொடைகளுக்கு வரி விதிக்கக் கூடாது என்பதும் அதனுடைய ஒரு கருத்து. ஆகவே ஆஸ்திகர்களும், ஆன்மீக நாட்டமுள்ளவர்களும் அவசியம் தேர்வு செய்ய வேண்டிய கட்சி பாரதப் பண்புகளுக்குப் பணியும் சுதந்திரக் கட்சியே ஆகும்.

## 7. உலக அரங்கில் உயர...

தொன்றுதொட்டுப் பாரத நாடு உலகில் தனிச் சிறப்புப் பெற்று வந்ததற்குக் காரணம் அதனுடைய தார்மீகப் பண்புகள்தாம். இந்த தர்ம பலத்தைக் கொண்டே வெள்ளையனை வெளியேறச் செய்த காந்திஜீ உலக அரங்கில் இந்தியாவின் குரலுக்கு மதிப்பும் மரியாதையும் கட்டிக் கொடுத்தார். இந்நாடு ஒருகாலும் அறத்துக்குப் புறம்பாகப் பேசாது என்ற பெருமையைப் பெற்றுத் தந்தார்.

அந்த மதிப்புக்கெல்லாம் ஊறு விளைவித்து விட்டது நேருஜியின் காங்கிரஸ் சர்க்கார். அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய மேற்கத்திய வல்லரசுகளுக்கும் ருஷியாவுக்குமுள்ள பகையைப் பயன்

## டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.




உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சரியமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது

# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள் :

டேன் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்.

படுத்திக் கொள்கிறது அது. 'எங்கே இந்தியா எதிரானியுடன் சேர்ந்து விடுமோ?' என்ற பயத்தில் இந்த நாட்டைச் சமூக நிலையில் வைத்திருப்பதில் அந்த வல்லரசுகளும் கவனம் கொண்டிருக்கின்றன. விளைவு: இந்தியா கப்பரையை நீட்டும் போது இவ்விரு கோஷ்டிகளும் அதைத் தப்பாது நிரப்புகின்றன.

இந்த நிலவரத்தை வல்லரசு கோஷ்டிகளும் வெளியிட முடியாததால் இந்தியாவுக்கு உலக ஸ்தாபனமாகிய ஐ.நா.வில் ஒரு போலித்தனமான மரியாதை கிட்டி வந்தது. ஆனால் அப்படி ஓர் உலக ஸ்தாபனம் இருப்பதையே மதிக்காமல் பலாத்காரத்தைப் பிரயோகம் செய்து இந்தியா கோவாவை இணைத்துக் கொண்டதால் மேற்கத்திய நாடுகள் இன்று அதிருப்தியை வெளிப்படையாகக் காட்டத் தொடங்கி விட்டன. இனி இந்தியா, ஐ. நா. சபைக்கு உலக நாடுகள் அடங்கி நடக்க வேண்டுமென்றோ, அஹிம்சை முறை பற்றியோ பேசவே முடியாது.

வெளிப்பட கூட்டு சேராக்கொள்கை, நடு நிலைமை என்ற பெயர்களில் நல்ல பெயர் வாங்கப் பார்த்தாலும் இந்தியா உள்ளூறக் கம்யூனிஸச் சார்புள்ளதே என்ற அவப் பெயரையும் நேரு சர்க்கார் நமக்கு வாங்கி வைத்திருக்கிறது. கம்யூனிஸ்ட் சீனு இந்தியாவை ஆக்கிரமித்திருக்கும்போது, வடபம்பாய் லோகசபைத் தொகுதியில் தேர்தலுக்கு நிற்கும் பாதுகாப்பு மந்திரியைக் கம்யூனிஸ்ட் கட்சியே ஆதரிப்பது அவமானத்திலும் அவமானமாகும்.

அந்நியனுக்கு நாட்டின் பல்லாயிரம் சதுர மைல்களை இழந்து விட்டு அதற்குத் தக்க எதிர் நடவடிக்கை எடுக்காத நேரு சர்க்கார், இன்று நம்முடன் தோளோடு தோள் நிற்க வேண்டிய அண்டை ராஜ்யங்கள் யாவும் எதிரி முகாமில் சேர இடமளித்திருக்கிறது.

ஆக, நம் அயல் நாட்டுக் கொள்கை என்ன என்பதே தெரியவில்லை. அது திட்டவட்டமாக உருவாக வேண்டுமானால் இன்றைய திட்டங்கள் எடுபட வேண்டும்; திட்டங்கள் நீக்கப்பட்டால் தான் நம்முடைய அந்நியக் கடன் தேவைகள் நீங்கும்; அவை நீங்கினால் தான் — அதாவது நாம் எவ்விதத்திலும் எந்நாட்டுக்கும் கடமைப்பட்டிரா விட்டால்தான்—காந்தி அடிகள் விரும்பியது போல் நாம் உலக விவகாரங்கள் குறித்து உள்ளத்துக்கு விரோதமின்றிப் பேச முடியும். சுதந்திரக் கட்சியைத் தேர்வு செய்ய வேண்டுமென்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

## 8. ஒரு காரணம் போதும்.....

நாள்தோறும் ஏறிவரும் விலைவாசிகள் இறங்க வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள் அல்லவா? மற்றக் கட்சிக்காரர்கள் எவ்வளவுதான் சண்டப் பிரசண்டமாகப் பேசினாலும்விலைகள் குறைய அவர்கள் உதவ மாட்டார்கள். ஏனென்றால், அவர்கள் யாவரும் பகாசுர ஐந்தாண்டுத் திட்டங்களை ஆதரிப்பவர்கள். மக்களின் உடனடித் தேவையைக் கவனியாது அணு உலைகளும், விமானக் கப்பல்களும் நிர்மாணம் செய்யும் இந்த மாபெரும் திட்டங்கள் உள்ள வரை மேலும் மேலும் வரிகள் உயர்ந்தபடிதான் இருக்கும். அந்த வரிகள் அன்றாடத் தேவைப் பண்டங்களின் விலையில்தான் கூடும். அதோடு சர்க்காரும் ரூபாய் நோட்டுக்களை அச்சடித்துத் தள்ளியபடி இருக்கும். தற்போது இவ்வாறு வரிகளை ஏராளமாகப் பெருக்கியிருப்பதாலும், காகித நோட்டுக்களைத் தாராளமாகப் புழக்க விட்டிருப்பதாலும்தான் விலைகள் நாளுக்கு நாள் விஷம்போல் ஏறி வருகின்றன. இந்த லக்ஷணத்தில் அடுத்த ஐந்தாண்டில் இன்னும் 1700 கோடி ரூபாய்க்கு வரிகள் போடப் போவதாகவும் 550 கோடி ரூபாய்க்குக் காகித நோட்டு போடப் போவதாகவும் ஆட்சியாளர்கள் சொல்லி யிருக்கிறார்கள். இதுவரையில் ஈட்டிய வரித் தொகையையும், போட்ட ரூபாய் நோட்டுக்களின்| மதிப்பையும் விட இவை அதிகமாகும்.

வரிகளும், ரூபாய் நோட்டுக்களும் பெருகி, மக்களின் அன்றாடத் தேவையான பண்டங்களின் உற்பத்தி பெருகா விட்டால் விலைகள் இன்னமும் உயர வேண்டியதுதான். இதை யாரும் மறுக்க முடியாது; மறுக்கவும் இல்லை. எனவே நாட்டின் சக்திக்கேற்ற திட்டங்களையே வகுக்க வேண்டும் என்று கூறி, இன்றைய ஐந்தாண்டுத் திட்டங்களை எதிர்க்கும் ஒரே கட்சியான சுதந்திரக் கட்சிதான் விலைகள் குறைய உதவி செய்யும். இதில் அணுவளவும் சந்தேகம் வேண்டாம்.

தேர்தலில் வோட்டுப் பெறுவதற்காகக் காங்கிரஸ் உள்ளிட்ட மற்றக் கட்சிக்காரர்களும் இப்போது விலைவாசிகளை மட்டுப்படுத்துவது பற்றிப் பேசுகிறார்கள். இது முழுவதும் பொய்யான பேச்சு; பகாசுரத் திட்டங்கள் உள்ள வரை விலைகள் இறங்குவது அசாத்தியம். ஏமாற்றுப் பேச்சுக்கு வசியமாகி விடாதீர்கள்! உங்கள் வோட்டைச் சுதந்திரக் கட்சிக்கே அளியுங்கள்.

# கேள்வியும் பதிலும்

ராஜாஜி தம்மைக் கேட்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பதாக எண்ணிய நேருஜி ராஜாஜியைத் திரும்ப ஒரு கேள்வி கேட்டார்: 'நீங்கள் இந்தியா எப்படித் தானிருக்க வேண்டுமென விரும்புகிறீர்கள்?' என்று. அதற்கு ராஜாஜி அளித்த பதிலை நேயர்கள் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள். இதை மேலெழுந்தவாரியாகப் பார்த்த மகா மந்திரி அவர்கள் ''வறுமையையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் பற்றி ராஜாஜி என்ன சொல்லுகிறார்?'' என்று கேட்டிருக்கிறார்.

இந்த ஒரு கேள்வியே போதும், பதினைந்தாண்டு காங்கிரஸ் ஆட்சி இந்த நாட்டுக்கு என்ன சாதித்திருக்கிறது — அதாவது சாதிக்கவில்லை — என்பதைக் காட்டுவதற்கு. வறுமையையும், வேலை இல்லாமையையும் எதிர்க் கட்சிக்காரர்கள் ஒரு பெரிய பிரச்னையாகக் கருதிக் காங்கிரஸுக்குச் சவால் விட வேண்டும் என்று பிரதமர் நினைவூட்டியிருப்பதாகவே கருதி அவருக்கு நன்றிகூறுகிறோம்.

போகட்டும், ராஜாஜி உண்மையில் இந்த இரு பிரச்னைகளையும் பற்றிக் கூறாமலில்லை. 'பளுவான நேர்முக, மறைமுக வரிகள் இல்லாத ஒரு இந்தியாவைக் காண நான் விரும்புகிறேன். பணவீக்கத்தையும், விலை உயர்வையும் உண்டாக்கும் பட்ஜெட்டுகள் கூடாதென நான் விரும்புகிறேன். மூலதனப் பொருட்களின் உற்பத்திக்காக இன்றைய தலைமுறையினரின் வாழ்வைப் பரிதாபகரமாக்குவதை நான் விரும்பவில்லை' என்று அடுத்தடுத்து அவர் தமது அறிக்கையில் கூறியிருப்பதை யாரும் கவனிக்கலாம்.

வறுமைக்குக் காரணம் வரிகளும், பணவீக்கமும், விலை உயர்வும் தான். ரூபாய் நோட்டுக்களைக் கொண்டு முன்பு வாங்கிய அளவு பண்டங்களை இப்போது நம்மால் வாங்கமுடியாதபோது வறுமை இல்லாமல் சுபிட்சமா இருக்கும்? இந்த வரிப் பணத்தையும், அச்சிட்ட ரூபாய் நோட்டுக்களையும் கொண்டு ராட்சத யந்திரங்களை உபயோகித்து மூலதனப் பொருட்களைத் தயாரிக்கிறது சர்க்கார். இந்த வரிப் பணம் மக்களிடம் இருந்தால் தனி மனிதர்கள் சிறு சிறு ஆலைகளும், தொழில்களும் ஏற்படுத்தி அவற்றில் ஏராளமான மக்களுக்கு வேலை அளித்திருப்பார்கள். அது முடியாதபடி செய்து வேலையில்லாத் திண்டாட்டத்தைக் காங்கிரஸே தான் பெருக்கியிருக்கிறது. வரிகளும், பணவீக்கமும் அடுத்த ஐந்தாண்டிலும் குறையாது; இயந்திர மயமான பெருந் தொழில்கள் பெருகும் என்றும் காங்கிரஸ் பகிரங்கமாகக் கூறியிருக்கிறது. எனவே பெரும் திட்டங்களை ஒழித்து, சிறு தொழில்களை வளர்க்க உறுதி கொண்டுள்ள சுதந்திரக் கட்சி நிச்சயமாக வறுமையையும், வேலையின்மைப் பிரச்னையையும் தீர்த்து வைக்கும் என்று பிரதமர் நேருஜி புரிந்துகொள்வாராக!

ராஜாஜியைக் கேள்வி கேட்பது இருக்கட்டும். ராஜாஜி கேட்ட கேள்விக்கு நேருஜி விடை சொல்லக் காணோமே? ஏன் சோஷலிஸத்தைக் கட்டி அழுகிறீர்கள் என்று கேட்டால் வெகு நாட்களாகவே காங்கிரஸில் சில சோஷலிஸ அம்சங்கள் இருந்திருக்கின்றன என்கிறார் நேரு அவர்கள். சோஷலிஸம் இப்படி அப்பட்டமாக விசுவரூபம் எடுத்திருப்பதற்கு இது ஒரு காரணமாகாது. அதோடு சோஷலிஸ சித்தாந்தத்தைப் பற்றிச் சொல்லி அதற்கு ஆதரவு கோர வேண்டுமே ஒழிய அது பல காலமாக இங்கு ஓரளவுக்கு வரவேற்கப்பட்டதைக் காரணம் காட்டலாகாது. 'அநீதி நடக்கிறது!' என்றால் 'அதனாலென்ன? வெகு காலமாகவே தான் அநீதி நடந்து வந்திருக்கிறதே' என்று விடை கூறுவார்களா?

இன்னொரு கேள்வியும் ராஜாஜி பல காலமாகக் கேட்டு வருகிறார்: 'மலையாகக் குவியும் அந்நியக் கடன்களை எப்படித் திருப்பித் தரப் போகிறீர்கள்?' என்று. வழக்கம் போல இம்முறையும் இந்தக் கேள்வியின் திசைக்கே தலை காட்டாமல் போய் விட்டார் நேரு. அவரைச் சொல்லி என்ன? காங்கிரஸ் திட்டங்களில் இதற்கு ஏதேனும்விடை இருந்தால் தானே அவர் கூறமுடியும்?



கடவுள் இல்லாக் கட்சி
தருமம் இல்லாக் கட்சி
பர்மிட் லைசென்ஸ் கட்சி
பித்தலாட்டக் கட்சி

# மணிபல்லவம்

## நிறை வாழ்வு

திரு என்ற சொல்லுக்குக் 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' என்று பொருள் விரிவு கூறியிருக்கிறார்கள் உரையாசிரியர்கள். தத்துவ ஞானிகளோ இன்னும் ஒரு படி மேலே போய்ப் 'பொருள் உடைமையும், பொருள் சேர்த்து நுகர்வதுவும் திரு அல்ல. அழகு, கருணை முதலிய உயர்குணங்கள் இடையறாமல் எண்ணங்களில் நிறைந்திருக்கும் மன நிகழ்ச்சி தான் திரு'—என்று பொன்னும் பொருளும் சேர்வதைத் திருவாகக் கருதாமல் நிறைந்த மனத்தையே திருவாகக் கூறினார்கள். பெரியவர்களும் அரியவர்களும் கண்ட இந்த நிறை வாழ்வைத்தான் இளங்குமரன் இறுதியாக அடைகிறான். மங்கலமான நற்குணங்களையே நிதியாகக் கொண்டு நிற்கும்போது வாழ்வில் தனக்கு வரும் சோதனைகளை வெல்ல வேண்டிய அவசியமும் அவனுக்கு ஏற்படுகிறது. கொலை என்பது பிறருடைய உயிரையோ, உடல் உறுப்புக்களையோ கொல்வது மட்டுமல்ல, 'பிறர் அறிவையும் புகழையும் முதலாயினவற்றைக் கொன்றுரைப்பது கூடக் கொலை தான்' என்றெண்ணிச் சொல்லிலும், நினைப்பிலும் செயலிலும் சான்றாண்மை காத்துவந்த இளங்குமரன் அவற்றைக் கைவிட வேண்டிய சோதனைகளை எல்லாம் சந்திக்க நேரிடுகிறது. செல்வம் என்பது சிந்தையின் நிறைவே என்று எண்ணி எண்ணி அந்த எண்ணமே செல்வமாகித் திகழத் தொடங்கிவிட்ட அவன் மனத்திலும் உலகியல் வாழ்வின் சலனங்கள் குறுக்கிடுகின்றன. அறிவின் வலிமையாலும் சேர்த்து வைத்துக் கொண்ட தத்துவ ஞானங்களின் துணையாலும் அந்தச் சலனங்களையும் வென்று நிற்கிறான் அவன்.

தன்னுடைய காலடியில் வந்து ஒதுங்கிய சங்குகளையும், பூங்கொத்துக்களையும் குறிப்பிட்டு வளநாடுடையாரும், ஓவியன் மணிமார்பனும், விசாகையும், மணிநாகபுரத்து மன்னனின் பெருமையைச் சொல்லி மங்கல வாழ்த்துக் கூறியபோதும் அவனுடைய உணர்வுகள் தன் வாழ்வில் ஏதோ சில புதிய அநுபவங்களை எதிர்பார்த்தனவேயன்றி எந்தவிதமான செருக்கும் அடையவில்லை. பிறருடைய வாழ்த்தும், புகழ் வார்த்தைகளும் தன் மனத்தைக் கிளர்ச்சி கொள்ளச் செய்ய முடிந்த அளவு தனது எண்ணங்களையோ, நம்பிக்கைகளையோ, மலிவாக வைத்துக் கொண்டிருக்கும் பலவீனமான வேளைகள் தன் வாழ்வில் வரலாகாது என்று அவன் உறுதியாயிருந்தான். உலகத்தில் தூய்மையான புகழ் என அவன் நம்பியது, 'நான் பழி வருவன எவற்றையும் எண்ணுவதில்லை; செய்வதில்லை; பேசுவதில்லை' — என்று ஒவ்வொரு மனிதனும் தனக்குத்தானே சத்தியத்தில் மனப் பூர்வமாக நம்பிக்கை வைத்துத் தன்னைச் சோதித்துக் கொள்கிறானே—அதுதான்! மெய்யான புகழ் ஒரு மனிதனுடைய ஏதாவதொரு திறமையை மட்டும் சார்ந்து நிற்பதில்லை. அந்தத் திற






மையை ஆள்கின்றவன் தன் வாழ்வில் எவ்வளவுக்கு நியாயமான குணங்களைச் சார்ந்து நிற்கிறான் என்பதையும் பொறுத்துத்தான் இருக்கிறது. 'பழிக்கு அஞ்சுவதுதான் பெரும் புகழ். புகழுக்கு ஆசைப்பட்டுத் தவிப்பதுதான் பெரும் பழி' — என்று தொல்காப்பியருடைய மெய்ப்பாட்டியலில் புகழ் என்னும் பெருமிதத்தைப் பற்றி இளங்குமரனுக்குக் கற்பிக்கும்போது திருநாங்கூரடிகள் கூறியிருந்தார். அறிவினால் வலிமையடைந்து மனம் வளர்ந்த பின் நிறைவு குறைவுகளைப் பற்றி இந்தப் புதிய தத்துவத்தை உணர்ந்திருந்தான் அவன்.

ஆசைகள் குறைவதே பெரிய நிறைவு. ஆசைகள் குறைந்தால் அவற்றைச் சூழ்ந்திருக்கும் பல துன்பங்களும் குறைந்து விடுகின்றன. மலை மேல் ஏறுகிறவன் கனமான பொருள்களைத் தலைச்சுமையாகச் சுமந்து கொண்டு மேலே போக முடியாதது போல் மனத்தில் ஆசைகளைச் சுமந்து கொண்டு எண்ணங்களால் உயரத்துக்குப் போக முடிவதில்லை. ஆசைகளுக்கு நடுவிலும் ஆசைகளால் குறைந்து நிற்கும் வாழ்வே பண்புகளால் நிறைந்து நிற்கிறது. குறைவில்லாத வாழ்வு எதுவோ அதுவே நிறை வாழ்வு. அந்த வாழ்வுக்குத் திருநிறைந்த மனம் வேண்டும். அது இளங்குமரனுக்கு வாய்த்திருந்தது. குறைகளை முடிக்கத் தவித்துத் தவித்து அதற்காக மனத்தில் எழும் முனைப்போ ஆசை, பற்று, விருப்பம் எல்லாம். ஆசைகள் தேவையில் தொடங்கிக் குறைகளாலே வளர்ந்து துன்பங்களோடு முடிகின்றன. நெடுநாட்களாய் மண்ணில் கிடக்கிற கல்லைப் புரட்டினால் அதன் மறுபுறம் தேளும், பாம்பும், பூரானும் போல நச்சுப் பிராணிகள் இருப்பதை ஒப்ப ஆசைகளின் மறுபுறத்தைப் புரட்டிப் பார்த்தால் அந்த மறுபுறத்தில் எத்தனையோ துன்பங்கள் தெரிகின்றன. எனவே ஆசைகள் நிறைந்த வாழ்வை நிறை வாழ்வு என்று இளங்குமரன் நம்பவில்லை.

எல்லையற்ற திருநிறைந்த மனம், திருநிறைந்த எண்ணங்கள் — 'உலகமே அன்பு மயமானது—அந்த அன்பே இன்ப மயமானது' — என்ற பாவனையுடன் வாழ்தல் இவையே நிறை வாழ்வு என்று நம்பினான் அவன். தன் வாழ்க்கையின் நம்பிக்கைகள் நிறைந்த வேளையில் மங்கலமான சுப சகுனங்களோடு மணிநாகபுரத்து மண்ணில் இறங்கி நின்ற இளங்குமரன் 'நிறைக! நிறைக!' என்று விசாகை தன்னை வாழ்த்திய வாழ்த்துக்களை இப்படிப்பட்ட நிறைவாகவே பாவித்துக் கொண்டான். ஆசைகளால் குறைந்து குணங்களால் நிறைந்த வாழ்வுக்கு அவன் ஆசைப்பட்டான்.

அந்த விநாடியில் அவன் மனம் இடைவிடாமல் 'என் எண்ணங்களில் திருநிறைய வேண்டும்'—என்றே உருவேற்றிக் கொண்டிருந்தது. ஒவ்வொரு முறை ஆசைப்படும் போதும் மனம் ஒருவிதத்தில் எதற்காகவோ' எரிந்து அழிந்து போகிறது. ஆசை என்பது என்றும் நிறைவில்லாத இயல்புடையது.. நிறைந்த வாழ்வு வேண்டுமானால் நிறைவில்லாத இயல்புகளை நீக்கிவிட வேண்டும். மனம் எதற்காகவும் அழியாமல் நிறைந்தே நிற்க வேண்டும் என்ற உறுதியுடனும் அப்படியே அழிந்தாலும் அந்த அழிவானது தங்கம் நெருப்பில் அழிவதைப்போல முன்னிலும் நிறைந்து ஒளிரும் அழிவாக வரவேண்டும் என்ற எண்ணத்துடனும், உடன் வந்தவர்களோடு மணிநாகபுரத்து மண்ணில் நடந்து சென்றான் இளங்குமரன். புண்ணியப் பேராற்றல் நிறைந்த அந்த நாகநாட்டு மண்ணில் இறங்கியபோது அவனுடைய வாழ்வில் ஐந்தாவது பருவம் பிறந்தது. 'கவலைப்படாதே தம்பி! உன்னுடைய வாழ்வில் இனி மேல் தான் எல்லாம் இருக்கிறது' — என்று வளநாடுடையார் கூறிய சொற்களில் ஏதோ பெரிய விளைவுக்கான அர்த்தம் இருக்க வேண்டுமென்று தோன்றினாலும் அது என்ன என்று அவரிடமே கேட்கும் துடிப்பு அப்போது அவனுக்கு ஏற்படவில்லை. ஏதோ வரவிருக்கிறதென்று அவன் மனத்திலேயே ஒருவாறு புரிந்தது: தன்னுடைய வாழ்வில் இப்போது வரவிருக்கும் அநுபவங்கள் எவையோ அவை தன்னை முழுமையாகக் கனிவிக்கப் பயன்படப் போவதாக உணர்ந்து தன்னுடைய உள்ளத்தையும் உணர்வுகளையும் அவற்றுக்குப் பக்குவமான பாத்திரமாக்கிக் கொண்டிருந்தான் அவன்.

'என்னுடைய எண்ணங்களில் இதற்கு முன்பும் இனியும் நீ ஒரு காவியநாயகனாக உருவாகிக் கொண்டிருப்பவன்' என்று திருநாங்கூர் அடிகள் என்றோ வாழ்த்திய வாழ்த்துக்கு விளக்கமாய் நிறைகிற வாழ்வு இந்தக் கதையின் ஐந்தாம் பருவத்தில் இளங்குமரனுக்கு எய்துகிறது.

தான் ஒளிமயமாக இருத்தல், தன்னை அணுகுவதற்கு அருமை, தன்னிடமிருந்து பிறர் ஒளி பெறுதல், தான் சார்ந்த இடத்தைத் தன்னுடைய சார்பால் தூயதாக்குதல் ஆகிய பொற்குணங்கள் இந்தப் பருவத்தில் இளங்குமரனின் வாழ்வில் நிறைந்து விளக்கமாகத் தோன்றுகின்றன. எல்லையற்ற நிதானத்தில் போய் நின்று கொண்டு இந்த உலகத்தைப் பார்த்துச் சிரிக்க வேண்டும் என்ற அவனது எண்ணமும் இந்தப் பருவத்தில் முழுமையாக நிறைகிறது.

நா. பார்த்தசாரதி



# கருணை மறமும் கழி விரக்கமும்

மறுநாள் பொழுது விடிந்தால் புத்த பூர்ணிமையாதலால் அன்று மணிநாக புரத்துத் தெருக்கள் நன்முக அலங்கரிக்கப் பெற்றிருந்தன. கரையோரங்களில் முத்துக் குளித்தெடுக்கும் முத்துச் சலாபங்களும், உள்நிலப் பகுதிகளில் நாக ரத்தினங்களும், வேறு பல்வகை மணிகளும் வளமாக நிறைந்துள்ள அந்தத் தீவின் தலைமையான நகரமாயிருந்ததனால் மணிநாகபுரம் நோக்கிய திசையெல்லாம் செல்வச் செழிப்புக்கொண்டு விளங்கியது. அந்த நகரத்து வீதிகளில் புலிநகக் கொன்றை மரங்கள் பூத்துக் குலுங்கின. அல்லியும் குவளையும் அலர்ந்த அழகுப் பொய்கைகள் அங்கங்கே தோன்றின. தரையை ஒட்டித் தாழ்ந்து வளர்ந்த புன்னை மரங்களும், மடல் விரித்து மணம் கமழும் தாழை மரங்களும் கடற் காற்றில் ஒரே சீராக ஒலித்துக் கொண்டிருந்தன. வெள்ளியைப் பொடி செய்து குவித்தாற் போல வெள்ளை வெளேரென்று மின்னும் மணற்பரப்பும், சிற்சில இடங்களில் கருமை நிறம் மின்னும் மணற்பரப்புமாக வாழ்க்கைக் கடலின் அலைகளில் சுகமும், துக்கமும் மாறி மாறி ஒதுக்கப்பட்டுக் குவிவதைப் போல வெண்மையும் கருப்புமாகக் குவிந்திருந்தன. மிக அருகில் தென்படும் அலைகளும் [illegible] தொலைவில் உள்ளடங்கித் தென்படும் மலைகளுமாக இயற்கையின் ஆழத்தையும், உயரத்தையும் அழகுற விளக்குவது போல் தென்பட்ட அந்த காட்டின் காட்சியில் இளங்குமரனின் மனம் ஈடுபட்டது. மணிமார்பனோ ஓவிய ஆர்வத்தோடு இந்தக் காட்சிகளையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தான்.

தழைத்து நீண்டு வளர்ந்து கருமை நிறத்தில் சிற்றலைபோலச் சரிந்து மின்னுகிற கூந்தலை மூன்று நாக படங்கள் போலவும், ஐந்து நாக படங்கள் போலவும், ஏழு நாக படங்கள் போலவும், பகுத்து அலங்காரமாகப் பின்னிக் கொண்டிருந்த நாக நங்கையர்கள் சிலர் கூட்டமாக எதிர்ப்பக்கத்து வீதியிலிருந்து வந்து கொண்டிருந்தார்கள். இருந்தாற் போலிருந்து வீதியில் எல்லாவிதமான இனிய இசைக் கருவிகளும் மிக நளினமாக ஒன்று சேர்ந்து கொண்டு இங்கிதமான குரலில் ஒலிப்பது போல அந்த நாக நங்கையர்களின் காலணிகளும், வளைகளும் ஒலித்தன. அந்தக் கூட்டத்திலேயே அழகு மிக்கவளும், ஏழு பிரிவாகத் தன் கூந்தலை வகிர்ந்து சடை வில்லை போல நாகணி அணிந்து அலங்கரித்துக் கொண்டிருந்தவளுமாகிய ஒருத்தியை எதிரிட்டு நோக்கிய மணிமார்பன் கண்களை இமைக்க மறந்து பார்த்துக் கொண்டேயிருந்தான்.

''என்ன? இந்த ஏமாற்றுப் பிரிவில் உங்கள் கப்பல் கவிழ்ந்து விடும் போல் இருக்கிறதே? நான் ஒருத்தி உங்கள் பக்கத்தில் நடந்து வந்து கொண்டிருப்பதை மறந்து விட வேண்டாம்'' — என்று கணவனின் தோளைத் தொட்டுத் திருப்பினாள் பதுமை. மணிமார்பன் தன் மனைவி பக்கமாகத் திரும்பிப் பார்த்து நாணத்தோடு நகைத்தான்.

''இல்லை பதுமை! அவள் தன் கூந்தலை ஏழு பகுப்பாகப் பிரித்துப் பின்னிக் கோலம் செய்திருக்கிற அழகைச் சித்திரத்தில் அப்படியே தீட்ட முடியுமா என்றுதான் கூர்ந்து நோக்கினேன்!''

''அதுதான் முன்பே சொல்லியிருக்கிறேனே: அன்பரே! ஏமாற்றுப் பிரிவில் கப்பல் கவிழ்ந்து விட்டால் மீள்வது அருமை..''

—என்று பதுமை மறுமொழி கூறிய போது தன் மனைவியின் சொற்களில் சிலேடையாக வந்த 'ஏமாற்றுப் பிரிவு' என்ற இரு பொருள் அழகை உணர்ந்து புரிந்து கொண்டு பெருமைப்பட்டான் மணிமார்பன். அவளே பேரறிவு வாய்ந்து இருக்க வேண்டும் என்று தோன்றியது அவனுக்கு. ''நீ கூடச் சில சமயங்களில் அழகான வாக்கியங்களைப் பேசி விடுகிறாய், பதுமை! பார்வையிலும் தோற்றத்திலும் பிறக்கும் போதே பிறந்த அலங்காரங்களாலும், பிறந்து வளர்ந்த பின் பிறப்பிக்கப்பட்ட அலங்காரங்களாலும் பெண்களுக்கு வாய்த்திருக்கிற அழகு போதாதென்று பேச்சிலும் அழகு வந்து விட்டால் இந்த உலகம் அதைத் தாங்காது பெண்ணே!''

''உலகம் தாங்காவிட்டால் போகிறது! நீங்கள் இப்படிப் பேசி என்னை ஏமாற்றி ஏமாற்றுப் பிரிவில் கவிழ வேண்டாம்'' என்று சொல்லிக் கொண்டே அவனுடைய விலாப்புறத்தில் வந்து நின்று அவன் பார்வை பதிந்திருந்த திசையை மறைத்தாள் பதுமை. மணிமார்பன் கண்களின் பார்வையை முழுமையாகத் தன் மனைவியின் மேல் திருப்பிக் கொண்டு அவளைக் கேட்டான்.

''சித்திரக்காரனுக்கு இப்படிப்பட்ட மனைவி வாய்த்து விட்டால் தொழில் பெருகினாற் போலத்தான்.''

# உங்கள் தேர்தல் பிரசங்கங்களை
# முழங்க வைக்க . . .

Kleertone

## கிளியர்டோன்
## ஒலிபெருக்கிக் கருவிகளை
### உபயோகியுங்கள்!



மேடைப் பிரசங்கங்களுக்கான கிளியர்டோன் ஒலிபெருக்கிக் கருவிகளைத் தேர்ந்தெடுத்து உங்கள் சொற்பொழிவுகளை கணீரென்று ஒலிக்கச் செய்யுங்கள்! 230 வோல்ட் ஏ. ஸி. மெயின்ஸ் மூலம் அல்லது 6 வோல்ட் பாட்டரி மூலம், 18, 25, 32, மற்றும் 40 வாட் கரண்டு செலவில் இயங்கும் ஒலிபெருக்கிகள் கிடைக்கும். 230 வோல்ட் ஏ. ஸி. மெயின்ஸ் மூலம் 45 மற்றும் 70 வாட் கரண்டு செலவில் இயங்குபவையும் கிடைக்கும்.

ஒரு முழு செட்:
ஆம்ப்ளிபயர்,
2 லவுட்ஸ்பீக்கர்கள்,
ஸ்டாண்டுடன் 1 மைக்ரோபோன்
விலை ரூ.572 லிருந்து
ரூ.1,075 வரை






உங்களருகில் உள்ள நேஷனல்-எக்கோ அல்லது கிளியர்டோன் வியாபாரிகளை அணுகுங்கள். அல்லது நேராக எங்களுக்கு எழுதுங்கள்.

**ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்**

பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . பெங்களூர் . டில்லி . பாட்னா . ஸெகந்திராபாத்

JWT-GRA 3166

"மனத்தில் பெருகட்டும்! இப்படி விழியில் பெருக வேண்டாம்." விட்டுக் கொடுக்காமல் குறும்புச் சிரிப்போடு மறுமொழி கூறினாள் பதுமை. மணிமார்பனும் அவன் மனைவியும் பின்னால் மெல்லத் தயங்கி நடந்து சென்று கொண்டிருந்ததனால் தங்களுக்குள் கலகலப்பாகச் சிரித்துப் பேசிக் கொண்டு செல்வதற்கு வசதியாக இருந்தது. இந்திர விகாரத்துத் துறவிகளும் பிறரும் உடன் வந்திருந்ததனால் விசாகை மணிநாகபுரத்துப் பௌத்த விகாரத்துக்கு விடை பெற்றுக் கொண்டு போயிருந்தாள். மறு நாள் காலை மீண்டும் மணிபல்லவத்தில் சந்திப்பதாக விடை பெற்றுப் போகும்போது அவள் இளங்குமரனிடம் கூறியிருந்தாள்.

வீரசோழிய வளநாடுடையாரும், இளங்குமரனும், வீதியின் முன் பகுதியில் நாகதெய்வக் கோட்டத்தை நோக்கி விரைந்து போய்க் கொண்டிருந்தார்கள். மணிநாகபுரத்துக் கரையில் இறங்கி நிற்பதற்கு முன்னும், இறங்கி நின்ற பின்னும், தான் இளங்குமரனிடம் கூறியிருந்த செய்திகள் எந்த விதமான பரபரப்பையும், ஆவலையும், அவனிடம் உண்டாக்காமற் போகவே வளநாடுடையாருக்கு வியப்பாயிருந்தது.

'இந்தப் பிறவியைப் பற்றிய ஞானமே உனக்கு இந்தத் தீவிலிருந்துதான் கிடைக்கப்போகிறது'-என்று தன்னால் சற்றுமுன் இளங்குமரனிடம் கூறப்பட்ட வார்த்தைகளிலிருந்து அவன் எதையுமே எதிர்பார்த்துப் புரிந்து கொண்டு வியப்படையாமல் அமைதியாக நடந்து வருவதைக் கண்டு வளநாடுடையார் திகைத்தார். எல்லாப் பரபரப்பும் எல்லா ஆவலும் அவருக்குத்தான் ஏற்பட்டனவே தவிர அவன் உணர்ச்சிகளைக் கடந்த அமைதியோடும், நிதானத்தோடும் நடந்து வந்து கொண்டிருந்தான். அவனுடைய நிதானத்திலும், அமைதியிலும் சிறிது கழிவிரக்கமும் கலந்திருந்ததைக் கூர்ந்து பார்த்தால் தெரிந்துகொள்ள முடிந்தது. நீண்ட நாட்களுக்குப் பின்னர் அருட்செல்வ முனிவருடைய ஞாபகத்தைத் தான் உண்டாக்கிப் பேசியதாலேயே அவனுக்கு அந்தத் துயரம் தோன்றியிருக்க வேண்டும் என்று வளநாடுடையார் புரிந்து கொண்டார். படிப்படியாக முயன்று தன்னுடைய உட்கருத்தை அவன் விளங்கிக் கொள்வதற்கேற்ற மனநிலையை அவனிடம் தோற்றுவிக்கும் நோக்கத்துடன் மீண்டும் பேச்சுக் கொடுத்தார் அவர்:—

"தம்பி! இழந்த பொருள்களையும், இழந்த நல்லுணர்வுகளையும், திரும்பவும் அடைகிறவனுடைய பெருமையைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?"

முன்பின் தொடர்பில்லாமல் கோடை மழையைப் போல் அமைதியைக் கலைத்துக் கொண்டு திடீரென்று இப்படிப் பேச்சைத் தொடங்கிய அவரை ஏறிட்டுப் பார்த்து விட்டுப் பின்பு மெல்லப் பதில் கூறினான் இளங்குமரன்.

"பொருள்களை இழப்பதற்காகத் துயரப்படுவதும், அடைவதற்காக மகிழ்ச்சி கொள்ளுவதும் சிறிய காரியங்கள். நம்மோடு பற்றும் பாசமும் வைத்து நீண்ட உறவாகப் பழகிவிட்ட ஒருவரது உயிர் நம் கண் காண அழிந்தால் அதற்காக நாம் குமுறித் துக்கப்படுவதை மட்டும் தான் கைவிட முடிவதில்லை. அப்படி உயிர்த் தொடர்புடையதாக வரும் பற்றுப் பாசங்களைக் கூட வென்று நிற்க வேண்டுமென்று பெரியவர்கள் சொல்கிறார்கள். சில சமயங்களில் ஞானத்தின் பலமிருந்தும் அத்தகைய துக்கங்களை வெல்ல முடியாமல் நாமே இருண்டு போய்க் கண் கலங்கி மலைத்து மேலே நடக்க முடியாமல் நின்றுவிடுகிறோம்..."

இந்த வார்த்தைகளைச் சொல்லும்போது இளங்குமரனும் தான் நடப்பதை நிறுத்திக் கொண்டு கண் கலங்கிப் போய் இருந்தான். அவனுடைய சொற்கள் நலிந்து உணர்ச்சி வசப்பட்டிருந்தன. அவன் மேல் நிறைந்த அநுதாபத்தோடு அருகில் சென்று தழுவிக் கொண்டார் வளநாடுடையார்.

"எவ்வளவு பெரிய ஞானியாயிருந்தாலும் நெகிழ்ந்த உணர்ச்சிகளை எதிரெதிரே சந்திப்பது இயலாத காரியம் தம்பி! மனைவி தூங்கும்போது எழுந்து வெளியேறி உலகத்துக்குத் துக்கநிவாரணம் காண வந்த புத்தனும், காதற்கிழத்தி காட்டில் உறங்கும்போது எழுந்திருந்து ஓடிப் போன நளனும் உணர்ச்சிகளை எதிரே சந்திப்பதற்குப் பயந்து கொண்டு தானே அப்படிப் புறப்பட்டிருக்க வேண்டும்?" என்று அவர் கூறியதை அவன் ஏற்றுக் கொண்டானா இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ள முடியாவிட்டாலும் அருட்செல்வ முனிவருடைய ஞாபகமே அவனைக் கண் கலங்கச் செய்திருக்கிறது என்று தெரிந்தது. அந்தக் கலக்கத்தையே வாயிலாகப் பயன்படுத்திக் கொண்டு தன் மனத்தில் இருப்பதை அவனுக்குச் சொல்லிவிட எண்ணினார் வளநாடுடையார்.

"இழந்த பொருள்களைத் திரும்பப் பெறுவதே இன்பமானால் இழந்த உயிரையே திரும்பப் பெறுவது இணை கூற முடியாத பேரின்பமாக அல்லவா இருக்கும்?" — என்று கூறி விட்டு அவன் முகத்தைக் கூர்ந்து நோக்கினார் அவர். அதில் தவிப்பும், ஏக்கமும் தெரிவதற்



குப் பயந்து கொண்டே தெரிவதுபோல, மெல்லத் தெரிந்தன.

''ஐயா! அருட்செல்வ முனிவருடைய ஞாபகத்தை இன்று நீங்கள் என்னிடம் உண்டாக்கியிருக்க வேண்டாம். எந்த விதமான உணர்ச்சிகளை எதிரே சந்திப்பது தாங்க முடியாததென்று கருதுகிறீர்களோ அதே விதமான உணர்ச்சிகளை நான் இன்று சந்திக்கும்படி செய்துவிட்டீர்கள். அருட்செல்வ முனிவருடைய நினைவு வரும்போது அதைத் தொடர்ந்த வேறு பல நினைவுகளும் என்னைச் சூழ்கின்றன. முள்ளில் வீழ்ந்த ஆடையை மேலே எடுக்க இயலாதது போல் இப்போது என்னைச் சூழ்ந்திருக்கும் பழம் பாசங்களிலிருந்து மனத்தை மேலே கொண்டு போக முடியாமல் தவிக்கிறேன் நான். இப்படி ஒரு நிலையை இவ்வளவு தொலைவு அழைத்துக் கொண்டு வந்து நீங்கள் எனக்கு ஏற்படுத்தியிருக்க வேண்டாம்.''

அவளுடைய வார்த்தைகளைக் கேட்டு என்ன மறுமொழி கூறுவதென்று சில கணங்கள் வளநாடுடையார் தயங்கினார்.

"பாசங்கள் உன்னை நெருக்குவதாய் நீயாக எண்ணிக் கலங்காதே, இளங்குமரா! உன்னுடைய பாசமும் இரக்கமும் எவை காரணமாகத் தோன்றி உன்னை வருத்துகின்றனவோ, அவற்றையே மீண்டும் காணப் போகிற வேளை நெருங்கிக் கொண் டிருக்கிறது. எவற்றுக்காக இத்தனை ஆண்டுகளாய் மனத்துக் குள்ளேயே துக்கம் கொண்டாடுகிறாயோ அவற்றை மீண்டும் மறு பிறவியாகக் காண்பதுபோல் எதிரே கண்டு இழந்த நம்பிக்கைகளை யெல்லாம் அடையப் போகிறாய்! நாளைக்குப் புதிய ஞாயிற்றின் ஒளி மட்டுமின்றி உன் வாழ்விலும் நம்பிக்கைகளின் ஒளி பரவப் போகிறது" என்று அவர் இளங்குமரனிடம் கூறிக் கொண்டிருந்தபோது அந்த வீதியின் மேற்புறத்து மாளிகையிலிருந்து காற்றில் நழுவினாற் போல ஒளிமிக்க முத்துமாலை ஒன்று அவன் தோளில் வந்து விழுந்தது. அவனும், வளநாடுடையாரும் மேலே நிமிர்ந்து பார்த்தார்கள்.

அப்படிப் பார்த்தபோது நாகதெய்வக் கோட்டத்தின் அருகேயிருந்த மிகப் பெரிய மாளிகை ஒன்றின் மாடத்திலிருந்து ஓர் இளைஞன் கீழே குனிந்து அவர்களையே கவனித்துக் கொண்டு நின்றான். அவனுடைய வலது கையில் சரம் சரமாக இன்னும் பல முத்து மாலைகள் இருந்தன. அவன் அந்த மாளிகையின் மதலை மாடமாகிய கொடுங்கையின் முன்புறம் விழா நாளுக்காகச் செய்யும் அலங்காரங்களைச் செய்து கொண்டிருந்தான் போலிருக்கிறது. மாடத்தின் முன்புறம் நல்ல நாட்களில் மங்கல அடையாளமாகக் கட்டப்படும் நாட்கொடிகளும் முத்துத் தாமங்களும் தொங்கின. அந்த மாடத்தையும் அதைப் போலவே அலங்கரிக்கப்பட்ட வேறு பல மாடங்கள் அடங்கிய அதன் முழுத் தோற்றத்தையும் பார்த்தால் அது ஏதோ பெரிய இரத்தின வாணிகருடைய இல்லம்போல விளங்கியது. முத்துமாலை கைநழுவி வீதியில் சென்று கொண்டிருந்த அவர்கள் தோளில் விழுந்து விட்டதற்காக அந்த இளைஞனும் தன்னைத் தானே கடிந்து கொள்கிறவனைப்போல முகத்தில் நாணம் தெரிய நின்றான். பின்பு விரைவாகக் கீழே இறங்கி வந்தான். நாக நாட்டு இளைஞர்களுக்கே



புரிய ஒளிபிக்க தோற்றமுடையவனு மிருந்தான் அவன். 'யாரோ புத்த பூர்ணிமை நாளுக்காகத் தனது மாளிகை மாடங்களை முத்துத் தோரணங்களால் அலங்காரம் செய்து கொண்டிருந்த போது கையிலிருந்து முத்துத்தோரணங்களில் ஒன்றைக் கீழே நழுவவிட்டு விட்டார்கள் போலிருக்கிறது' என்று எண்ணி அந்த முத்துச் சரத்தை அதற்குரியவனிடம் சேர்ப்பதற்காகத் தயங்கி நின்றான் இளங்குமரன். ஆனால் அப்போது அவன் நினையாத வேறொரு காரியத்தைச் செய்தார் வளநாடுடையார். மேலே மதிலோரத்திலிருந்து முத்து மாலையை வாங்கிக் கொண்டு போவதற்காகக் கீழிறங்கி வந்த இளைஞன் அருகில் வந்ததும்,— "குலபதி! நாங்கள் உள்ளே வரலாம் அல்லவா?" என்று சுபாவமாக அவனிடம் வினவினார் வளநாடுடையார்.

குலபதி என்று அழைக்கப்பட்ட அந்த அழகிய நாக இளைஞனுடைய முகத்தில் வளநாடுடையாரின் கேள்வியைச் செவியுற்ற பின் புன்முறுவல் மலர்ந்தது. அந்தப் புன்முறுவல் இன்னும் நன்றாக மலர்ந்து பெரு முறுவலான முகபாவத்துடன் இளங்குமரனையும் அவரையும் நோக்கிக் கைகூப்பினான் அவன்.

"நன்றாக வரலாம் ஐயா! ஒவ்வொரு கணமும் உங்களுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறோம்" என்று மறுமொழி கூறினான் குலபதி என்று கூப்பிடப்பட்ட அழகன்.

"இதோ உங்களுடைய முத்துமாலை" என்று இளங்குமரன் அவனிடம் தன் மேல் நழுவி விழுந்த முத்துமாலையைத் திருப்பிக் கொடுக்க முற்பட்டபோது, "அந்த மாலை இனி மேல் உங்களுடையதுதான். எப்போது உங்கள் தோளில் விழுந்து விட்டதோ அப்புறம் உங்களுக்குரியதுதானே?" என்று சிரித்தபடி மறுத்துவிட்டுக் குலபதி அவர்களை அந்த மாளிகைக்குள்ளே அழைத்துக் கொண்டு போனான். (தொடரும்)

## காங்கிரஸ் ஆட்சியில்......

காங்கிரஸ் சர்க்காரின் வர்த்தகக் கார்ப்பரேஷனைப் பார்க்கும் போது, முன்பு வெள்ளையன் வர்த்தகம் செய்வதாகச் சொல்லிக் கொண்டு நாட்டைத் தனக்கு அடிமைப்படுத்திக் கொண்டானே அதுதான் நினைவு வருகிறது.

தொழிலதிபர்கள் லாப நஷ்டம் பார்த்து ஏற்றுமதி இறக்குமதி செய்வதெல்லாம் இன்று இயலாத காரியம். சர்க்கார் தேர்ந்தெடுக்கும் நாடுகளிலிருந்துதான் தரக்குறைவான பொருளாக இருந்தாலும், அதிக விலையாக இருந்தாலும் அவர்கள் சரக்குகளை இறக்குமதி செய்து கொள்ள வேண்டும். அதேபோல் நம் பொருட்களையும் நல்ல லாபம் கிடைக்கும் நாடுகளில்அன்றி சர்க்கார் குறிப்பிடும் நாடுகளுக்குத்தான் அவர்கள் ஏற்றுமதி செய்ய முடியும். கம்யூனிஸ நாடுகள் தவிர இதர நாடுகள் சர்க்கார் தலையீடின்றி நேரடியாக நம் தொழிலதிபர்களுடன் வியாபாரம் செய்வதையே விரும்புகின்றன. எனினும் காங்கிரஸ் சர்க்காரானது ஏற்றுமதி — இறக்குமதி வியாபாரத்தைத் தனது பூரண ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்கிறது. அதன் அதிகாரிகளின் தஸ்தாவேஜுக் குவியல்களை ஒரு ஏற்றுமதி அல்லது இறக்குமதி ஆர்டர் கடப்பதற்குள் குறிப்பிட்ட பண்டங்களே மார்க்கெட்டிலிருந்து மறைந்து போய் விடும்!

காலதாமதமும், விலை உயர்வும், லஞ்ச ஊழலும்தான் வர்த்தகக் கார்ப்பரேஷன் அளித்துள்ள பரிசுகள். இவ்வளவு இலட்சணமான ஆட்சியில் வியாபாரம் நடப்பதால்தான் 1958-ல் இறக்குமதியை விட 290 கோடி ரூபாய் குறைவாக ஏற்றுமதி செய்த நாம் 1960-ம் ஆண்டு 400 கோடி ரூபாய் குறைவாக ஏற்றுமதி செய்திருக்கிறோம். இந்த ரீதியில் சென்றால் நம் அந்நிய செலாவணி பாக்கியை என்றுதான் அடைக்கப் போகிறோம்?

நாம் எந்தப் பண்டங்களை ஏற்றுமதி செய்வதால் லாபம் கிடைக்கும் என்பது பற்றிக் காங்கிரஸ் சர்க்காருக்குக் கவலையே கிடையாது. தேயிலைபோன்ற பண்டங்களில் நாம் கணிசமாக ஏற்றுமதி செய்யலாம். ஆனால் அதற்கு கலால் வரியை உயர்த்தி முன்பு 79 கோடி ரூபாய் மதிப்புக்குச் செய்த ஏற்றுமதியை இன்று 69 கோடியாகக் குறைத்திருக்கிறது அரசாங்கம். அதே சமயம் உள்நாட்டுச் சர்க்கரைத் தேவையைப் புறக்கணித்து 700 ரூபாய்க்கு உற்பத்தியாகும் ஒரு டன் சர்க்கரையை 400 ரூபாய்க்கு ஏற்றுமதி செய்கிறது. அதாவது நூறு ரூபாய் அடக்க விலையாகும் ஒரு சரக்கை 57 ரூபாய்க்கு விற்கிறது. இம்மாதிரி ஐந்து லட்சம் டன் சர்க்கரை விற்றுப் பதினைந்து கோடி ரூபாய் நஷ்டப்படப் போகிறது. நஷ்டத்தைத் தாங்குவது பொது மக்கள் தாம். ஏனென்றால் உள்நாட்டில் சர்க்கரை விலையை உயர்த்தித்தான் இந்த நஷ்டத்தைச் சர்க்கார் சரிகட்டப் போகிறது.

சர்க்காரின் தாறுமாறான வர்த்தகக் கொள்கைக்குக் காரணம் இதுதான். சிலருக்குச் சலுகைகள் வழங்குவதன்மூலம் அவர்களைக் காங்கிரஸின் கைப்பாவைகளாக ஆட்டி வைக்க முடிகிறது; மற்றவர்களுடைய நியாயமான உரிமைகளையும் மறுப்பதற்குத் தனக்குச் சக்தி இருக்கிறது என்பதைக் காட்டுவதால் அவர்களும் காங்கிரஸை அண்டி வாழுமாறு செய்ய முடிகிறது.

சென்னையில் சிறப்புமிக்க சான்றோர் பலருக்குச் சிலை யெடுத்துப் போற்றியிருக்கிறார்கள் நம் மக்கள். இந்த இதழிலிருந்து ஆரம்பமாகும் இந்த வரலாற்றுத் தொடருக்கு இது ஒரு முன்னுரையாகவும் அமைகிறது.

# சிறப்பு மிக்க சான்றோர்கள்



## டாக்டர் குருசாமி முதலியார்

சென்னை நகரம் நாளுக்கு நாள் அளவில் வளர்ந்து கொண்டு வருவதே போன்று, அதன் ஜனத்தொகையும் வளர்ந்து வருகிறது. ஏறத்தாழப் பதினெட்டு லட்சம் ஜனங்கள் சென்னை நகரில் நடமாடுகிறார்கள். எங்கும், ஜனசந்தடி, பரபரப்பு, நடையும் ஓட்டமுமாக ஓர் அவசரமான தோற்றத்தைக் காண்கிறோம்; நடமாட்டம் இவ்வளவு அதிகரித்த நிலைமையில், நகரத்தின் சில இடங்களில் போவோர், வருவோர்களை யெல்லாம் மௌனமாகப் பார்த்தபடி, ஆங்காங்கு சில பெரியோர்கள் சிலா ரூபத்தில் தோற்றமளிக்கும் காட்சியைக் காணலாம். இவர்களைத் தாண்டிச் செல்லும் போது, நம்மை யறியாமலே ஒரு கணம் இவர்களிடம் வசப்பட்டு மரியாதை செலுத்துவதுண்டு. இந்த மன உணர்வு சென்னைவாசிகளில் எல்லோருக்குமே ஏற்பட்டிருக்கும் என்பது நிச்சயம்.

சிலை உருவில் தோற்றமளிக்கும் இந்தச் சான்றோர் ஆண்டாண்டுகளாக வாழ்ந்து கொண்டிருக்கப் போகிற பெரியோர்களே. இவர்களிலே நமது தரும முறைகளில் பூரணமாக நம்பிக்கைவைத்து, முருகக் கடவுளுக்குத் தம்மை அர்ப்பணம் செய்து கொண்டு எளிய பக்தராக வாழ்ந்த ஒரு வைத்திய மேதை காலஞ்சென்ற டாக்டர் திரு எம். ஆர். குருசாமி முதலியார் அவர்கள்.

டாக்டர் அவர்களின் உருவச் சிலை இம் மாதம் 18-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை சென்னை சர்வகலாசாலை துணைவேந்தர் டாக்டர் ஏ. லக்ஷ்மணசுவாமி முதலியார் அவர்களால் திறந்து வைக்கப்படுகிறது. இந்தச் சிலை அமைக்கவும், டாக்டர் குருசாமி முதலியார் அவர்களின் பெயரால் இன்னும் சில ஞாபகார்த்தப் பணிகளை நிறைவேற்றவும், அமைச்சர் திரு பக்தவத்சலம் தலைமையில், திரு கே. வேங்கடசாமிநாயுடு பி. ஏ., பி. எல். டாக்டர் பி. எம். சுந்தரவதனன் இவர்களைக் காரியதரிசிகளாகக் கொண்டு 'மக்கள் கமிட்டி' ஒன்று அமைக்கப்பட்டது. பொதுமக்கள் அளித்த நன்கொடைகளைக் கொண்டு உருவாகியுள்ள இந்தச் சிலைத் திறப்பு விழாவும், இதர நற்பணிகளும் ஆரம்பமாகியிருக்கின்றன.

டாக்டர் குருசாமி முதலியார் அவர்கள் மைசூர் ராஜ்யத்திலுள்ள ஸ்ரீரங்கப்பட்டினத்திலும் பிறகு பங்களூரிலுமாகக் கல்வி பயின்றார். அந்நாளில் மைசூர் சமஸ்தானம் திறமை மாணவர்களுக்குச் செய்து வந்த உதவிகள் கொஞ்சநஞ்சமல்ல. அவ்விதம் இடைக்

அப்பழுக்கற்ற உபகார சிந்தையுடன், டாக்டர் முதலியார் அவர்கள் சென்னை வைத்தியக் கல்லூரியில் சேர்ந்தார். எம். பி; ஸி. எம். பட்டம் பெற்றதோடு அறுவை வைத்தியத்துக்கான தேர்ச்சிக்காக, 'ஜிப்பர் ரீட்' தங்கப் பதக்கமும் பரிசு பெற்றார். மைசூர் சமஸ்தானத்தில் சில வருடங்கள் சேவை செய்துவிட்டு, பின் சென்னையில் வைத்தியத் துறையில் பதவி ஏற்றார். சென்னையில் அவர் அடையாத பெரும் பதவிகள் இருபது ஆண்டுசேவையில் ஒன்றும் மீதமில்லையென்று கூறலாம். ஆங்கிலேயர்களுக்காகவே ஒதுக்கப்பட்ட பல பதவிகளில் அமர்ந்த முதல் இந்தியர் என்ற புகழை எய்தியவர் டாக்டர் அவர்கள். மாணவர்களுக்குச் சிறந்ததோர் ஆசிரியராகவும் விளங்கிப் போதனை முறையில் பல முன்னேற்றங்களை வகுத்தார். பல முறை மேனாடுகளுக்குச் சென்று அங்கு அமுலுக்கு வந்திருந்த நவீன வைத்திய சித்தாந்தங்களை அறிந்து வந்து, இங்கு அவற்றையும் உபயோகிக்கும்படி செய்தார்.

இந்திய வைத்திய முறை வளர்ச்சிக்காகப் பாடுபடுவது மேனாட்டு வைத்திய முறை பயின்றவர்களிடம் எளிதில் காண முடியாததோர் அதிசயமாகும். டாக்டர் முதலியார் அவர்கள் அப்பேர்ப்பட்ட ஓர் அரிய மேதையாகவே விளங்கினார். இந்திய வைத்தியக் கல்லூரியின் வளர்ச்சிக்காகவும், இந்திய வைத்திய சாஸ்திரம் பரவ வேண்டும் என்பதற்காகவும் அவர் ஏற்றுக் கொண்ட முயற்சிகள் பலப்பல. இதில் அவர் நடத்த வேண்டிய போராட்டங்கள் பல இருந்தன. இந்தப் போராட்டங்களில் அவருக்கு எதிராக நின்ற அரசாங்கக் கொள்கை முக்கியமாக விளங்கிற்று. கடைசியில் அக் கொள்கைக்கும் வைத்தியம் செய்து அதைக் குணமாக்கி விட்டார் டாக்டர் அவர்கள்!

டாக்டர் முதலியார் அவர்களின் அறப் பணிகளைப் பற்றி எவ்வளவு விவரித்து எழுதினாலும் அது குறைவானதாகவே காணப்படும். ஏழை எளிய குழந்தைகளின் கல்விக்காக அவர் தமது செல்வத்தில் பெரும் பகுதியைச் செலவிட்டு வந்தார். அதன் பயனாக வளர்ந்து விளங்கும் கல்வி ஸ்தாபனங்களில் ஒன்றுதான், சென்னையிலுள்ள தொண்டை மண்டலம் உயர்நிலைப் பள்ளி. பள்ளிக்கு வரும் ஏழைப் பிள்ளைகளுக்கு மதிய உணவு அளிக்கும் திட்டம் முதன் முதலில் இந்தப் பள்ளியில் டாக்டர் முதலியார் அவர்கள் யோசனையின் பேரில் ஆரம்பமாயிற்று. திரு முதலியார் திருத்தணியிலும், பழனியிலும் நிறைவேற்றி வைத்த தெய்வப் பணிகள் கணக்கற்றவை.

ஏழை என்றும் செல்வந்தர் என்றும் வித்தியாசம் பாராமல் பிணிவாய்ப்பட்டு வருவோர்களிடம் அவர் செலுத்தி வந்த பரிவும், அன்பும் பிரசித்தமானதாகும். அவரிடம் வைத்தியத்துக்கு வருபவர்கள் தங்களால் இயன்ற தொகையை ஓர் உண்டியில் போட்டாலே போதும். யார் எவ்வளவு போடுகிறார்கள் என்பதோ, போட்டார்களா இல்லையா என்பதோ அவருக்குத் தெரியாது. மனித உடலனைத்தும் கடவுளின் கோயிலாகக் கருதி, அவர்களுக்குப் பணி செய்வதையும் முருகனுக்கான பணியாகவே கருதி வந்தார்கள்; திரு முதலியார் அவர்களை நாடிச் சென்றதால், பிணிக்கு இரையாகாமல் உயிர் பெற்ற தனி மனிதர்கள், குடும்பங்கள் ஆயிரம் ஆயிரம் ஆகும். நிறைந்த செல்வமும், வருவாயும் பெற்ற போதிலும், நியமமான வாழ்க்கையில் எளிய முறையில் வாழ்ந்து வந்தார். தான், திறமை, மட்டுமல்லாது சோதிட சாஸ்திரத்திலும் நம்பிக்கையுள்ளவர் டாக்டர் முதலியார் அவர்கள். சில கடினமான நோய்களுக்கு அவ்விதம் வேளை, கிரகம் முதலியவைகளை அனுசரித்தே வைத்தியம்செய்வது, அவரது தனிச் சிறப்பு இயல்பாகும். சென்னை நகரில் என்றும் நிலைத்து வாழும் டாக்டர் அவர்களின் உருவச் சிலையிலே அவருடைய அன்பும், திறமையும் என்றும் ஒளி வீசி வரும் என்பது திண்ணம்.

—கதி

பாரதி பாடல்களைப் பாடிப்பாடி மதுரை மாவட்டத்தில் தேசபக்திக் கனலை மூட்டியவரும், தமது மனைவியோடு கதர்ப் பிரசாரம் செய்து காந்தீயத்தைப் பரப்பியவருமான



ஸ்ரீ ரா. ஸ்ரீநிவாச வரத அய்யங்கார் அவர்கள் இன்று பாரதியாரும், காந்திஜியும், தம் முதல் மனைவியும் வாழும் அமரருலகுக்குச் சென்று விட்டார். வீர புருஷர் சுப்பிரமணிய சிவாவின் இடம் விடுதலை வேள்விக்குத் தீட்சை பெற்ற ஸ்ரீ ஸ்ரீநிவாச வரத அய்யங்காரவர்கள், வ. வே. சு. அய்யர், வ. உ. சிதம்பரனார், பாரதியார் ஆகியவர்களின் ஆசிகளை வகித்தவர். ஹோம் ரூல் இயக்கம், ஒத்துழையாமை இவற்றில் கலந்து கொண்ட ஸ்ரீ அய்யங்கார் காந்திஜியின் அறைகூவலுக்கு அடிபணிந்து பலமுறை சிறை புகுந்திருக்கிறார். சுயநலம் என்பதறியாது நாட்டு விடுதலைக்காக உழைத்த உத்தம ஜீவன் அவர். அவரது நாவன்மையும் அந்த நாளில் பெரும் புகழ் பெற்றிருந்தது.

இந்த உண்மையான காந்தியவாதி சுதந்திர இந்தியாவில் எந்தவிதமான அந்தஸ்தையோ, செல்வத்தையோ நாடவுமில்லை; அவை அவருக்கு அளிக்கப்படவுமில்லை. இறுதி வரை எளிமையாகவே வாழ்ந்து மறைந்தார் அவர். அவரது இளைய மனைவிக்கும், மக்களுக்கும் நம் அனுதாபங்கள்.

திரைப்பட
ரசிகர்களுக்கு
ஒரு
நற்செய்தி!

தேவி பிலிம்ஸாரின்
மகத்தான டெக்னிக் கலர் தயாரிப்பான
**கொஞ்சும் சலங்கை**
தென்னிந்திய பிலிம் வர்த்தக சபையினரால்
**1962 பெர்லின்** திரைப்பட விழாவில்
காட்டப்படுவதற்காக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்ள மகிழ்ச்சி அடைகிறோம். தமிழ் நாட்டிற்குக் கிடைத்த இந்தப் பெருமையை ரசிகப் பெருமக்களோடு பகிர்ந்து கொள்ளும் நேரத்தில், எங்கள் முதல் டெக்னிக் கலர் தமிழ்ச்சித்திரமான கொஞ்சும் சலங்கைக்கு அமோகமான வரவேற்பு அளித்து வரும் தமிழ்மக்களுக்கு எங்கள் உளங்கனிந்த நன்றி!

தேவி பிலிம்ஸ்.



**தேவி பிலிம்ஸ்** அளிக்கும்

# கொஞ்சும் சலங்கை

**M.V.ராமன்**



சென்னை **சித்ரா • கிரௌன்**
**மேகலா**
(புரசைவாக்கம்)
மற்றும் தமிழ்நாடு,
மைசூர், கேரளா.

**தேவி பிலிம்ஸ்** வெளியீடு

# அமரகவிக்கு அஞ்சலி

"காணி நிலத்திடையே — ஓர் மாளிகை
கட்டித் தர வேண்டும்"

என்று பராசக்தியை இறைஞ்சினார் மகா கவி பாரதியார். அந்தப் பேற்றை நன வில் காணவில்லை அவர். ஆனால் அவர் நினைவைப் போற்றுவதற்காகப் புதுவை யில் அவர் வசித்து வந்த இல்லத்தை நாட்டுக்காகப் பெறும் பேற்றைப் புதுச் சேரி அரசினர் நமக்கு வழங்க முன்வந் திருக்கிறார்கள்.

ஓர் அரசாங்கத்துக்குக் கவிஞர்களைத் தக்கபடி கௌரவிக்கத் தெரிந்து விட்டது என்ற எண்ணத்தில் பூரிப்படைகிறோம். திருவல்லிக்கேணியில் அமரகவி பாரதி யார் வாழ்ந்து வந்த இல்லத்தைத் தமிழக அரசாங்கம் வாங்குவதற்கு இது ஒரு முன்னோடியாக அமையவேண்டு மென விரும்புகிறோம்.

புதுவையின் பழைய பிரெஞ்சு சர்க் காரும் சரி, இன்றைய சர்க்காரும் சரி இந்தத் தேச கவிக்கு அஞ்சலி செலுத்து வதில் எப்போதுமே முன்னணியில் இருந் திருக்கின்றன. பாரதி தினத்தன்று கல்வி நிலையங்களுக்கு விடுமுறை அளிப்பதற் கும், புதுச்சேரியின் பெரிய கடைவீதிக் குப் பாரதியாரின் பெயரைச் சூட்டவும் பழைய அரசாங்கம் இசைந்தது குறிப் பிட வேண்டிய விஷயம்.

பதினோராண்டுகள் புதுச்சேரியில் வாழ்ந்து நல்ல தமிழால் நாட்டுப்பற் றைத் தழைத்தோங்கச் செய்த பாரதி யார் இன்று சர்க்கார் வாங்க உத்தேசித் துள்ள வீட்டில்தான் தேசத்தின் நாலு பக்கங்களிலிருந்தும் வந்த தலைவர்களுட னும் தொண்டர்களுடனும் உரையாடி யிருக்கிறார். ஆங்கில அரசாங்க சி.ஐ.டி. களின் இடையறாத கண்காணிப்புக்கு ஆளாகி வந்த இந்த வீடு இன்று சர்க்கா ரின் உடைமையாகவே ஆகவிருக்கிறது. பாட்டுக்கொரு புலவர் நாட்டுக்கெல்லாம் ஒரு சொத்தானது போல் அவர் வாழ்ந்த இடமும் நாட்டுச் சொத்தாகிறது. இங்கு நூல் நிலையம் ஒன்று நிறுவ யோசித்து வருகிறார்களாம்.

அதோடு ஆண்டுதோறும் இங்கு பாரதி விழா எடுப்பித்து ஸ்ட்ராட்பர்ட்—ஆன்—ஏவனில் ஷேக்ஸ்பியருக்கு அஞ்சலி செலுத்துவதுபோல் தேசியப் பண்டிகை சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென விரும்புகிறோம்.

# சுதந்திர நிதி

[4—2—62 லிருந்து 10—2—62 வரை]

| பெயர் | ரூ. | பை. |
|---|---|---|
| சுந்தரம் | 2 | 00 |
| ஏ. எஸ். சுப்புசாமி அய்யர் | 20 | 00 |
| கே. ஆர். நாராயணன் | 2 | 00 |
| ஆர். எஸ். சேஷாத்திரி | 25 | 00 |
| கே. சாம்பசிவ அய்யர் | 5 | 00 |
| ஏ. வெங்கடராம அய்யர் | 25 | 00 |
| ஓர் அனுதாபி | 10 | 00 |
| ஓர் அன்பர் | 5 | 00 |
| என். டி. குஞ்சப்பா | 1800 | 00 |
| ந. இ. சுந்தரேசன் | 2 | 00 |
| கே. எஸ். ராமநாதன் | 10 | 00 |
| எஸ். கோபாலய்யர் | 25 | 00 |
| வி. கிருஷ்ணமூர்த்தி | 5 | 00 |
| ஸ்ரீஹரி | 251 | 00 |
| கே. ரங்கநாதன் | 1 | 00 |
| பி. என். ரங்கசாமி அய்யங்கார் | 10 | 00 |
| என். ரத்தினசாமி | 15 | 00 |
| பி. இ. ராமகிருஷ்ணபட்டா | 25 | 00 |
| எம். வி. சிதம்பரம் | 5 | 00 |
| பி. எஸ். சந்திரசேகரன் | 11 | 00 |
| ஆர்எம். எஸ். பாலா | 1 | 00 |
| கே. வி. அலமேலு ராமகிருஷ்ண | 1 | 00 |
| பி. சாமிநாத அய்யர் | 10 | 00 |
| டாக்டர் கே. ராமசந்திரன் | 10 | 00 |
| ஆர். சீனிவாசன் | 10 | 00 |
| எஸ். ஆர். சுப்பிரமணியம், | | |
| பி. ஆர். கிருஷ்ணன், | | |
| வி. நரசிம்ம அய்யங்கார், | | |
| ஆர். ராமசாமி அய்யங்கார், | | |
| கே. எஸ். நுஜூர்த்தலம், | | |
| டி. எஸ். சந்திரன் | 31 | 40 |
| ராஜம்மாள் | 10 | 00 |
| ஜு. கே. பட் | 51 | 00 |
| எம். மாதவராவ் | 25 | 00 |
| பி. எஸ். துரைசாமி | 5 | 00 |
| கிருஷ்ணன் | 2 | 00 |
| எஸ். சாம்பமூர்த்தி | 5 | 00 |
| எஸ். பக்கிரிசாமி | 5 | 00 |
| 10-1-61லிருந்து 3-2-62வரை | 33538 | 02 |
| | 35958 | 42 |

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்கிறவர்கள் ஸ்ரீ ராஜாஜி c/o கல்கி காரியாலயம், சென்னை - 10 என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.

# கவுரவத்தை கொடுக்கக் கூடிய துணிகள் —

## டெட்டினுல் சலவை செய்யப்பட்டதே

- டெட்டினும் சலவை செய்யப்பட்ட துணிகள் பிரகாசமாகத் தோற்றமளிக்கும்.
  டெட்டின் சிறந்த சுத்திகரிப்புக் கலவை உங்களுடைய ஆடைகளைப் புத்தம்புதியதுபோல் பிரகாசிக்கச்செய்கிறது.
- டெட்டினும் சலவை செய்யப்பட்ட துணிகள் மிக வெண்மையாகத் தோற்றமளிக்கும்.
  டெட் ஆடைகளைச் சுத்தமாகவும், பிரகாசமாகவும் வெளுக்கும் சிறந்த பரிசுத்தகாரணி. டெட்டினுல் துவைக்கப்பட்ட துணிகளுடன் நீலத்தையோ அல்லது வெண்மையாக்கும் பொருளையோ சேர்க்கவேண்டிய தேவையில்லை. காரணம் கண்கவரும் வெண்மையைத்தரும் பொருள் டெட்டில் அடங்கியுள்ளது.
- டெட்டினுல் சலவை செய்தல் என்பது நவீன முறையில் சலவை செய்யப்படுவது என்பது பொருள்.
  வென்னீரிலும், மென்னீரிலும் டெட்டை உபயோகித்து நன்கு சலவை செய்யலாம். டெட் அபரிமிதமாக நுரை தருகிறது. காட்டன், ஸில்க், ரேயான், கம்பளி வெள்ளை அல்லது கலர்த்துணிகள்—எல்லாவிதமான ஆடைகளுக்கும் டெட்டைத் தாராளமாக உபயோகிக்கலாம்.




'டெட் வெண்மையாகவும் பளபளப்புடனும் சலவை செய்கிறது.

Sem 21 TAN

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்—3.



புதிதாகக் கட்டப்பட்ட அந்தப் பெரியபங்களாவை யாரோ வாங்கியிருப்பதாகச் சொன்னார்கள். சிங்கப்பூரில் பெரிய தனவந்தராம். சொத்துக்களைத் தன் ஏஜண்டுகளிடம் விட்டு விட்டுத் தன் தாயகத்தில் சில நாட்களாவது தங்கிப் போகலாம் என்று வருகிறாராம்.

முன் புறமும் பின் புறமும் ஒரே மாதிரியாக விளங்கிய பெரிய காரில் அவர் வந்திறங்கினார். அவர் பெயர் கனகரத்தினம் என்று சொல்லிக் கொண்டார்கள். கைவிரல்கள் எதிலும்— மோதிரம் இல்லாமல் இல்லை. உயர் ரகக் கைப் பிரம்பை லாவகமாக வீசிப் பெருமித நடை நடந்தார். அவர் முன் நெற்றியில் காணப்பட்ட நரைமயிர்கள் அவர் ஐம்பதாவது வயதை எட்டிப் பிடித்திருக்க வேண்டும் என்பதைத் தெளிவாக்கியது.

கூட எவருமே வரவில்லை — அவருடைய அந்தரங்கக் காரியதரிசி சோமு என்று அழைக்கப்பட்டவரைத் தவிர.

''மிஸ்டர் சோமு! மாலை விருந்துக்கு எ லாம் தயாரா?.....''

''ஆ, ரெடி ஸார்! நேரில் நானே எல்லா அழைப்புகளையும் கொடுத்து விட்டேன். ச யாக எட்டு மணிக்கு வருவதாகச் சொல் யிருக்கிறார்கள். ஹோட்டலிலும் ஏழு மணிக் எல்லாம் ரெடியாகி விடும்.....''

மாலை வந்தது. பங்களாவில் உள்ள விள குகள் அனைத்தும் ஏற்றப்பட்டன. ஹாலி நடுவில் பெரிய மேஜை ஒன்று போடப்பட் அதன் மேல் வெள்ளைத் துணி விரிக்கப்ப டிருந்தது. இரண்டு பக்கமும் இரண்டிரண் நாற்காலிகள். தலைமையில் உட்காரும்ப பெரியதோர் ஆசனம். எதிர்த்தாற் போ மற்றொன்று. ஆக மொத்தம் ஆறு நபர்க சாப்பிடலாம். ஹோட்டல் சிப்பந்திகள் த ராகக் காத்திருந்தனர்.

பழுப்பேறிய வேஷ்டியும், கசங்கி துப்பட்டாவையும் அணிந்த பெரியவர் ஒரு தள்ளாடியபடி உள்ளே நுழைந்தார். அ நடையும் தோற்றமும் பள்ளி ஆசிரிய யிருந்து ஓய்வு பெற்றவர் என்பதைக் கட்டிய கூறின.

''வர வேண்டும் ஐயா! வர வேண்டும் என்று கைகளைக் கூப்பியபடி வரவேற் கனகரத்தினம்.

உபாத்தியாயர் நிமிர்ந்து பார்த்தார்.



# பெரிய மனிதர்கள்

## அன்னம்

"என்னைத் தெரியவில்லையா, ஸார்! உள்ளே போய் உட்காருங்கள்... இதோ வந்துவிட்டேன்..."

ஜட்கா வண்டி ஒன்று வந்து நின்றது. கருப்புக் கோட்டு கழுத்தை இறுக்கிப் பிடிக்கத் தோளில் அநுயாசமாக வீசப்பட்ட விசிறிமடிப்பு அங்கவஸ்திரம் மின்னக் குலுங்கும்தொந்தியுடன் நுழைந்தார் ஒருவர். அவரும் வயதில் முன்னவரை ஒத்தவர்தான். ஆனால் செல்வத்தின் செழுமை அவர் உடலைத் தழுவி மூடியிருந்தது.

"தாங்கள்தான் கனகரத்தினமா?...உம்?... உங்கள் கடிதத்தைப் பார்த்து ஒன்றும் தெரியவில்லை. அந்த மட 'எஸ்டேட்' விஷயமாக இருக்குமோ என்று ....."

"ஆம். அதுவேதான். உள்ளே போங்கள். இன்னும் சில விருந்தினர் வர வேண்டியிருக்கிறது. நானும் இதோ வந்து விடுவேன்..."

செட்டியார் உள்ளே நுழைந்து சோபாவில் சாய்ந்து கொண்டார். உபாத்தியாயரைப் பார்த்ததும், "நீங்கள் எங்கே இப்படி?......" என்று ஆரம்பித்தார்.

"யார் இவர்? எங்கோ பார்த்த முகமாகத் தெரியவில்லை...?"

"பார்த்த மாதிரித்தான் தோன்றுகிறது."

இவர்கள் பேச்சைத் தொடர முடியாமல் பெரிய மோட்டார் ஒன்று வந்து நின்றது. அதைத் தொடர்ந்து சிறிய ஸ்கூட்டர் ஒன்றில் நவநாகரிக உடை அணிந்த ஒரு யுவன் வந்து இறங்கினான்.

காரிலிருந்து இறங்கிய திரையுலகத்தாரகை நளினகுமாரி தன் 'ஸ்டாக்' புன்னகை ஒன்றை வெளிப்படுத்தினாள்.

"வாருங்கள்" என்று வரவேற்றார் கனகரத்தினம் பற்கள் அனைத்தும் தெரிய.

"ஓ! நீங்கள் தானே மலேயாவில் என் சுற்றுப் பிரயாணத்துக்கு..."

"ஆமாம். நான்தான் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன்... அதைப்பற்றிக் கடிதம் எழுதியவன் கூட நான்தான்...."

"நான்தான் கடைசியாக வந்தேனா?.... ரொம்பவும் காக்க வைத்து விட்டேனா?..."

"அப்படி ஒன்றும் இல்லை..... உள்ளே செல்லுங்கள்!....."

காத்திருந்த யுவரிடம் கையைக் குலுக்கினார் கனகரத்தினம். யுவன் தன் சட்டைப் பையிலிருந்த ஒரு கார்டை எடுத்துக் காண்பித்தான்.

உடனே கனகரத்தினம் அவன் தோளின் மேல் கையைப்போட்டு அணைத்துச் சென்றார்.

மேஜையின் மேல் அழகான பூ ஜாடிகள் வைக்கப்பட்டிருந்தன.

"உட்காரலாமா?...." என்று கேட்டார் கடைசியில் வந்தவர்.

"நான் தயார்...!" என்று சொல்லி நவீன குமாரி இன்னிசைச் சிரிப்பு சிரித்தாள்.

"உம்!... நடக்கலாமே!..." என்று உத்தரவிட்டார் கனகரத்தினம். சோமு கண் ஜாடை காட்டினான்.

பேசுவதற்கு நேரம் இல்லாமல் ஒன்றன் பின் ஒன்றாகத் தின்பண்டங்கள் வந்தவண்ணம் இருந்தன. போதும் போதும் என்று சொல்லும்வரை சிப்பந்திகள் விடவில்லை.

விருந்து முடிந்தது. பீடாக்களும் சிகரெட்டுகளும் பரிமாறிக் கொள்ளப்பட்டன.

கனகரத்தினம் எழுந்தார்.

"அன்பர்களே! என் அழைப்புக்கிணங்கி என்னைக் கௌரவித்த உங்கள் எல்லோருக்கும் என் நன்றி. வள்ளுவர் பெருமான் சொல்லியிருக்கிறார். 'செவிக்குணவில்லாத போழ்து சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும்!' என்று... நான் முதலில் உங்கள் வயிற்றுக்குக் கொடுத்துவிட்டுத்தான் செவிக்குத் தருகிறேன். இது முன்பு கண்ட விருந்தை விடச் சுவையானது.

"பெரியவர்களே! அம்மணி! என்னை உங்களில் யாருக்காவது அடையாளம் தெரிகிறதா? தெரியாது!... வயதுக்கு மீறிய மூப்பு, நெற்றியிலும் முகத்திலும் ஓடிய சுருக்கங்கள் நான் யார் என்பதை உங்களுக்குத் தெரியப்படுத்தவில்லை. ஏன் உங்களைக் காத்திருக்க வைக்க வேண்டும்? ஓர் அப்பாவியை உங்களுக்குத் தெரிந்திருக்கும். அவன் பெயர் செல்வராஜ். பெயரில் தான் செல்வமும் அரசனும் ஆட்சி புரிந்தார்களே தவிர, சொந்த வாழ்க்கையில் அவன் ஏழை....

"புரிகிறதா நான் யார் என்று? என்பெயர் கனகரத்தினமல்ல. என் நண்பனின் பெயர் அது. இரவல் வாங்கிக்கொண்டேன். அது என் உடைமையாகிவிட்டது. ஏன் உங்கள் முகம் வெளிறுகிறது?... கைகள் ஏன் தாளம் போடுகின்றன? உதடுகள் துடிக்கின்றன? நான் சொல்வதைக் கேட்காமல் எவரும் இங்கிருந்து போக முடியாது. வாயிற்கதவுகள் தாளிடப்பட்டிருக்கின்றன. மிஸ்டர் செட்டியார், நன்றாகச் சாய்ந்து உட்காருங்கள்! உங்களுக்காகத் தனியாகப் பெரிய நாற்காலி போட்டிருக்கின்றேன்.....!

"கேளுங்கள் நண்பர்களே! கல்வி போதிக்கும் உபாத்தியாயர் அறநெறியைப் பற்றி விளக்கம் தரக்கூடிய இந்தத் தணிகாசலம் இருக்கிறாரே — அவர் பண்புடைய சீலர். அவருடைய வீட்டுக்கு எதிரிலிருந்த குடிசையில் நான் வசித்தேன். தந்தையைச் சிறு வயதில் இழந்த நான் தாயின் உழைப்பால் பெரியவனானேன். பள்ளி இறுதி வகுப்பு வரை என்னைக் கொணர்ந்து விட்டாள் அந்தப் புண்ணியவதி. பெரிய பரீட்சைக்குப் பணம் கட்ட வேண்டியவன் — வேறு வழியில்லாமல் என் தாயின் மங்கல நாணை அடகு வைத்துப் பதினைந்து ரூபாய்கள் திரட்டினேன். பணம் கட்டப் போகும் சமயம் என் தாய்க்கு வழக்கமாக வரும் ஆஸ்துமா வந்தது. கொடிய நோய் அது. என் விரோதிகளுக்கு — ஏன் உங்களுக்குக்கூட — அது வர வேண்டாம்! பகல் ஒரு மணிக்குள் பள்ளி சென்று பணம் கட்டுவேனா? துவண்டுவிழும் என் தாயாரைத் தாங்கிப் பிடித்துத் தேற்றுவேனா? ஓடினேன் தணிகாசலம் அவர்களிடம். கையிலிருந்த பணத்தைக் கொடுத்துப் பள்ளியில் கட்டச் சொன்னேன். பள்ளிக்கூடத்துக்கு நான் மறுபடியும் உடனே செல்ல முடியவில்லை. ஆமாம் — என் தாயார் என்னைத் தனியாகத் தவிக்கவிட்டு மறைந்து விட்டாள். ஒரு மாதம் சென்ற பின்னர் மனத்தைத் தேற்றிக் கொண்டு பள்ளி சென்றால், பரீட்சைக்கு அனுப்பப்பட்டவர் பட்டியலில் என் பெயர் இல்லை — காரணம் நான் பணம் கட்டவில்லையாம்!....

"தவித்தேன். விம்மும் நெஞ்சுடன் இவரைக் கேட்டேன். அலட்சியம் கொந்தளிக்க என்னைத் திருப்பிக் கேட்டார். 'எப்பொழுதடா கொடுத்தாய்?'' என்று. கதறிக்கதறிக் கண்ணீர் விட்டு அரற்றினேன்.

"'பொய் சொல்கிறான்' எனத் திட்டினார்கள். 'ஆசிரியர் மேல் பழி போடாதேடா, பாவி!' என்று உபதேசித்தார்கள். அன்று என் வார்த்தைகளை நம்புவார்கள் எவரும் இல்லை. இன்று நீங்கள் நம்புகிறீர்களா? இவர் முகத்தைப் பார்த்துச் சொல்லுங்கள்! நான் சொல்வது உண்மையா? உண்மைதானா?"

வெளிறிப் போன வாத்தியாரைத் தவிர மற்ற அனைவரும் தலையை ஆட்டினர்.

"பரீட்சைக்குச் செல்ல முடியவில்லை. வீட்டை விற்று ஏதாவது வியாபாரம் ஆரம்பிக்கலாம் என்று நினைத்தேன். ஆமாம். என் தாய் எனக்கு வைத்துவிட்டுப் போன சொத்து அது ஒன்றுதான்.....பக்கத்துத் தெருவில்— மாசிலாமணி செட்டியார் இருந்தார். உங்களுக்கு யார் என்று தெரியாதா? இதோ நாற்காலியில் சாய்ந்து கொண்டு பெருமூச்சு விடுகிறாரே — இவரேதான். என் தாய் இறக்கும் முன்னம் அவர் வீட்டிலே தான் வேலை செய்தாள். பற்று ஏதும் இல்லாத நிலையில் எனக்கு வழிகாட்டி அவரைத் தவிர வேறு எவருமே இல்லை. என் முடிவைச் சொன்னேன். .... ஆயிரத்தைந்நூறு ரூபாய் தருவதாகச் சொல்லித் தாமே வீட்டை வாங்கிக் கொள்வதாக முன் வந்தார். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல் ஆனந்தப் பட்டேன். பத்திரங்கள் பல எழுதினார்கள். என் கையெழுத்தை எதில் எல்லாமோ வாங்கினார்கள்.

"ஸப்-ரிஜிஸ்திரார் ஆபீஸில் பத்திரத்தைப் பதிவு செய்து விட்டுத் திரும்பினோம். என் கையில் மிகுந்த கருணையுடன் ஐந்து ரூபாய் நோட்டைத் திணித்த செட்டியார் 'போய் வருகிறாயா, தம்பி!' என்று அன்பு பொங்கக் கேட்டார். எனக்குச் சேர வேண்டிய தொகையைக் கேட்டேன் நான். பணம் வாங்கிக் கொண்டதற்காக நான் கையொப்பம் இட்டிருந்த ரசீது ஒன்று எனக்குக் காண்பிக்கப்பட்டது. ஆத்திரத்தில் மண்ணை வாரி இறைத்தேன். வேறு ஏதாவது பேசினால் காலை உடைப்பதாகச் சொல்லிக் கன்னத்தில் அறைந்து வீதியில் தள்ளினார்கள்...



பிரபல தொழிலதிபரும் நகரத்தார் சங்கத்தின் போஷகருமான திரு ஏ. எம். எம். முருகப்ப செட்டியார் அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா பள்ளத்தூரில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இந்த வைபவத்தில் நகரத்தார் சங்கத்தின் தலைவர் திரு கருமுத்து தியாகராஜ செட்டியார், திரு முருகப்ப செட்டியார் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தி கௌரவித்தார். நகரத்தார் சங்கத்தின் காரியதரிசி திரு எஸ். கே. தியாகராஜன் செட்டியார் சங்கத்தின் சார்பிலே வாழ்த்து மடல் வாசித்தளித்தார். இந்தக் குதூகல விழாவுக்குப் பல பிரபலஸ்தர்களும், தொழில் பிரமுகர்களும், நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர். திரு ஏ. எம். எம். முருகப்ப செட்டியார் அவர்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து தொழில் துறைக்கு அரிய சேவை செய்ய வேண்டும் என்று வாழ்த்துகிறோம்.

---

"அதிகம் சொல்ல விரும்பவில்லை. செட்டியார் மானஸ்தர். வேகமாகச் சுழலும் மின் விசிறி இரண்டு இருந்தும் எப்படி வியர்த்து விட்டிருக்கிறது, பாருங்கள்!"

இரண்டாவது விருந்தாளி தெப்பமாக நனைந்து போயிருந்தார். அவர் முகம் சோபை இன்றித் தவித்தது.

"பிச்சை யெடுத்து வயிறு வளர்த்தேன். ரயிலிலே, சந்தையிலே, பஸ் ஸ்டாண்டிலே!... மூட்டை தூக்கிக் காலத்தைத் தள்ளினேன். என் தாய் தன் ரத்தத்தைச் சிந்தி எனக்கு அளித்த காக கைகொடுக்கவில்லை. அப்பொழுது ஒரு நாள் — வண்டலூர் என நினைக்கிறேன் — பதினைந்து வயது இருக்கும் —வாளிப்பான உடல் கட்டு அமைந்த பெண் ஒருத்தியைக் காதைப் பிடித்துத் திருகி ரயிலிலிருந்து வெளியே தள்ளினார் டிக்கட் பரிசோதகர் ஒருவர். அவர் பிடியில் மான் போலத் தவித்த அவளை என் கைப்பணம் போட்டு டிக்கெட் எடுத்துக் காப்பாற்றினேன். அவளும் என்னைப் போன்ற அனாதை என்பதைத் தெரிந்து கொண்டேன். இருவருமாக வேலைசெய்தோம். கிடைத்த சிறு ஊதியத்தைப் பகிர்ந்துகொண்டோம். தனியாக ஒரு குடிசை போட்டுக் கொண்டு ஆனந்தமான-என் வாழ்க்கையில் நான் மறக்க முடியாத ஆனந்தகரமான— ஆண்டுகள் அந்த இரண்டும்... வாழ்க்கை துன்பம் நிறைந்தது மட்டுமல்ல; அனுபவிக்க வேண்டிய இன்பம் பல உண்டு என்பதை அவள் கற்றுக் கொடுத்தாள்....

"செம்பரம்பாக்கம் ஏரியைச் சுற்றி ஒரு படப்பிடிப்புக் கம்பெனி முகாமிட்டது. வில்லுறை வேடத்துக்குக் குறிப்பிடப்பட்டிருந்த பெண் ஒருத்தி வரவில்லை. டைரக்டர் — அது வள்ளியை — அதுதான் அவள் பெயர்.—பார்த்துக் கூப்பிட்டார். போக மறுத்தாள் என்னிடம் — பாவி நான்தான் தூண்டி விட்டேன். அவள் நடிப்பு நன்றாக அமைந்தது. எங்கள் இருவரையும் மீண்டும் சென்னைக்கு அழைத்துப் போனார்கள். பிறகு....பிறகு....அவள் அந்தஸ்து உயர்ந்தது. அவள் காதலனாக.. இருந்த நான் வீட்டுக் காவலனாக மாறினேன். ஒரு நாள் தன் எஜமானியின் உத்தரவுப்படி வாயிலில் நின்ற கூர்க்கா என்னை வீதியில் பிடித்துத் தள்ளினான். அவளுடன் வாழ்ந்த சில நாட்களுக்காக எனக்குக் கைக்கூலி நூறு ரூபாயைக் கொடுத்தாள். நான் சொல்வது சரிதானே!... வள்ளி!.. ஓ!..தங்கள் பெயர் இப்போது நளினகுமாரி அல்லவா?..பாருங்கள் இப்போது அவர்கள் முக பாவத்தை...."

"ஸார்! அந்த மனிதர் யார்? அவரைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே?..." என்று கேட்டான் சோமு!

"அவரா? இந்த ஊர் பிரபல பத்திரிகையின் முக்கிய நிருபர். மாலையிட்டு வரவேற்றுக் கல்விக்குப் பெரும் சேவை செய்ததாகத் தணிகாசலத்துக்கு அறுபதாம் ஆண்டு விழா பெருமையாக நடத்தினார்களே — கலைக்கும் சமூகத்துக்கும் சேவை செய்து கொண்டிருப்பதாய்ப் பறைசாற்றும் இந்தப் பண்பு கெட்டவனைக் காண ஓடினார்களே — அவர்களுக்கு, அந்த மக்களுக்கு இவர்களைப் பற்றிய முழு விவரங்களையும் அறிவிக்கட்டும் என்றுதான் அழைத்தேன். காத்திருக்கும் ஹோட்டல் சிப்பந்திகள் தங்கள் நண்பர்களிடம் கூறுவார்கள். இன்னும் ஒரு மாதத்தில் ஊரே இவர்களைக் காறித் துப்பட்டும் என்றுதான் இந்த விருந்தை ஆரம்பித்தேன்.

"மிஸ்டர் செல்வராஜ்! உங்கள் வாழ்க்கை மிகவும் சுவாரசியமாக இருக்கிறதே. அப்புறம்?..." என்று ஆரம்பித்தார் நிருபர்.

"வள்ளி எனக்குக் கொடுத்த நூறு ரூபாய்களை வைத்துக் கொண்டு வியாபாரம் ஆரம்பித்தேன். அதிருஷ்டம் என்னை நாடி வந்தது.




## "உற்சாகமும் குளிர்ச்சியும் அளிக்கிறது"

என்கிறார், சினிமா புது முகம் விஜயா. மிகுந்த நறுமணம், அபரிமிதமான நுரை, வேப்பெண்ணெயின் உயர்ந்த குணங்கள் கலந்த லிம்டா உங்களுக்கும், உங்களுடைய குடும்பத்திற்கும் உகந்த சோப்பாகும்.

**வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ், கோழிக்கோடு**

இப்பொழுது சிங்கப்பூர் கம்பெனிகளில் நான் ஒரு பாகஸ்தர்; பினாங்கு ரப்பர் எஸ்டேட் இரண்டுக்கு அதிபதி; மலாக்கா பிரம்புத் தொழிற்சாலையில் எனக்குக் கூட்டு உண்டு. தேயிலையில் இலங்கையுடன் நெருங்கிய தொடர்பு உண்டு.''

''ஸார்!'' என்று ஆரம்பித்தான் சோமு. தலையை நிமிர்த்தி என்னவென்று வினவினார் செல்வராஜ்.

''உங்கள் பரிதாபமான கதையைக் கேட்டவுடன், என் சுய சரிதையையும் சொல்லவேண்டும் எனத் தோன்றுகிறது. இவர்கள் தான் அதில் சம்பந்தப்பட்டவர்கள் என்று இப்பொழுதுதான் தெரிந்து கொண்டேன்?''

மூவரும் திகைத்தனர்.

''சொல், சோமு! உன் விடமும் விளையாடியிருக்கிறார்களா?'' என்று ஆர்ப்பரித்தார் செல்வராஜ்.





பலூனைப் பறக்க விட்டுப்
பாரை ஏய்க்கும் கட்சி
பணங் காட்டிக் குணங்கெடுக்கும்
பதவிப் பித்துக் கட்சி

''இதற்கும் நம் விஷயத்துக்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டார் செல்வராஜ், நெற்றியில் துளித்த வியர்வையை ஒற்றியபடி.

''சொல்லட்டும், கேட்போம்!'' என்று சாய்ந்து கொண்டார் நிருபர்.

''மகன் படித்துப் பெரியவனானான். நல்ல உத்தியோகமும் கிடைத்தது அவனுக்கு. 'கண்டு விட்டேனடா பாவியை! பழிக்குப் பழி!' என்று உறுமினார் தந்தை ஒரு நாள்! மகன் சட்டத்தின் உதவியை நாடச் சொன்னான். பெற்றவர் கேட்கவில்லை. பாய்ந்து சென்றவர் திரும்பவில்லை. அவர் உடலில் மூன்று தோட்டாக்கள் பாய்ந்து சிங்கப்பூர் கடற்கரை ஓரத்தில் ஒதுங்கியது.

''தந்தை சொன்ன அடையாளங்களை வைத்துக்கொண்டு தனயன் தேடினான். அலைந்தான். இன்று கண்டும் பிடித்து விட்டான். சில' சந்தேகங்கள் இருந்தன. பாவியின் வாழ்க்கைச் சரித்தரத்தை அவன் வாய் மூலமாகவே இன்று கேட்டான். அவன் பிறவியின் பயனை அடைந்து விட்டான். தன் பெற்றோர் கடனை அடைத்து விடுவான்.''

''உங்களைப் போல் இவர்களால் அலைக்கழிக்கப்பட்ட ஒருவன் தன் நண்பனைச் சரணடைந்தான். பால்ய வயதில் பள்ளித் தோழனை அவனுக்குத் தன்னால் இயன்ற உதவியைச் செய்தான். நண்பன் தன் குடும்பத்துடன் சிங்கப்பூர் செல்லவிருந்த சமயம் அது. ஒரு தினம் தன் நண்பன் வீட்டில் இல்லாத சமயம் அவன் தோழன் வந்திருக்கிறான். நண்பன் தன் மகனுடன் வெற்றூர் சென்றிருந்த இரவு திரும்ப முடியவில்லை. கொண்டவனின் நண்பனை ஆதரவுடன் உபசரித்தாள் அவன் மனைவி. உண்ண உணவிட்டாள். படுக்க இடம் தந்தாள். பாதகனுக்குப் பசி தீரவில்லை. தாகம் தணியவில்லை....''

''நன்றாகக் கதை சொல்கிறாயே!.....'' என்றார் செல்வராஜ்.

''பெரியவர்களே, கேளுங்கள். ஆசிரியர் வறுமைக் கொடுமையால் பணத்தை எடுத்திருக்கலாம். செட்டியார் இதையும் ஒரு வியாபாரமாகக் கருதியிருக்கலாம். நடிகை தன் முன்னாள் துணைவனுக்குப் பச்சாத்தாபப்பட்டு வேறு வழியில்லாமல் அவனை விரட்டியிருக்கலாம்.. ஆனால் இந்தத் துரோகியோ — சொல்லவே கூசுகிறது. வீடு திரும்பிய நண்பர் மாடத்து உத்தரத்திலிருந்து கயிற்றின் நுனியில் தொங்கும் தன் இளம் மனைவியைக் கண்டார். இரவு அங்கு நடந்த அந்தப் பயங்கரத்தைத் தன் இரத்தக் கண்ணீருடன் சேர்த்து வடித்திருந்த அந்தக் கடிதத்தைப் படித்தார். தான் மலேயாவுக்குப் போக வாங்கியிருந்த பயணச் சீட்டுகள் களவு போயிருப்பதை — உணர்ந்தார். பழி வாங்கும் துடிப்புடன் எப்படியோ பாடுபட்டு மலேயாவுக்கு மகனுடன் புறப்பட்டு விட்டார்...''

சோமுவின் கையில் ரிவால்வர் மின்னியது. பரபரப்புடன் அனைவரும் எழுந்தனர்.

''செல்வராஜ் அவர்களே! 'என் நண்பரின் பெயர் கனகரத்தினம்' என்று சொன்னீர்களே. அந்தக் கனகரத்தினத்தின் மகன் சோமசுந்தரம் நான்தான். என் குடியைக்கெடுத்த கயவனே! என் தந்தை உடலில் நீர் செலுத்திய அந்த மூன்று தோட்டாக்கள்.. உமது துப்பாக்கி தான் இது! உம்மைக் கீழே சாய்க்க வெகு நேரமாகாது. ஆயினும் சிங்கப்பூர் ஸி. ஐ. டி. இலாகாவைச் சேர்ந்த நான் வேறு சில குற்றங்களுக்காக உம்மைக் கண்காணிக்கக் காரியதரிசியாக மாறினேன். என் நோக்கமும் கைகூடும் என்று நான் எண்ணவில்லை.''

இத்தனை நேரம் எக்காளமிட்டுக் கூத்தாடிய செல்வராஜின் முகம் இதைக் கேட்டுப் பயங்கரமாக மாறியது. ஆனந்தமும் குதூகலமும் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டன. அதற்குப் பதில் அவருக்குக் குரோதமே பொங்கி வெழுந்தது. தம் குற்றத்தை வெளிப்படையாகக் கூறினும் யாருக்குத்தான் பொறுத்துக் கொள்ள முடியும்?

செல்வராஜ் பாய்ந்து சோமுவின் ரிவால்வரைத் தட்டி விட்டார். குனிந்து அதை அவர் எடுக்கும் முன்பு அவர் விருந்துக்கு அழைத்த 'பெரிய மனிதர்கள்' அவரைக் கட்டிப் போட்டனர்.

நிருபர் டெலிபோனுக்கு விரைந்தார்.




## ஓவியமா ? காவியமா ?

ஓவியமும் காவியமும் என்று இரண்டையும் எடுத்துச் சீர்தூக்கின், எது உயரிய கலை—காவியமா?—ஓவியமா?

இந்தக் கேள்விக்கு விடை இரண்டு கலைகளும் தெரிந்தவர்கள் பேச வேண்டும். இல்லா விட்டால் — இரண்டுமே தெரியாதவர்கள்பேசலாம். அப்படியானால் இதோ நான் பேசுகிறேன்.

நல்ல வர்ணனையை எங்கேனும் கண்டால் அப்படியே படம்பிடித்துக் காட்டுவதாகச் சொல்லுகிறோம். கவிஞன்அக் காட்சியையே கண் முன் கொண்டு வந்து நிறுத்துகிறான் என்கிறோம். கவிதையைப் பாராட்டுகிறோம். அதாவது கவிதை ஓவியமாக மாறும் போதுதான் சிறப்பெய்துகிறது. நல்ல கவிதை ஓவியத்தை எப்படிப் பிடிக்கிறது; பிடிக்கையில் பாராட்டுப் பெறுகிறது.

நல்லது. மகாகவி பாரதியாரின் எல்லோருக்கும் தெரிந்த சரசுவதி தேவி வர்ணனையைப் பார்க்கலாம்.

முதல் வரி: வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்.

தெரிந்த விவரம் இது. ரவி வர்மா இன்னும் மற்றெல்லா ஓவியர்களும் தீட்டிய காட்சிதான்.

அடுத்த வரி: வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்.

பாரதியார் ஏமாற்றி விட்டார். நமக்கெல்லாம் தெரிந்த சரசுவதி தேவி வீணையைக் கையில் ஏந்தியிருப்பாள். ஆனால் பாரதியாரின் படைப்பு முற்றிலும் வேறு; தூரிகையில் அடங்காது; சாயத்தில் இறங்காது; கல்லிலேயும் சமையாது.

எங்கே, ஓவியர்கள் வரைந்து காட்டட்டும், கவியரசர் பாரதியாரின் அறிவுத் தெய்வத்தை.

வீணையைக் கையில் ஏந்தியிருப்பாள்; அவள் இனிய கீதம் இசைப்பாள் என்று கூறிக் கவிஞன் கலைமகளைக் கலையிலிருந்து பிரித்துச் சொல்லவில்லை. அவள் தான் வீணையில் இருந்து எழும் ஒலி என்றே கூறி விட்டார்.

காவியம் ஓவியத்தை முந்தி விட்டது எனலாமா?

## பட்டினிப் போராட்டம்

அண்மையில் ஒரு விதண்டாவாத உண்ணாவிரதம் நம் பொது வாழ்வில் நடந்தது. இறுதியில் அது தோற்றுப் போய் விட்டது.



நண்பர் அது பற்றிக் கூறி விட்டுக் கடைசியில் கொண்டு வந்து முடிக்கிறார் — எல்லாம் அந்த நாளில் காந்தி பண்ணிக் காட்டியதன் விளைவு!

மேலாகப் பார்த்தால் நண்பரின் பேச்சு நியாயமானதுதான்!

ஓர் உபகதை சொல்லலாம்.

கௌரவர்களில் ஒருவனை துச்சாதனன் — இவன்தான் திரௌபதியை நடுச் சபையில் துகில் உரித்தவன் — நரகத்திலெல்லாம் இடர்பட்டு விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தான். வான வீதியில் கண்ணனைக் கேட்டானாம்: ''கண்ணா! உன்னைப் பின் பற்றியதற்குத் தண்டனையா?''

''என்ன?'' என்று கண்ணனே திகைத்து நின்றான்.

''நான் சபையில் திரௌபதியைக் கொண்டு நிறுத்தி, அப்புறம்....''

வடவேங்கடவன்




"தெரிந்தது. மேலே சொல்லு?"

"அது தவறு என்று தான் கேட்கிறேன்!"

கண்ணன் விழித்தான்.

"யோசித்துப் பார். நீ அன்று — பல ஆண்டுகளுக்கு முன்—செய்தது நினைவிருக்கிறதா?"

"நினைவில்லையே?"

"கோபியர் யமுனையில் நீராடிக் கொண்டிருந்தனர். அவர்கள் உடைகள் யாவும் கரையில் வைக்கப்பட்டிருந்தன. நீ அங்கு சென்றவன் என்ன செய்தாய்?"

"..........."

"ஆடைகளை எடுத்துக்கொண்டு மரத்தின்மேல் சென்றது மறந்து போயிற்றா?"

துச்சாதனன் கண்ணனை எவ்வளவு தூரம் பின்பற்றியதாகக் கொள்ளலாமோ, அந்த அளவுக்கு ஏனைய இன்றைய பட்டினிப் போராட்டங்களுக்கு மகாத்மா காந்தி மீது பழி போடலாம்.

**காட்சி கண் காட்சியே!**

ஊரிலே ஒரு கண்காட்சி நடைபெற்றது. அறிவு புகட்டும் கண்காட்சி வகையைச் சேர்ந்ததல்ல. ஊருக்கு ஊர் ஆண்டுக்கு ஒரு தரம் நிகழும் வெறும் கடைக்காட்சிதான். அது கடைத்தெரு என்பது வேறு பெயரில் வந்து நிற்கலாமல்லவா? அந்த வேறு பெயர்தான் கண் காட்சி.

இப்படி ஒரு விளம்பரம். —

ஆட்டுமுக அபூர்வப் பெண். காணத் தவறாதீர்கள். உடல் எல்லாம் மொக மொகவென்று ஆட்டின் உடல்போலவே உரோமம் முளைத்துள்ளது. முகம் மட்டும் ஆட்டினுடையதாக அமைந்துள்ளது. உண்மை ஆட்டைப் போலவே மே...மே... என்று கத்துகிறாள். தின்னுவதும் புல்லு தான். நீங்களே புல்லைக் கொடுத்து அவள் தின்கிற காட்சியைக் காணலாம். தலைக்கு இரண்டே அணாக் கட்டணம்.



கண்காட்சி மைதானத்தில் இந்த விளம்பர அட்டை ஓர் இடத்தில் தொங்கிய வண்ணம் போவோர் வருவோரைத் திகைக்க வைத்துக் கொண்டிருந்தது. பிரஸ்தாப ஆட்டு முக மங்கை ஓர் அடைப்புக்குள் இருந்தாள். மக்கள் கட்டணம் கட்டி ஒவ்வொருவராக வரிசையில் ஒருபுறம் முன்னேறிக் கொண்டிருக்க, இன்னொரு புறம் பார்த்தவர்கள் வெளியே வந்து கொண்டிருந்தனர். பார்க்கச் செல்லுவோர் முகங்களில் ஆவலும் துடிப்பும் குடி கொண்டிருக்க, பார்த்தவர்களின் முகங்கள் யாவும் ஏதோ விளக்கெண்ணெய் குடித்தாற் போலத் தோன்றின.

ஆம், பின்னே வேறெப்படி இருக்கும்? உள்ளே நின்று கொண்டிருந்தது வெறும் பெண் ஆடு தானே?

**யார் குற்றம்?**

நான் விடுமுறையில் வீட்டுக்குச் சென்றேன்.

ஒருநாள் விட்டொரு நாள் நான் முகக்ஷவரம் செய்து கொள்பவன். காலையில் ஏழு ஏழரை மணிக்குக் கண்ணாடி எதிரே உட்கார்ந்து கொண்டு மேற்படி பணியில் நான் ஆழ்ந்திருப்பதை எவரும் பார்க்கலாம். இதில்தான் என்னவோ பிரமாத ஒழுங்கும் நியமமும் எனக்கு.

எங்கள் வீட்டுக்குக் காலையில் ஏழு ஏழேகால் மணிக்கு ஒன்றுவிட்ட நாட்களில் ஒரு கிழவி வந்து கீரை அரிசிக்குக் கொடுத்து விட்டுப் போவாள். நான் சென்றிருந்த இருபது நாட்களில் பத்து நாட்களும் கணக்காக அவள் வந்து சென்றாள். முதல் நாள் அவள் வந்த தருணம் நான் முகக்ஷவரப் பணியில் இருந்தேன்.

"ஐயா! கீரை வந்திருக்குதுன்னு சொல்லுங்க!" என்றாள். கீரைக்காரக் கிழவி அடுத்த நாள் விட்டு மீண்டும் மூன்றாம் நாள் வந்தாள், அதே ஏழேகால் மணியளவில்.

இப்படியே பத்து நாட்களும் அவள் சொல்லி வைத்தாற் போல் ஒழுங்காக வந்து சென்றாள். நான் விடுமுறை கழிந்ததும் கிளம்பி வந்தேன். இரண்டொரு நாட்கள் கழித்து ஊரிலிருந்து வந்த கடிதத்தில் தாயார் கேட்டிருந்தாள் — நீ போனப்புறம் நம் வீட்டுக் கீரைக்

காரக் கிழவி உன்னை மிகவும் விசாரித்தான். அவன் உனக்கு ஒரு பெயர் கொடுத்திருக்கிறான். அது என்ன, தெரியுமா?

கிழவி தந்த பெயர் தான் சிரிப்பூட்டுவதாக இருந்தது.



"மூகச்சவரக்கார ஐயா போயிட்டாங்களா?" என்று அவன் விசாரித்தானாம்.

அன்னை அவனைக் கேட்டாராம் — "அதென்ன நம் மகனுக்கு அப்படி ஒரு பெயர் வைத்து விட்டாய்?"

"ஆமாங்க! அந்த ஐயா நான் எப்ப வந்தாலும் அதுதான் பண்ணிக்கிட்டிருப்பாரு. பத்துத் தடவை வந்திருப்பேன் அவர் இங்கே இருந்தப்போ.. பத்துத் தடவையும் அவர் கத்தியும் கையுமாய்த்தான் இருந்தாரு."

கிழவி மீது குற்றமில்லை.

அப்படியானால் என்மேல் குற்றமா?

**மாணவர் தலைவன்!**

மாணவர்களுடைய இன்றைய கட்டுப்பாட்டுக் குறைவுக்கு ஒருகாரணம் அளவு மீறி, இதர நடவடிக்கைகளை (Extra Curricular Activities) புகுத்தியிருப்பதாகும். குடிமைப் பயிற்சி தேவைதான். வகுப்பு மாணவர் தலைவன், பள்ளி மாணவர் தலைவன் என்று தேர்தல் நடத்தி மாணவர்கள் தம்மிலேயே ஒருவனைப் பொறுக்கியெடுக்கிறார்கள்.

நல்ல, விரும்பத் தக்க மாணவர்கள் தாம் இப்பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள் என்பதற்கில்லை. தற்கால அரசியல் தேர்தலிலும் அந்த நிலைதானே? நல்லவர்கள்தான் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் என்று யாராவது உத்தரவாதம் கொடுக்க முடியுமா? படிக்காத மாணவர்கள் படியாத மாணவர்கள் தானே? அவர்கள் தலைவர்களாகப் போனால் பள்ளி குட்டிச் சுவராகா இருக்குமா?

சில சமயங்களில் அந்தத் தலைவர்கள் எண்ணத் தலைப்படுகிறார்கள், "படித்தால்தானா? படிக்காமலேயே நாம் இதோ மாணவர் தலைவனாக வரவில்லையா?" என்று!

# இந்நாளை அவள் எந்நாளும் நினைவுற்றிருக்க உஷா தையல் மிஷின்

அவள் கண்ட கனவெல்லாம் நினைவாகி, இன்பம் கரைபுரண்
டோடும் புதியதொரு வாழ்க்கையை மேற்கொள்ள
விருக்கும் இந் நன்னாளில் நீங்கள் அவளுக்கு
அளிக்கும் பரிசு அவளுக்கு மகிழ்ச்சி
யளித்து வாழ்நாள் முழுதும் பயன்படக்
கூடியதாக இருக்கட்டும்.
உஷா தையல் மிஷினை அன்பளிப்பாக
கொடுங்கள்—உகந்த பரிசளிப்பு
அதுவே.



**உஷா**

தையல் மிஷின்
அவளுக்கேற்ற அன்பளிப்பு

JESM/G, 229

ஜே எஞ்சினீரிங் ஒர்க்ஸ் லிட்., கல்கத்தா.31




# ஆலயம்

பார்த்துப் பார்த்துப் பழக்கமாகி அலுத்துப் போன அசட்டுக் காட்சிகளைக் காணாததே மனசுக்கு மிகவும் திருப்தியளிக்கிறது. பழமையான சம்பவங்களும், பாத்திரங்களும் இல்லாமல் இருப்பதே ஒரு புதுமைதானே!

திரைக்கதை திடுக்கிடும் சம்பவம் எதுவும் இராத ஒரு சிறுகதை. மனப் போராட்டத்தையே அடித்தளமாகக் கொண்ட ஒரு குடும்பக் கதை.

காதலில் தோல்வியடைந்து, வாழ்க்கையில் விரக்தியடைந்த டாக்டர் முரளி புற்றுநோய் சிகிச்சைக்காக ஒரு நர்ஸிங் ஹோமை நடத்தி வருகிறார். வேணுவும் அவன் மனைவி சீதாவும் நர்ஸிங்ஹோமுக்கு வருகிறார்கள். சீதாவைக் கண்ட டாக்டர் முரளி திடுக்கிடுகிறார். காரணம் அவள்தான் முரளியின் காதலி. சீதாவும் திகைக்கிறாள். ஆனால் இருவரும் வெளிப்படையாக எதையும் காட்டிக் கொள்ளவில்லை. ஆனால் சில நாட்களுக்குள் வேணு விவரம் முழுவதையும் தெரிந்து கொள்கிறான்; புற்றுநோய் அறுவைச் சிகிச்சையில் தான் இறந்து விட்டால் சீதாவை டாக்டர் மணந்து கொள்ள வேண்டும் என்று வாக்குறுதி பெறுகிறான்; சீதாவிடமும் அதே மாதிரி வாக்குறுதி வாங்கிக் கொள்கிறான். டாக்டர் முரளி பண்பில் உயர்ந்தவர்; சீதா கற்பில் சிறந்தவள்; வேணு நட்புக்குகந்தவன். இந்த அருங்குணங்கள்தான் மனப் போராட்டத்துக்கு ஆணி வேரா யிருப்பதோடு 14,810 அடி நீளத்துக்குப் படத்தை வளர்த்திருக்கிறது.

சீதா மிகவும் அருமையான பாத்திரம்; அதோடு அதை ஏற்று நடிப்பவருக்குச் சிரமத்தைத் தரும் பாத்திரம். தேவிகா அந்த அருமையான பாத்திரத்தை ஏற்று அருமையாக நடித்திருக்கிறார். காதலிக்கச் சந்தர்ப்பம் இல்லை; ஆனால் இழந்த காதலை எண்ணி ஏங்கித் தவிக்க ஒரு சந்தர்ப்பம்; பழைய காதலனைக் காண ஒரு சந்தர்ப்பம்; ஆனால் பண்பில் உயர்ந்து, பிரிவில் நெகிழ்ந்து, கடமையிலிருந்து சரிந்து பிறழ்ந்துவிட முடியாத ஒரு நிலை — அதுதான் சீதாவின் பாத்திரம். கவர்ச்சிப் பாவையாகக் கவினுறு உடையில் தோன்றி நாலுக்காகப் படங்களில் நடமாடி வந்த நடிகை தேவிகா கண்ணீரும் கம்பலையுமாகக் கணவனின் உயிரை மீட்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்ததைக் கண்டு நான் அயர்ந்து போனேன். அடேயப்பா! இத்தனை நாட்களும் இந்த நல்ல நடிப்பை இவர் எங்கே ஒளித்து வைத்திருந்தாரோ! 'நெஞ்சில் ஓர் ஆலய'த்தில் தேவிகாவின் நடிப்பு என் நெஞ்சிலேயே தங்கிவிட்டது.

வேணுவின் பாத்திரமும் சிரமமானதுதான். கைப்பிடித்த மனைவியின் பழைய காதலனை நேரில் கண்டும், சிறிதும் அலட்டிக் கொள்ளாமல், பொறுமையில் உயர்ந்து, பெருமையில் சிறந்து, அருமையாக நடந்து கொள்ள வேண்டிய பாத்திரம். முத்துராமன் முத்தாக நடிக்கிறார். ஆபரேஷனுக்கு முதல் நாள் இரவு பழைய சம்பவங்களைச் சீதாவிடம் ஒவ்வொன்றாகக் கூறி, 'நினைவிருக்கிறதா—சீதா?' என்று கேட்டுக் கேட்டு முத்துராமன் நம் நினைவில் நீங்கா இடம் பெற்று விட்டார்!

டாக்டர் முரளி சஞ்சலமும், சங்கடமும் நிறைந்த பாத்திரம்; உணர்ச்சியில் உருக வேண்டிய பாத்திரம்; இறுதியில் உயிர்த் தியாகம் புரியும் பாத்திரம். கல்யாண்குமார் நன்றாக உணர்ந்து நடித்திருக்கிறார். ஆனால் தேவிகாவுக்கு எதிரில் அவர் நடிப்பு சற்று இறங்கி விடுகிறதே!

பேபி பத்மினி திரைக்கதைக்குச் சிறிதும் சம்பந்தம் இல்லாத பாத்திரம். நெஞ்சை முறுக்கிப் பிழியும் சோகக் கதைக்கு இக் குழந்தை தேவையென்று டைரக்டர் கருதினார் போலும். பேபி பத்மினி நன்றாய் நடிக்கிறாள்.

ராமராவின் வேடிக்கை மிதமாகவும், இதமாகவும் இருக்கிறது. நர்ஸிங் ஹோமில் பணிபுரியும் பீட்டராக வரும் நாகேஷ் இப் படத்தில் வெளுத்து வாங்கி விட்டார். நளினியின் அத்தானிடம் 'மாமூல்' வாங்கும் போது அவர் முகத்தில் காணும் பதற்றமும், உடம்பில் காணும் உதறலும், பார்வையில் காணும் பரபரப்பும் பிரமாதம். சபாஷ் நாகேஷ்!

இருபத்தைந்து நாட்களில் தயாரித்ததுலேயே படத்தில் பல சிறப்பு அம்சங்களைக் காண முடிகிறது என்பது என் அபிப்பிராயம். ஐந்தாறு வருஷங்களாகத் தயாரிக்கப்பட்ட

படம் எத்தனை சிறப்பாக அமைந்தாலும், நடிக, நடிகையர்களின் உடல் அமைப்புக்களில் ரொம்ப வித்தியாசத்தைக் காட்டி விடுகிறது. புகழில் வளர்ச்சியடையும் நம் நடிகர்கள் உடலிலும் அமோகமாக வளர்ச்சி அடைந்து விடுகிறார்களே! அவர்களுடைய வளர்ச்சியில் திரைக்கதையையே மாற்ற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடுவதும் உண்டு.

அடுத்தபடியாகப் பெரிய நடிகர்களைப் போடாததைப் பாராட்ட வேண்டும். பெரிய நடிகர்களைப் போடுவதனால் படம் வெற்றி அடைவது நிச்சயமோ இல்லையோ, படப்பிடிப்பு தாமதமாவது என்னவோ நிச்சயம்!

வர்ணக் கலவையின் உதவியில்லாமல், உணர்ச்சி ததும்பும் எண்ணக் குவியல்களின் உதவியைக் கொண்டே ஸ்ரீதர் இப்படத்தைத் தயாரித்திருக்கிறார்; கதை, வசனம், டைரக்ஷன் ஆகியவைகளின் முழுப் பொறுப்பையும் ஏற்றுப் பாராட்டும் வண்ணம் வெற்றி பெற்றிருக்கிறார். ஆயினும் கதை சில இடங்களில் மிகவும் பலவீனமாயிருக்கிறது. சீதா தன் காதலன் முரளியைக் கைவிட்டு வேறுவனை மணந்ததற்குக் கூறும் காரணம் நொண்டிக் காரணமாகப்படுகிறது. தந்தையின் நெருக்கடி நிலைமை காரணமாக அவள் தன் காதலைப் பலி கொடுக்க நேர்ந்தது என்பது சர்வ சாதாரணமான சமாதானமாகத் தோன்றுகிறது. மேலும், அந்தக் காரணத்தை முரளியிடம் முன்பே வெளியிட்டிருக்கலாம். கதைக்காகக் கதைக்காமல் கதாசிரியர் தம் கற்பனைத் திறனுக்குக் கொஞ்சம் வேலை கொடுத்திருக்கலாம்.

அவலக் கலையை ஏற்படுத்துவதற்காகவே டாக்டர் முரளியைச் சாக அடித்தது போல் தோன்றுகிறது. திரைக் கதையில் காணும் சில பொருத்தங்கள் ஒளிப்பதிவின் திறமையினாலும் விறுவிறுப்பான ஓட்டத்தினாலும் மறைந்து விடுகின்றன.

இது ஸ்ரீதரின் நெஞ்சில் ஓர் ஆலயம் மட்டுமல்ல; பார்ப்பவர் கண்களைப் பனிப்புறச் செய்து, உள்ளத்தை உருக்கும் எழில் ஓவியம்.



# திருமூலர் தவமொழி

ராஜாஜி சோறு

45

தெய்வத்தோடு ஐம்புலன்களும் மருவி நின்று, பேரின்பம் அனுபவிக்கிற பெரியோர்களை "அணைந்தோர்" என்று சொல்வதுண்டு. திருமூலருடைய திருமந்திர நூலில் 'அணைந்தோர் தன்மை' என்ற பகுதியில் உள்ள பாடல்கள், ஜீவன் முக்தி நிலையை விளக்கும் அற்புதப் பாடல்கள்.

**ஒழிந்தேன் பிறவி :**
**உறவென்னும் பாசம்**
**கழிந்தேன் —**

[ஒழிந்தேன் பிறவி-இறைவனுடைய திருவருள் கிடைத்த பாக்கியத்தினால், இனி இந்த உலகில் பிறந்து இன்ப துன்பம் அனுபவிக்க வேண்டிய அவசியமின்றிப் பிறவி ஒழிந்தது. உறவென்னும் பாசம் கழிந்தேன்—மகன், மனைவி, சுற்றத்தார் என்று கருதும் பாசங்களை நீக்கிக்கொண்டு விட்டேன்.]

**ஒழிந்தேன் பிறவி :**
**உறவென்னும் பாசம்**
**கழிந்தேன் ; கடவுளும்**
**நானும்ஒன் றானேன்.**

[கடவுளும் நானும் ஒன்றானேன்—இறைவனோடு ஒன்றிவிட்டேன்.]

அவன் வேறு, நான் வேறு என்ற பேதமில்லாமல் கடவுளும் நானும் ஒன்றாகி விட்டோம் என்கிறார் முனிவர். 'இறைவனும் நானும்' என்ற எழுவாய்க்கு, ஆனோம் என்று பன்மையில் சொல்லாமல், 'ஒன்றானேன்' என்று தன்மை ஒருமையில் சொல்கிறார்! இது அந்த ஐக்கிய பாவத்தை அழுத்தமாகக் காட்டுவதோடு, ஈசன் மாற வேண்டியதில்லை, மாற வேண்டியது என்னுடைய மயக்கந்தான், ஆனபடியால் ஒன்றானேன் என்று தன்மை ஒருமையில் சொல்லுகிறார்!

**அழிந்தாங்கு இனிவரும்**
**ஆக்கமும் வேண்டேன்**

[அழிந்து — மரணம் அடைந்து ஆங்கு—அதன்பிறகு. இனிவரும் ஆக்கமும்—மீண்டும் உலகிற்கு வந்து பிறக்கும் ஜன்மம் மிகச் சிறந்த பிறப்பானாலும் அதை. வேண்டேன்—நான் விரும்பவில்லை.]

**செழுஞ்சார்பு உடைய**
**சிவனைக்கண் டேனே**

[சார்பு—அணைதல். செழுஞ்சார்பு—இன்பமயமான சார்பு. செழுஞ்சார்புடைய—இன்பத்தோடு வந்து நம்மை அணைந்து கொண்டு, நமக்கும் இன்பம் தருகிற. சிவனைக் கண்டேனே—சிவபெருமானைப் பிடித்துக் கொண்டேன். கண்டேனே என்பதில் உள்ள 'ஏ' காரம் ஆனந்த வியப்பு.]

**ஒழிந்தேன் பிறவி ;**
**உறவென்னும் பாசம்**
**கழிந்தேன் ; கடவுளும்**
**நானும்ஒன் றானேன்**
**அழிந்தாங்கு இனிவரும்**
**ஆக்கமும் வேண்டேன்**
**செழுஞ்சார் புடைய**
**சிவனைக்கண் டேனே !**

ஜீவன் முக்தரின் ஆனந்த நிலையை மேலும் பாடுகிறார் திருமூலர்.

ஆராலும் என்னை
அமட்டஒண் ணாதுஇனிச்
சீரார் பிரான்வந்துஎன்
சிந்தை புகுந்தனன்!

[அமட்டுதல்—ஏமாற்றுதல். ஒண்ணாது—முடியாது. ஆராலும் என்னை அமட்ட ஒண்ணாது—இனி எந்த மனிதர்களும் என்னை ஏமாற்றி உலக பாசங்களிலே சிக்க வைக்க முடியாது. சீரார்பிரான்—மங்கள மூர்த்தியாகிய சிவபெருமான். வந்தென் சிந்தை புகுந்தனன்—எழுந்தருளி வந்து, என் உள்ளத்துக்குள் புகுந்து இருந்து கொண்டான்.]

சீராடி அங்கே
திரிவதல் லால்,இனி
யார்பாடும் சாரா
அறிவு அறிந் தேனே

[சீராடி—இன்புற்று. அங்கே திரிவதல்லால் — பேரின்பமாகிய அந்தத் தெய்வ உலகிலே திளைப்பேனே தவிர. இனி யார் பாடும் சாரா அறிவு அறிந் தேனே—உலக மக்கள் எவருடைய பக்கமும் சாராமல் நிற்கிற சாதனையை அடைந்து விட்டேன். பாடு—பக்கம்.]

ஆராலும் என்னை
அமட்ட ஒண்ணாதினிச்
சீரார் பிரான்வந்தென்
சிந்தை புகுந்தனன்
சீராடி அங்கே
திரிவதல் லால்இனி
யார்பாடும் சாரா
அறிவறிந் தேனே!

உலக வியவகாரங்களிலே சிக்கி அலைகிற மனத்தை, இறைவனிடத் திலே பிடித்து நிறுத்துகிற அறிவை அறிந்துவிட்டால், அதுவே பேரின்பம்! அந்த இன்பம் சித்திக்கும்போது, மனத்துக்கு வேறு எந்தச் சார்பும் வேண்டியிராது! புறச் சார்பின்றித் தனக்குள்ளே இன்பம் சுகிக்கிற தன்மை அது! 'ஆத்மன் யேவ ஆத்மனு துஷ்டஹ' என்று பகவத் கீதையில் கண்ணன் ஸ்தித ப்ரக்ஞ நிலையை விளக்கியதும் இதுவே!

# நந்தவனம்

## 7 - இதயம் நின்றது

இரண்டு மூன்று நாட்களில் ஊருக்குத் திரும்பி விடலாம் என்று எண்ணித் தான் சென்னைக்கு வந்தார் ஜமீந்தார். ஆனால் இரண்டு மூன்று வாரங்களை தங்கியிருக்கும்படி நேர்ந்துவிட்டது!

ஆம்; அந்த முதிய ஓவியருடைய மரணம் யாருமே எதிர்பார்க்காத விதத்தில் அத்தனை சீக்கிரமாக, அத்தனை திகைப்போடு வந்தது!

அடையாற்றின் கடற்கரையில், ஜமீந்தாருடைய பங்களாவுக்குப் பின்புறம் நின்ற மணல் மேட்டின் மீது, ஏகாந்தமான ஸிமெண்ட் பெஞ்சில் திடீரென்று அறிவு மயங்கிச் சாய்ந்தாரல்லவா சிவகாமிநாதன்? அவருடைய கண்கள் இரண்டும் அப்படியே செருகிக் கொண்டன. பங்களாக் காவற்காரர்கள் ஓடி வருவதற்குள் ஜமீந்தாரின் மடியிலே சரிந்து விட்டார் அந்தக் கிழவர்!

நாலைந்து பேராகச் சேர்ந்து சிவகாமிநாதனைத் தூக்கியெடுத்து, மாளிகைக்குள் கொண்டு வந்தார்கள். தண்ணீர் தெளித்தார்கள். விசிறியினால் விசினார்கள். நினைவு வரவில்லை.

டாக்டர்கள் வந்தார்கள். சோதனை செய்து பார்த்தார்கள். 'இதயம் நின்று விட்டது' என்று வருத்தத்தோடு சொன்னார்கள்.

ஓவியருடைய புதல்வன், ஒரே மகன், அந்தக் கலைப் பரம்பரையின் குலக் கொழுந்து, வில்வநாதன், பதறியடித்துக் கொண்டு வந்தான். ஓவியருடைய மாணவர்கள் அனைவரும் ஓடோடி வந்தார்கள். உயிரற்ற வர்ணங்களுக்கு உயிரூட்டிய அற்புத விரல்கள், உயிரற்றுக் கிடந்ததைக் கண்டார்கள்! ஆயிரம் ஆயிரம் சித்திரக் கண்களை அமர மொழியிலே பேச வைத்த தங்கள் குருநாதனின் கண்கள் மூடி உதடுகள் பேச்சின்றி ஒடுங்கி விட்டதைக் கண்டு கண்ணீர் விட்டார்கள்! உறுதி சொல்ல முடியாத வயதல்லவா, மரணம் இப்படித்தான் திடீரென்று வரும் என்றார்கள் வைத்தியர்கள். ஆனால் ஜமீந்தாருடைய மனத்துக்கு எந்தக் காரணமும் ஏற்கவில்லை. எந்தச் சமாதானமும் அவருக்குச் சமாதானம் தரவில்லை! டாக்டர்களைப் பார்த்துக் கேட்டார்:

''இதயம் நின்று விட்டது என்கிறீர்கள். இதயம் நின்று விட்டது என்றால் என்ன? உயிர் போய் விட்டது என்று அர்த்தம். உயிர் ஏன் போயிற்று? இதயம் ஏன் நின்றது? அதற்கு என்ன காரணம் என்றல்லவா நான் கேட்கிறேன். என்னைப் போல் வைத்தியம் தெரியாதவன் இதயம் நின்றது என்று சொல்லலாம். ஆனால் நீங்கள் உடம்பின் தன்மைகளைக் கற்றுத் தேர்ந்தவர்கள். அந்த இதயம் ஏன் நின்றது என்று சொல்ல மாட்டீர்களா? இரத்த ஓட்டம் ஏன் வேலை செய்யாமல் திடீரென்று இப்படித் தடைப்பட்டது என்பதற்கு ஒரு காரணம் இல்லையா? இதயம் நில்லாமல் மரணம் எப்படி நிகழும்? இதயம் நின்றது என்றால் மரணம் வந்து விட்டது என்றுதானே அர்த்தம்? இந்த மனிதன் ஏன் இறந்தான் என்று உங்களைக் கேட்டால், நீங்கள் இதயம் நின்று விட்டது என்று பதில் சொல்கிறீர்களே? எல்லா இதயங்களும் நில்லாமல் ஓடும் போது இந்த ஒரு இதயம் மட்டும் ஏன் நின்றது? இந்த ஒரு இதயத்துக்குமட்டும் ஏன் தளர்ச்சி வந்தது? சொல்லுங்கள். என் கேள்விக்கு விடை கூறுங்கள்!''

இப்படிப் புலம்பினார் ஜமீந்தார்!




அனவரதருடைய மனம் குழம்பியிருந்தது என்று எல்லாரும் கவலைப்பட்டார்கள். ஓவியர் சிவகாமிநாதனுடைய திடீர் மரணம் ஜமீந்தாருடைய மூளையை இப்படித் தாக்கி விட்டதே என்று டாக்டர்கள் எல்லாரும் வருத்தத்தோடு சென்றார்கள். ஆனால் யாருக்கும் அந்தக் குழப்



பத்தின் உண்மையான காரணம் தெரியாது!

ஜமீந்தாருடைய உள்ளத்தின் அந்தரங்கத்தில் ஒரு துயர நினைப்பு அவரை மேலும் மேலும் வேதனை செய்தது. சிவகாமிநாதனுடைய முதிய இதயத்தை ஓட விடாமல் நிறுத்தியது தாமேதான் என்ற ஒரு நினைப்பு! இன்னும் சில நாள் வாழ்ந்திருக்கக் கூடிய அந்தக் கிழவரைத் தம்முடைய பேச்சுத்தான் தம்முடைய பலவந்தமான வேண்டுகோள்தான் இப்படி ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துவிட்டது என்று எண்ணி அனவரதர் வருந்தினார்!

'என்னவோ ஒரு செய்தியைச் சொல்ல ஆரம்பித்தவர்

சட்டென்று அந்தப் பேச்சை நிறுத்தினாரே! ஏதோ ஓர் இரகசியத்தை இதயத்திலிருந்து எழுந்து வராதபடி அமுக்கினாரே! அந்த முயற்சிதானே அப்படி ஒரு படபடப்பை உண்டாக்கியது! இரகசியத்தைப் பேச ஆரம்பித்தவர் தானே அந்தப் பேச்சைப் பேசாமல் அப்படியே அடக்கிக் கொண்டார்! அந்த வினாடியிலிருந்து தானே அவருடைய உடம்பும் அவருடைய வார்த்தைகளும் பதற ஆரம்பித்தன!'

அந்தத் துயரக் காட்சி மறுபடியும் மறுபடியும் அனவரதருடைய கண் முன் வந்து நின்றது!

சிவகாமிநாதனுக்கு இறுதிக் கடன்கள் அனைத்தும் ஆகி முடிந்ததும், ஒரு நாள் இரவு வில்வநாதனை அழைத்து வந்து, ஏகாந்தமான மாடியறையிலே உட்கார்ந்தவாறு செய்திகளைச் சொல்ல ஆரம்பித்தார் அனவரதர்.

''வில்வநாதா! இத்தனை சுகபோகங்களை எனக்கு இறைவன் கொடுத்திருந்தும், என் வாழ்வில் ஒரு பெருங்குறை இதுநாள் வரை எனக்கு இருந்துவந்தது. எத்தனையோ செல்வங்கள் இருந்தும், ஒரு மகன் இல்லையே என்று நான் மிக மிகக் கவலைப்பட்டேன். அந்தக் கவலையெல்லாம் இனி எனக்கு இல்லையப்பா! வாழ்வில் என்னுடைய பெருங்குறை நீங்கியது. அந்தக் குறையை நீக்குவதற்குத்தான் உன்னை என்னிடம் ஒப்படைத்தார் உன் தந்தை என்று எண்ணி மகிழ்கிறேன்!''

இவ்வாறு பேச ஆரம்பித்தார் அனவரதர். சோகத்தினால் சொல்லற்று மௌனமாக உட்கார்ந்திருந்த வில்வநாதன், ஜமீந்தாரின் குரலில் இழைந்த அன்பினால் மெய்சிலிர்த்தான். அனவரதர் தொடர்ந்து பேசினார்:

''வில்வநாதா! வாழ்வு முழுதும் சித்திரக் கலைக்காகவே உழைத்தவர் உன் தகப்பனார். அவருடைய கடைசி மூச்சும் கலை நினைவுகளோடு தான் இழைந்தது. அப்படிப்பட்ட உத்தமரின் பெயரில் ஒரு பெரிய கலைக் கல்லூரி நிறுவ வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறேன். அந்தப் பெருங் கல்லூரி நடைபெறுவதற்கு இந்தப் பெரிய மாளிகையையே நன்கொடையாக வழங்கவும் உத்தேசித்திருக்கிறேன். இனி அடையாற்றின் கரையிலேயுள்ள இந்த மாளிகை ஒரு பெரிய கலைப் பள்ளியாகத் திகழும்.''

ஜமீந்தார் வில்வநாதனின் முகத்தையே பார்த்தவாறு பரிவும் பாசமும் நிரம்பியவராய்த் தமது உள்ளத்தின் ஆசைகளையெல்லாம் மேலே மேலே சொல்லிக் கொண்டே போனார்:

''இந்தக் கலைப்பள்ளி தொடங்குவதற்கு முன் இப்பொழுது உடனடியாகச் செய்ய வேண்டிய ஒரு முக்கியமான வேலை செண்பகநாயகி கோவிலின் சித்திரத் திருப்பணி — ''

''செண்பகநாயகிகோவிலா?'' என்று கேட்டான் வில்வநாதன்.

''ஆமாம். அந்தக் கோவிலின் சுற்றுப்புறச் சுவர்களிலும் அதற்கருகிலுள்ள ஒரு சிறு குகையிலும் அற்புதமான சுவரோவியங்கள் பல இருக்கின்றன. மிகவும் பழமையான ஓவியங்கள் அவை. சித்தன்ன வாசற் குகையிலும் பனைமலைக் கோவிலிலும் உள்ள அதிசயமான சித்திரங்களைப் போல இந்தச் செண்பகநாயகி கோவிற் சித்திரங்களும் அழகும் கலையாற்றலும் நிரம்பிய மிகப் பழைய ஓவியங்கள். அந்தச் சித்திரங்கள் எல்லாம் காலத்தின் கொடுமையினாலும், நம்முடைய கவனக் குறைவினாலும், மங்கியும் அழிந்தும் போய்க் கிடக்கின்றன! இவற்றைப் புதுப்பித்து அந்தக் காலத்தில் இந்தச் சித்திரத் தந்தையர்கள் இவற்றிற்கு எந்த உருவமும் வண்ணமும் கொடுத்தார்களோ, அவற்றை மீண்டும் அதே பழைய நிலையில் உயிர்ப்பிக்க வேண்டும். அந்தத் திருப்பணியைச் செய்யக்கூடிய ஆற்றலும், தவவலிமையும் உனக்குத்தான் உண்டு!''

ஜமீந்தார் இப்படிச் சொன்னதும் வில்வநாதன் நிமிர்ந்து பார்த்தான்.

''அண்ணலே! என்ன சொல்லுகிறீர்கள்? இறைமையும், பூர்வ புண்ணியமும் நிரம்பிய நம்முடைய முன்னோர்கள் எங்கே? நானெங்கே? தவிரவும் என்னுடைய தந்தையார் — ''

''உன் தந்தையார் சொன்ன வார்த்தைகளைத்தான் நானும் சொல்லுகிறேன். அந்த மகத்தான திருப்பணியைச் செய்யக்கூடிய ஆற்றல் உனக்கே, உனக்கு மட்டுமே உண்டு. இது என் கருத்து இல்லை. உன் தகப்பனார் சொன்னது!''

''தகப்பனார் அப்படிச் சொன்னார்களா? ஆச்சரியமாக இருக்கிறதே!''

''வில்வநாதா! உன் தந்தையின் கடைசி ஆசை அதுதான். நீ என்னோடு சிங்கம்புத்தூருக்கு வந்து அந்தத் திருப்பணியைத் தொடங்க வேண்டும். அது முடிகிற வரை அதை ஒரு கலை வேள்வியாக, ஒரு சித்திர யாகமாக, ஒரு ஓவியத் தவமாக நீ அதை மேற்கொள்ள வேண்டும். அந்தத் திருப்பணி முடிந்த பிறகு சென்னைக்குத் திரும்பி வந்து, இந்தக் கலைக் கல்லூரியின் பொறுப்பை நீ ஏற்று நடத்த வேண்டும் என்று ஆசைப்படுகிறேன்.''

## வறட்டு, மூச்சுவிடமுடியாத, துன்பம் தரும்

இருமலிலிருந்து

## விரைவாக , நிச்சயமாக

குணமளிக் கக்கூடிய வீட்டு மருந்து

*Alembic* **க்ளைகோடின்**

டெர்ப் வசாகா




GTV-590 EVEREST

வில்வநாதன் இந்த வார்த்தைகளைக் கேட்டு வியப்பும் கவலையும் மேலிட்டவனாக மௌனமாக இருந்தான். அப்போது ஜமீந்தார் சொல்லுவார்:

“தம்பி! தந்தையின் பிரிவையே எண்ணி எண்ணி மனசை மேலும் மேலும் குழப்பிக் கொள்ளாதே. இனிமேல் அத்தகைய குழப்பத்தினாலும் துயரத்தினாலும் பயனில்லை. இறந்தவர்களின் பணி அவர்களோடு முடிந்து விடுவதில்லை. அவர்களுக்குப் பின்பு அவர்கள் விட்டுப் போன காரியங்களை யெல்லாம் நாம் தொடர்ந்து செய்ய வேண்டும் என்பதே நமது கடமை. அது நம்முடைய பிதிர்க் கடன். செண்பகநாயகி கோவிலின் திருப்பணியைப் பூர்த்தி செய்வதன் மூலம், சிவகாமிநாதனின் வாக்குறுதியை நிறைவேற்றுவதோடு, உன்னுடைய எதிர்காலத்துக்கும் ஒரு திட்டம் வகுத்துக் கொள்ளுகிறாய் என்பதே என்னுடைய கருத்து. அதுவே என் மனப்பூர்வமான ஆசை!”

இவ்வாறு ஜமீந்தார் சொல்லி முடித்ததும் வில்வநாதன் சொல்லுவான்:

“மன்னிக்க வேண்டும். நீங்கள் என்னுடைய மதிப்புக்கும் அன்புக்கும் உரியவர்கள். உங்கள் வார்த்தைகளில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் கிடையாது. ஆனால் இளமையிலிருந்தே என் தந்தை என்னை ஒரு துறவு வாழ்க்கைக்காகவே பயிற்சி கொடுத்தார். இதை அவர் வெளிப்படையாக என்னிடம் சொன்னதில்லை. ஆனாலும் அவருடைய உள்ளத்தின் ஆழத்திலே அப்படி ஒரு நோக்கம் இருந்தது என்பதைப் பல சமயங்களில் நான் ஊகித்திருக்கிறேன். அவருடைய வாழ்க்கையில் நேர்ந்த ஏதோ ஒரு நிகழ்ச்சி, அவருடைய இதயத்தில் ஏற்பட்டிருந்த ஏதோ ஒரு வடு. யாரிடமும் அவர் வெளியிடாமல் உள்ளத்துக்குள்ளேயே மறைத்து வைத்துக் கொண்டிருந்த தழும்பு ஒன்று இருந்தது. அதன் வரலாறு எனக்குத் தெரியாது. என்னிடம் அதை அவர் மறைத்தார். உள்ளமும் உளமும் தோய்ந்த நிலையிலே என் மீது அவர் தமது அன்பை யெல்லாம் கொட்டியபோதிலும், அன்றாட வாழ்வில் அவர் என்னை மிகுந்த கண்டிப்போடு பாதுகாத்து வந்தார். கண்களை இமைகள் காப்பது போல என்று சொல்லுவார்களே, அப்படி என்னுடைய செயல்களை யெல்லாம் அவர் கண்காணித்து வந்தார். தனிமையாக எங்கும் அவர் என்னை இதுவரை அனுப்பியதில்லை. உலகம் என்பது ‘காட்டுக்கொடி படர்ந்த கருவூர்க் காடு’ என்று சொல்லுவார். கள்ளியும் முள்ளும் புதரும் நிரம்பிய ஒரு காடு இந்த மனித சமூகம் என்பார். காலில் முள் தைக்காமல் நடப்பது ஒரு பெரிய தவம் என்பார்! ஜமீந்தார் அவர்களே, எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து அவர் இப்படியே தான் பேசி வந்திருக்கிறார். ஓவியங்களிலும், வர்ணங்களிலும் அறமும், கட்டுப்பாடும் துறவும் முக்கியம் என்று கூறுவார்! அளவுக்கு அதிகமாகவே அவர் இந்த விஷயத்தில் கண்டிப்போடு பேசுவார். மற்ற மாணவர்களை விட என் விஷயத்தில் தீவிரமாக இதை வற்புறுத்திச் சொல்லுவார். எத்தனையோ சந்தர்ப்பங்களில் நான் இதுபற்றித் தனியாக இருந்து யோசித்திருக்கிறேன். அவருடைய வாழ்வில் நிகழ்ந்த ஏதோ ஒரு சம்பவம், மறைந்தும் மறையாமல் நின்று வேதனை செய்து வருகிற ஒரு நிகழ்ச்சிதான் இதற்குக் காரணம் என்று பலமுறை நான் எண்ணியிருக்கிறேன். ஆனாலும் அவரிடம், பெற்ற தந்தையிடம் அதை எப்படிக் கேட்பேன்! அவராக என்னிடம் சொல்லாத ஒரு நிகழ்ச்சியை நானாக அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுவது எப்படி! கடைசியில் அதை எனக்குச் சொல்லாமலே தான் அவர் இந்த உலகிலிருந்து மறைந்து விட்டார்!”

வில்வநாதனின் விழிகளிலிருந்து கண்ணீர் பொங்கி வடிந்தது.

“ஜமீந்தார் அவர்களே! என் தந்தையைப் பற்றியும், அவர் எனக்காக வகுத்துக் கூறிய இலட்சியத்தைப் பற்றியும், நீங்கள் பேசியதால் எனக்கு ஏதேதோ பழைய நினைவுகள் வந்தன. அவற்றைத் தான் உங்களிடம் சொல்லுகிறேன். மிகச் சிறு வயதிலேயே அவர் ஞான நூல்களிலும், சித்தர் இலக்கியங்களிலும் எனக்கு ஆசை உண்டாகும்படி என்னைப் பழக்கினார். அதோடு நில்லாமல், நம்முடைய நாட்டு ஓவியர்கள் எல்லாரும் துறவிகள் என்று அடிக்கடி சொல்லுவார். இளமையின் பிடிப்பிலிருந்து விடுபட்டவன்தான், கலையிலே இளமையைச் சித்திரிக்க முடியும் என்று கூறுவார்! பிறருடைய உள்ளத்தில் உணர்ச்சிகளை உண்டாக்க வேண்டிய ஒரு நாடக நடிகன், தானே அந்த உணர்ச்சிகளில் மெய்ம் மறந்து ஒன்றிப் போய் விட்டால் அது ஆபத்தாக முடியும் என்பார். கலையின் நுட்பமான இரகசியம் தோய்ந்தும் தோயாமல் நிற்கிற இந்த மனநிலைதான் என்று சொல்லுவார்! இத்தகைய மனநிலை எளிதில் வராது என்றும், ஒரு முனிகுமாரனைப் போலக் கலையைத் தவமாகக் கொண்டு வேள்வி நடத்துகிறவனுக்குத்தான் இதெல்லாம்

சாதிக்க முடியும் என்றும் உருக்கத்தோடு சொல்லிக் கண்ணீர் வடிப்பார். இந்தப் பேச்சின் நுட்பங்களையெல்லாம் சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் நான் குழம்பியிருக்கிறேன். எத்தனையோ நாட்களில் நான் இந்த வார்த்தைகளைக் கேட்டு உள்ளத்தில் நடுக்கம் கொண்டிருக்கிறேன். அப்போதெல்லாம் என்னுடைய இந்த நடுக்கத்தைக் கண்டு அவருடைய மனம் மகிழ்ச்சி அடைவதை அவருடைய முதிய விழிகளிலே நான் கவனித்திருக்கிறேன்! அதே சமயம், என்னுடைய மனத்தில் தளர்ச்சி உண்டாகி விடாமல் இருக்க, அவர் பெரிய பெரிய கனவுகளையும் இலட்சியங்களையும் என்னிடம் பேசுவார். எல்லாரையும் போல வளர்ந்து எல்லாரையும் போல வாழ்க்கை இன்பங்களை அனுபவித்து, எல்லாரையும் போல



மடிவதற்காகவா நாம் பிறந்தோம் என்று கேட்பார். உயர்ந்த எண்ணங்களையும் உன்னதமான கலைக் கனவுகளையும் வெளியிடுவார். இந்த முரண்பாடுகளின் பொருள் புரியாமல் பல தடவைகள் நான் தவித்திருக்கிறேன். அன்பும் வாஞ்சையும் நிரம்பிய அந்த மெல்லிய இதயத்தில்; ஏதோ ஒரு கசப்பு, வாழ்வின்மீது ஏற்பட்ட ஏதோ ஒரு வெறுப்பு ஆழமாகப் பதிந்திருந்தது என்பதை என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது. ஆனால் அது ஒரு சாதாரண வெறுப்பு, சாமானிய மனிதர்களின் சகஜமான கசப்பு அல்ல. ஒரு துறவியின் வெறுப்பு அது! ஒரு சந்நியாசியின் கசப்பு அது! உண்மையில் அது வெறுப்பு இல்லை. அது கசப்பு இல்லை. மனித குலத்தின் மீது உள்ள எல்லையற்ற கருணையிலிருந்து பிறந்த ஒரு தவிப்பு; மனிதர்களுடைய வேதனையை, மனிதர்களுடைய தவறுகளை, மனித சமூகத்தின் பாவச் செயல்களைக் கண்டு, அந்த அவல நிலைக்காக வருந்துகிற எல்லையற்ற ஓர் அனுதாபம் அது! அதை வெறுப்பு என்றோ, கசப்பு என்றோ எப்படிச் சொல்லுவது! வாழ்வில் அவருடைய அனுபவத்தில் ஏற்பட்ட ஒரு துன்பம் அவருடைய இதயத்தில் ஒரு பெரிய புண்ணாக வளர்ந்து, ஆறியும் ஆறாமல் அவரை வேதனை செய்து வந்தது என்பதையே இதிலிருந்து நான் கண்டு கொண்டேன். இந்தக் குழப்பத்துக்கு மத்தியில், நான் எத்தகைய துறவு வாழ்க்கையை மேற்கொள்ளவேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார் என்பது, எனக்கு ஒரு பெரிய புதிராகவே இருந்து வந்திருக்கிறது. இப்பொழுதும் அந்தப் புதிர், புரியாத ஒரு புதிராகவே முடிந்து விட்டது!''

வில்வநாதனின் கண்கள் கலங்கின. அவனுடைய வார்த்தைகளில் தவிப்பும் அவனுடைய குரலில் எல்லையற்ற உருக்கமும் இழைந்தன. எதிரே உட்கார்ந்திருந்த ஜமீந்தாருக்கு என்ன பதில் சொல்வது என்று விளங்கவில்லை. வில்வநாதன் கூறிய அந்தப் புதிர் தமக்கும் ஒரு புதிராகவே இருக்கிறது என்று சொல்லி அந்த இளைஞனுடைய குழப்பத்தை மேலும் அதிகப்படுத்துவதா? அல்லது தம்மிடம் சிவகாமிநாதன் பேச ஆரம்பித்த போது வெளியிட்ட தயக்கத்தையும் தடையையும் சொல்லிப் புதிய சிக்கலை உண்டாக்குவதா? அனவரதருக்கு மூளை குழம்பியது. சிவகாமிநாதனுடைய உடம்பு ஆட ஆரம்பித்ததும், அதைத் தொடர்ந்து நிகழ்ந்த மன மயக்கமும், அவருடைய விபரீதமான தெளிவும், அந்தத் தெளிவிலே பிறந்த வாக்குறுதியும், வானத்தையும் கடலையும் சாட்சியாக நிறுத்தி அந்த ஓவியர் செய்த சபதமும், பிறகு அதைத் தொடர்ந்து ஏற்பட்ட எதிர்பாராத முடிவும், - அத்தனையும் அந்த அடையாற்றுக் கடலின் அலைகளைப் போல உள்ளத்துக்குள் ஓசையிட்டன! பேச முடியாமல் திணறச் செய்த அந்த நினைவுகளையெல்லாம், உள்ளத்திற்குள்ளே தள்ளிக் குளிர வைப்பவர்போல மேஜைக்கு மேல் வைத்திருந்த கண்ணாடிக் குவளையிலிருந்து தண்ணீரை எடுத்து இரண்டு மடக்கு குடித்தார். கைக்குட்டையினால் முகத்தைத் துடைத்துக் கொண்டார். பிறகு மன உறுதி வந்தவராக ஜமீந்தார் அனவரதர் பேச ஆரம்பித்தார்:

''வில்வநாதா! உன் தந்தையினுடைய இதயத்தின் ஆழத்திலே எத்

தனையோ பல எண்ணங்களும், எத்தனையோ பல ஆசைகளும், கனவுகளும் எழுந்து சுழன்றிருக்கலாம். சாதாரண மனிதர்களுக்கே உள்ளத்தில் எத்தனையோ இலட்சியங்கள் எழுவது இயல்பு. அப்படியிருக்கும் போது கற்பனையும் கலையாற்றலும் நிரம்பிய ஒரு சிறந்த ஓவியருடைய உள்ளத்தில் கணக்கற்ற சிந்தனைகள் வட்டமிட்டதில் வியப்பு இல்லை. வாழ்வு முழுதும் அவர் கண்ட கனவுகள் ஆயிரம் ஆயிரமாக இருக்கலாம். ஆனால் செண்பகநாயகி கோவிலின் திருப்பணியைப் பற்றியும், அதில் என் தகப்பனார் எத்தனை ஆசை வைத்திருந்தார் என்பது பற்றியும், எந்த வினாடியில் அவர் பூரணமாக அறிந்து கொண்டாரோ அந்த வினாடியே அவர் ஒரு தீர்மானமான முடிவுக்கு வந்து விட்டார். ஆரம்பத்தில் இருந்த தயக்கமும் குழப்பமும் மறைந்து, அவருடைய எண்ணத்தில் ஒரு தெளிவுபிறந்தது. அந்தக் கணத்திலேயே அவர் உன்னுடைய இலட்சியம் என்ன என்பதை ஐயந்திரிபில்லாமல் உறுதியோடுசொல்லிவிட்டார். உண்மையில் இந்தத் திருப்பணியை வேறு மாணவர்கள் யாரிடமும் ஒப்படைக்க அவருடைய மனம் இடம் தரவில்லை. நீ ஒருவனே அதற்கு உரியவன் என்று வாக்குறுதியோடு சொன்னார் மகனே!''

இவ்வாறு கூறினார், அனவரதபுவனபதி. அதைக் கேட்டதும் வில்வநாதனின் வாடிய முகத்தில் ஒரு துளிர்ப்பு தோன்றியது. அவன் கேட்டான்:

''ஜமீந்தார் அவர்களே! உங்கள் குலதெய்வத்தின் கோவிற் சுவர்களிலே உள்ள ஓவியங்களைப் புதுப்பிக்கக்கூடிய திறமையும், பக்குவமும் எனக்கு உண்டு என்று அவர் உறுதியாக நினைத்தாரா? அதற்கு வேண்டிய — ''

''வில்வநாதா! செண்பக நாயகி கோவிலின் திருப்பணியை நிறைவேற்றுகிற ஒருவனுக்கு ஒரு முனிகுமாரனுடைய மன உறுதியும், தவ முயற்சியும் வேண்டும் என்று சொன்னார் உன் தந்தை. அந்த எண்ணத்தினாலேதான் இந்தப் பெரும் பொறுப்பை வேறு எந்த மாணவனிடமும் ஒப்படைக்காமல் உன்னிடம் ஒப்படைத்திருக்கிறார் அப்பனே!''

வில்வநாதனுக்கு உடம்பு புல்லரித்தது. அவன் சொன்னான்:

''பெருந்தகையே! இந்த மண்ணுலகில் எந்த மகத்தான பணியும் ஒரு மகத்தான கனவிலிருந்து தான் மலர்கிறது என்று என் தந்தை அடிக்கடி சொல்லுவதுண்டு. அழிகின்ற இந்த அநித்திய உலகில் அழியாத பல அமர சாதனைகள் உருவாகி நிற்பதற்குக் காரணம், மகான்களின் இலட்சியமும் வாழ்த்துமே என்பது அவருடைய கொள்கை. இந்தப் பெரிய திருப்பணிக்கு என் தந்தையின் ஆசையும் ஆசியும் துணையாக நிற்கின்றன என்று நீங்கள் உறுதி சொல்லும் போது, இதற்குமேல் என்ன வேண்டும் எனக்கு! முழு நம்பிக்கையோடு உங்களுடன் புறப்படுவேன்!''

ஒரு போர்வீரனுடைய உறுதி வில்வநாதனின் குரலில் பேசியது! அனவரதருக்கு இதயம் பூரித்தது!

வில்வநாதனும் அனவரதபுவனபதியும் சென்னையிலிருந்து சிங்கம்புத்தூருக்குப் புறப்பட்ட போது விடியற்காலை நேரம். திட்டமிட்டுப் புறப்பட்ட 'கார்ப் பிரயாணம்' அது. வர்ணங்கள், தூரிகைகள், எழுதுகோல்கள், விதம்விதமான இறகுகள் முதலிய பற்பல சாதனங்களோடு வில்வநாதன் காருக்குள் ஏறும் போது, அவனுடைய உள்ளத்தில் விவரிக்க முடியாத பல உணர்ச்சிகள் விம்மின. தந்தையின் கட்டளையை நிறைவேற்றப் போகிறோம் என்ற மகிழ்ச்சிக்கு மத்தியிலே, அவருடைய பிரிவினால் நேர்ந்த துயரமும், தந்தையில்லாமல் தன்னந் தனியாகச் செல்லுகிற முதலாவது அனுபவத்தின் வினோதமான அச்சமும், எல்லாம் சேர்ந்து அவனுடைய கண்கள் கலங்கின.

சென்னையிலிருந்து சிங்கம்புத்தூர் புறப்பட்ட ஜமீந்தாரின் மோட்டார் வண்டி, நேராகச் செல்லாமல் சுற்றி வளைத்துக் கொண்டு சென்றது. காஞ்சிபுரம் கைலாசநாதர் கோவிலின் பல்லவ ஓவியங்கள், பனைமலைக் கோவிலிலே ராஜசிம்மன் நிர்மாணித்த அற்புதச் சித்திரங்கள், சித்தன்ன வாசலின் குகை ஓவியங்கள், இவற்றையெல்லாம் சென்று பார்த்துக் கொண்டு, மறுநாள் மாலை சிங்கம்புத்தூர் மாளிகைக்குச் சென்று சேர்ந்த போது, இருவருடைய உள்ளங்களிலும் சித்திரக்கனவுகளாகவே பொங்கித் ததும்பிக் கொண்டிருந்தன!

வில்வநாதனுக்குத் தமது மகள் தாமரைச் செல்வியை அன்போடு அறிமுகம் செய்தார் ஜமீந்தார்.

''வில்வநாதா! இவள்தான் என்னுடைய மகள் தாமரைச் செல்வி. எங்களுடைய குலக்கொடி. சிங்கம்புத்தூர் ஜமீனை ஆளப்பிறந்த செல்வி. முன்னோர்களின் ஓவியக் கனவுகள் எல்லாம் நனவாக மலர்வதற்காகவே பிறந்திருக்கிறாள் இவள்!''

இப்படிச் சொன்னபோது ஜமீந்தாரின் கண்கள் கலங்கியதை எல்லாருமே கவனித்தார்கள். வில்வநாதனும் கவனித்தான். ஏன் அப்படி? ஏன் அனவரதரின்



கண்கள் அவ்வாறு கலங்கின? பாசத்தினாலா? எல்லை கடந்த வாஞ்சையினாலா? இதயத்தின் வரம்பை மீறிப் பெயர்த்துக் கொண்டு பொங்கிய அன்பினாலா? ஏன் அவருடைய கண்கள் கலங்கின?

''அப்பா! புதிதாக வந்தவரிடம் என்னை அறிமுகம் செய்யும் போது, இப்படியெல்லாம் அடைமொழிகள் சொல்ல வேண்டுமா? அன்புக்கு ஒரு அளவு இல்லையா? எனக்கு வெட்கமாக இருக்கிறது'' என்றாள் செல்வி.

''வெட்கமா! இது என்ன புதிய வார்த்தையாக இருக்கிறதே!'' என்று சொல்லிப் புன்முறுவல் செய்தார் அனவரத புவனபதி.

அப்பாவின் பேச்சில் ஏற்பட்டுள்ள ஒரு தடுமாற்றமான மாறுதலைக் கவனித்த தாமரைச் செல்வி, ஒரு விநாடி குழம்பி நின்றாள். பிறகு, தனக்கு எதிரே நின்ற அந்த ஓவிய இளைஞனைப் பார்த்துப் புன்னகை செய்து கொண்டே கூறினாள்:

''எங்கள் அப்பாவுக்கு ஒருவரைப் பிடித்து விட்டால், பிறகு அந்தப் பிரியத்துக்கு அளவே இருக்காது! சித்திரங்களில் சிறிய உருவத்தைச் சில சமயங்களில் மிக மிகப் பெரிதாகப் போட்டுக் காட்டுவீர்கள் அல்லவா, அப்படிப் பெரிது படுத்தி விடுவார்கள்! அவர்களுடைய இஷ்டப்படியெல்லாம் வர்ணம் தீட்ட ஆரம்பித்து விடுவார்கள்!''

மகள் இப்படிச் சொன்னதும் ஜமீந்தார் உள்ளமும் உடம்பும் குலுங்கும்படியாகச் சிரித்தார்!

''சரி, நீங்கள் இருவரும் சித்திர மொழிகளிலேயே பேச ஆரம்பித்து விட்டீர்கள். பேசிக் கொண்டிருங்கள்!''

இவ்வாறு சொல்லி விட்டு ஜமீந்தார் வல்லாள வேலரை அழைத்துக் கொண்டே மாளிகையின் அலுவல் அறையை நோக்கி நடந்தார்.

''வேலா! நம்முடைய செண்பகநாயகி கோவிலில் உள்ள சித்திரங்களை யெல்லாம் புதுப்பிக்க வேண்டிய வேலைக்காக, இந்தச் சித்திரக்காரரைச் சென்னையில் இருந்து அழைத்து வந்திருக்கிறேன்... இவர் பெயர் வில்வநாதன்!''

ஜமீந்தார் இப்படிச் சொன்னதும் வல்லாளவேலர் ஒரே திகைப்போடு பார்த்தார். அந்தத் திகைப்பினூடு ஒரு வெறுப்பும் கசப்பும் புகைந்தன.

''என்ன வேலா, இப்படி முழிக்கிறாய்? இந்தச் சின்னப்பிள்ளை இவ்வளவு பெரிய காரியத்தை எப்படிச் செய்யப் போகிறார் என்று திகைக்கிறாயா?''

''இல்லை எஜமான்....'' என்று வார்த்தைகளை வழக்கம் போல் சன்னமாக இழுத்தார் வேலர்.





"என்ன சொல்வதற்கு வந்தாய்? சொல்லேன். ஏன் தயக்கம்?"

ஜமீந்தார் இப்படிக் கேட்டதும் வல்லாள வேலர் உடம்பெல்லாம் குனிந்து வளைந்து கொண்டு சொல்லுவார்:

"அந்தக் கவர்களில் வேறு ஏதோ இங்கிலீஷ் வார்னிஷ் அடிக்கணும் என்று ஏலமலை எஜமான் சொல்லிக்கிட்டிருந்தாக—"

"ஆமாம். என்னிடத்திலும் சொன்னான் பொன்னுத்துரை! அந்த வார்னிஷ் எல்லாம் வேண்டாம் என்று சொல்லி விட்டேன். இந்த வருஷம் திருவிழாவை நாமே போயிருந்து நடத்த வேண்டும். தெரிந்ததா?"

"உத்தரவு எஜமான்!" என்று சொல்லி மறுபடியும் உடம்பை வளைத்தார் வல்லாள வேலர்.

"நம்முடைய மாளிகையில் மேற்குப்புறத்திலுள்ள மாடி அறையைக் காலி செய்து சுத்தப்படுத்தும்படி ஏற்பாடு செய். வில்வநாதன் அங்கேதான் தங்கியிருக்கப் போகிறான். என்ன, எந்த அறை என்று தெரிந்ததா?"

"உத்தரவு எஜமான்!" என்று சொல்லிக் கொண்டு மீண்டும் தயக்கத்தோடு ஜமீந்தாரின் முகத்தையே பார்த்தார் அந்த வல்லாளர்!

"என்ன? மறுபடியும் என்ன யோசனை?"

"ஒன்றுமில்லை. அந்த அறையில் இருக்கிற புஸ்தக அலமாரிகளையெல்லாம்......"

"எந்தப் புஸ்தகங்கள்?"

"ஏலமலை எஜமான் குதிரைகளைப் பற்றி மேனாடுகளிலிருந்து வரவழைத்து வைத்துள்ள விதம் விதமான இங்கிலீஷ்..."

"ஆமாம். அந்தப் புஸ்தகங்களையெல்லாம் எடுத்து, இங்கே இழேயே கொண்டு வந்து விடு. குதிரைப் புஸ்தகம் எல்லாம் இனிமேல் என் கண்ணிலேயே படக் கூடாது. தெரிந்ததா?"

"உத்தரவு எஜமான்!"

ஜமீந்தார் அனவரதர் அந்த அறையிலிருந்து வெளியே வந்து மாளிகைக்குள்ளே நடந்தார்.

இது வரை வெளித் தாழ்வாரத்தில் ஒதுங்கி நின்று கொண்டிருந்த கப்பையாவைத் தமது பக்கத்தில் வரும்படி கூப்பிட்டார் வல்லாள வேலர்.

"ஏலே கப்பையா, பாத்தியாலே! இந்தப் புஸ்தகத்துக்கு வந்த கதிதான் ஒரு நாளைக்கு உனக்கும் எனக்கும் வரப் போகுது. ஜாக்கிரதை!"



> சோஷலிச பாணியில் எடுத்த எடுப்பிலேயே பலியாவது — சர்வ நிச்சயமாகப் பலியாவது — சுதந்திரமேயாகும். சோஷலிசத்தால் சுபிட்சம் ஏற்படாது; எங்கெங்கும் வியாபிக்கும் அதிகார வர்க்கம்தான் ஏற்படும். அதிகார வர்க்கத்தின் கீழ் சுபிட்சம் அடைவது நடக்காத காரியம். நாட்டின் செல்வம் விரயமாவதையும், ஒரு புதுக் கொடுங்கோலர் வர்க்கம் அதிகாரத்தை வசமாக்கிக் கொள்வதையுமே காண்போம். பொய்க் காரணங்களைக் கூறி, மக்களின் அன்றாட வாழ்க்கையில் தலையிடுவதே அவர்களின் வேலையாக இருக்கும். அச்சம் என்பதே நாம் சுவாசிக்கும் மூச்சுக் காற்றாகும். —ராஜாஜி

இவ்வாறு சொல்லி விஷமத்தனமாகக் கண்களைச் சிமிட்டினார் வல்லாளர். சுப்பையா சொன்னான்:

''என்ன சாமி, அப்படியெல்லாம் சொல்லுறீக! என்னையும் உங்களோட சேத்துச் சேத்துப் பேசுறீக!''

''ஆமாலே! நீ என்னைக்கும் தனி ஆளுதாண்டா! நம்பளோட சேருவியா நீ! நீ யாரு? இந்தச் சிங்கம்புத்தூருடைய லகானே உன் கையிலேதானே இருக்கு! நம்பளை மாதிரியா நீ!''

மாளிகைக்குள்ளே சென்ற ஜமீந்தார் கட்டிலில் படுத்திருந்த மனைவியிடம் அவசரம் அவசரமாக இரண்டு வார்த்தைகள் பேசி விட்டு, மறுபடி வெளியே வந்தார். அவருக்குக் கால் நிலத்திலே பாவவில்லை!

''சுப்பையா! இனி மேல் உனக்கு முக்கியமான வேலை என்ன தெரியுமா? புதிதாக வந்திருக்கிற இந்த ஐயாவுக்கு வேண்டிய சௌகரியங்களையெல்லாம் கவனித்துக் கொள்ளணும். தெரிஞ்சுதா?''

''ஆகட்டும் எசமான்'' என்று கூறி வாய் பொத்தி நின்றான் சுப்பையா.

ஜமீந்தார் மறுபடியும் மாளிகைக்குள்ளே நடந்தார்.

வல்லாள வேலர் சுப்பையாவைப் பார்த்துச் சொல்லலானார்:

''ஏலே, நான் சொன்னது சரியாப் போச்சு பார்த்தியாலே! நீ எப்பவும் தனி ஆளுதாண்டா! இது வரைக்கும் குதிரை லகான்தான் கையிலே இருந்தது. இனி மேல் மனுசங்க லகானே உன் கையிலேதான்! அப்படித்தானே?''

''என்ன சாமி! என்னமெல்லாமோ பேசிக்கிட்டே போறீகளே! ராசாதி ராசனே சவாரி போனாலும், குதிரைக்குச் சாப்பாடு கொள்ளுதானே!''

''இல்லேலே! பாதாம் ஹல்வா சாப்பிடுண்டா குதிரை! அதெல்லாம் இடம் பொருள் ஏவலைப் பொறுத்து! பாட்டு கேட்டதில்லே நீ?''

''சாமி! எந்த ராசா எந்தப் பட்டணம் போனாலும், இந்தக் குதிரை எப்பவும் கொள்ளுதான் சாப்பிடும் சாமி!''

ஜமீந்தார் மனைவியிடம் இரண்டு வார்த்தைகள் சொல்லி விட்டு வெளியே வந்தார்.

''வல்லாள வேலா! நாளைக்குக் காலையிலே எழுந்திருந்ததும் உனக்கு என்ன வேலை தெரியுமா?''

''உத்தரவு எசமான்!''

''செங்கோட்டை ஸ்டேஷனுக்குப் போய் ரயிலேற வேண்டியது. நேரே திருநெல்வேலிக்குப் போக வேண்டியது. வண்ணார் பேட்டை வக்கீலய்யாவை உடனே கையோடு கூட்டி வர வேண்டியது. தெரிந்ததா?''

''உத்தரவு எஜமான்!''

ஜமீந்தார் மறுபடியும் மாளிகைக்குள்ளே சென்றார்.

வக்கீலய்யா இப்பொழுது எதற்காக வர வேண்டும் என்று யோசித்துக் கொண்டே வல்லாள வேலர் சுப்பையாவைப் பார்த்துக் குறும்புத்தனமாகச் சொன்னார்:

''ஏலே! என்னலே இது தடபுடலா இருக்கு! அந்த மாடி அறையையே இந்தப் பையன் பேருக்கு எழுதி வைச்சு, இப்பவே ரிஜிஸ்தரும் பண்ணிடுவாக போலிருக்கே!''

மாளிகைக்குள்ளே சென்ற ஜமீந்தார் மனைவியிடம் இரண்டு வார்த்தை பேசி விட்டு மீண்டும் வெளியே வந்தார்.

''செல்வி! செண்பக நாயகி கோவிலின் சித்திரப் பணியை முடிப்பதோடு, உனக்கும் ஓவியம் கற்றுத் தருவதற்காகவே வில்வநாதனை அழைத்து வந்திருக்கிறேன் அம்மா!''

இப்படிச் சொன்னார் ஜமீந்தார். வில்வநாதனிடம் சித்திரம் கற்கப் போகிறோம் என்று எண்ணிப் பார்த்ததும், தாமரைச் செல்வியின் முகத்தில் மகிழ்ச்சி கலந்த ஒரு வெட்கம் படர்ந்தது. இதயம் என்ற இறகு, நாணம் என்ற வர்ணத்தைத் தோய்த்து மெல்லிய சிவப்புக் கோடுகளை ஓவியமாக வரைந்தது அவளுடைய முகத்திலே! வில்வநாதனோ ஜமீந்தாரையே பார்த்தவாறு ஒரு முனி குமாரனைப் போல் நின்றான்!

அலுவல் அறையிலே இருந்தவாறு இந்தக் காட்சிகளையெல்லாம் இமைத்தபடி நின்று கூர்ந்து பார்த்துக்கொண்டே தீவிரமான சூழ்ச்சியில் ஆழ்ந்தார் வல்லாள வேலர்! **(தொடரும்)**

...ஆயினுமென்ன? ரமேஷ் இதை அணியும்போதெல்லாம் அவனுடைய நண்பர்கள் 'புதியது' என்றே நினைக்கிறார்கள். காரணம் **பினிக்ஸ் பாப்ளினினால்** தயாரிக்கப்பட்டது இது. பினிக்ஸ் உறுதியான, சுருங்காத, வர்ணமயமான, ஸான்போரைஸ்ட் பாப்ளின்களைத் தயாரிக்கிறது. பிரகாசமான, விந்தையான விதவித வர்ணங்கள்...கவர்ச்சியான அமைப்புக்கள்... அலாதியான பிரிண்டுகள்...ரூ. 1-12 லிருந்து ரூ. 2-25 விலையில் கிடைக்கும் இவை சிக்கனமானவை, நீடித்து உழைப்பவை, பலதிறப்பட்டவை. குடும்பத்திலுள்ள மாதருக்கான பினிக்ஸ் வாயில்களும் உண்டு.

# பினிக்ஸ் மில்ஸ்

ஒரு ரூயா ஸ்தாபனம்

மதுரை, சென்னை, பெங்களூர் லகனௌ, பூனா, கான்பூர், பம்பாய் செகந்திராபாத், நாகபுரி கோல்ஹாபூர் ஆகிய இடங்களில் ரூயா கடைகள் உள்ளன.

இந்தச் **சட்டை** தைத்து **ஒன்பது** மாதங்கள் ஆகின்றன!

RPY-2-TAM.

# பவழத்தீவு 7

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ரமணி..

கந்தனின் உத்தரவுப்படி அவன் கானகத்துத் தோழர்கள் பலதிசைகளிலிருந்தும் செய்தி சேகரித்து வந்து சொல்லுகின்றனர். குரங்கு ஜம்புதான் கண்டதைச் சொல்லுகிறது.





















அதிகாலையில்....

ஆனந்தா விடிந்து விட்டது, வா, நமது பிரயாணத்தைத் தொட ருவோம்.
















ஆம்! தனியாகத்தான் தங்
களைக் காண வந்தேன்.
நந்திவர்மரே, என் பெற்
றோரின் நிலை என்ன?


அதை எப்படிச் சொல்லுவேன் இளவரசே?
ஒரு நாள் இரவு திடீரென்று சூலபாணி
பாசறையில் புகுந்து மன்னரையும் மகா-
ராணியாரையும் கவர்ந்து சென்று விட்டான்.
துரத்திச் சென்றோம். பயனில்லை. காடு மலை
களில் போரிடும் பழக்கமில்லாத நம் படை
களினால் சூலபாணியின் சாகசங்களைச் -
சமாளிக்க முடியாமல் தவித்துக் கொண்
டிருக்கிறோம்..........


யார், இது....?
இவன்தான் கந்தன். என்
தோழன் என்னைக் காப்பாற்றி-
உங்களைச் சந்திக்கவும் உதவி
னன். இவன் உதவியால் சூல
பாணியின் சாகசங்களை -!
நாம் - முறியடிப்போம்!


இந்தச் சிறுவனா
சூலபாணியை முறிய
டிக்க உதவப் போகி
றான்?
சிறுவன்தான். இவன்
வலிமையைப் பற்றி உங்
களுக்குத் தெரியாது...
யார், இந்தக் கிழவன்?
அவன் பார்வை-
எனக்குப் பிடிக்க
வில்லை


அவன் யாரோ அடுத்த
மலைக் கிராமத்தான். நம்
படைகளுக்குத் தேவைப்படும்
சில உணவுப் பொருட்களைக்
கொண்டு வந்து கொடுத்து
உதவுகிறான்.


உளவும் பார்ப்பான். இவன்
குரல் பழக்கப்பட்டது போல
...? அந்த முகமூடி உருவத்
தின் குரலும் இவன் குரலும்
ஒன்று போல....? இருவரும்
ஒருவரா? அப்படியானால்...!
ஒன்றும் புரியவில்லையே.



# விலை வேலை

கோமதி சுவாமிநாதன்

போக்குவரத்து அதிகமான ஒரு ரஸ்தாவை அடுத்த பூங்கா அது. ஏராளமான செடி கொடிகள். இடையே ஆங்காங்கு சிமிண்டு ஆசனங்கள். பூங்காவைச் சுற்றிக் கம்பிவேலியோ அமைக்கப் பட்டிருந்ததால், வேலிக்கு உட்பக்கம் அருகிலுள்ள ஆசனங்களில் அமர்பவர்களுக்கு வெளி உலக ஓட்டசாட்டத்தை நன்கு கவனிக்க வசதி உண்டு. அந்த ஆசனங்களில் ஒன்றில்தான் ஏகாந்தமாகக் குருமூர்த்தி உட்கார்ந்திருந்தார். அவர் பார்வை அடிக்கடி ரஸ்தாவிலும், பூங்காவுக்குள் நுழையும் கேட் மேலும் மாறி மாறிப் பாய்ந்து கொண்டிருந்தது. பூங்காவின் உட்பகுதிகளுக்கு எத்தனையோ இளம் ஜோடிகள் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் மீதெல்லாம் அவர் கவனம் செல்லவில்லை.

தலையிலிருந்த கம்பளி மப்ளரை நன்றாகக் காதுகளை மூடும்படி இழுத்து விட்டுக் கொண்டார். சட்டைப் பையிலிருந்த பொடி மட்டையை எடுத்துத் தட்டி ஆனந்தமாக ஓர் உறிஞ்சல் இழுத்தார். அவர் முகத்தில் பரவசக் களை படர்ந்தது. அதற்குப் பொடி மாத்திரம் காரணமில்லை. பூங்கா கேட் அருகில் அவர் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த நண்பர்கள் அடியெடுத்து வைத்துக் கொண்டிருந்ததுதான் காரணம்!

வாசுதேவனும் உமாபதியும் நிதானமாகக் குருமூர்த்தி அமர்ந்திருந்த சிமிண்டுபெஞ்சியை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

குருமூர்த்தி போலீஸ் இலாகாவில் உத்தியோகம் பார்த்துச் சில வருடங்களுக்கு முன் ஓய்வு பெற்றவர். வாசுதேவன் தபால் இலாக்காவில் உயர்ந்த பதவி வகித்து ரிடையர் ஆனவர். உமாபதி உயர்நிலைப்பள்ளி முதல்வராக, வைர விழாக் கொண்டாடும் அளவு சேவை செய்து ஒதுங்கி வாழ்பவர். இந்த மூவருக்கும் மற்றும் சில ஓய்வுபெற்ற நண்பர்களுக்கும் குருமூர்த்தி அமர்ந்திருந்த பூங்காப் பெஞ்சு சங்கப் பலகையாக விளங்கியது. மாலை ஐந்து மணியிலிருந்து ஏழரை மணி வரை அந்த நண்பர்கள் அங்கு சந்தித்து, மெகாடன் குண்டிலிருந்து பொதுப்கோடா வரையிலும், கண்டிராக்டரின் கிரிக்கெட் காப்டன் திறமையிலிருந்து கடோபநிஷத் வரையிலும் ஆராய்ந்து அலசித் தள்ளுவார்கள்.

''குரு! இன்றைக்குச் சீக்கிரம் கிளம்பி வந்து விட்டாயா?'' என்று கேட்டுக் கொண்டே வாசுதேவன் குருமூர்த்தியின் பக்கத்தில் உட்கார்ந்தார். உமாபதி வாசுதேவனுக்கு அடுத்தாற்போல் அமர்ந்தார்.

''நான் அப்போதே வந்து கொட்டக் கொட்ட உட்கார்ந்திருக்கிறேன், வாசு! உங்களைத்தான் ஒருவரையும் காணோம்!'' என்றார் குருமூர்த்தி விரக்தி கலந்த குரலில்.

''ஏனய்யா குருமூர்த்தி! இன்றைக்கு உனக்கு ஏதோ வேலை இருக்கிறதாக நேற்று நீ சொல்லவில்லையா?...ஆமா, ஆமா! இப்போது தான் நினைவுக்கு வருகிறது! உன்னுடைய இரண்டாவது பையனுக்கு எங்கேயோ பெண் பார்க்கப் போவதாகச் சொன்னியே ஐயா? போகவில்லையா?'' என்றார் உமாபதி. 'நேற்றுக் கொடுத்த வீட்டுக் கணக்குகளைப் போட்டுக் கொண்டுதான் இன்று வகுப்புக்கு வரவேண்டுமென்று சொல்லியிருந்தேனே! ஏன் போடவில்லை?'' என்று கேட்கும் தோரணையில்தான் உமாபதி கேட்டார்.

''பையன் பெண்ணைப்பார்த்து விட்டான்.'' குருமூர்த்தியின் குரலில் கலந்திருந்த வெறுப்

பையும் விரக்தியையும் மற்ற இருவர்களும் கவனித்ததாகத் தெரியவில்லை.

"ஓஹோஹோ! இன்றைக்குக் காலையிலேயே அந்தப் பெண் பார்க்கும் படலம் முடிந்து போயிற்று?... காலை வேளையில் புடவை அவ்வளவு நன்றாக இருக்காதே! அது கிடக்கட்டும். பெண் எப்படி இருக்கிறாள்? உன் பையனுக்குத் திருப்திதானே?" உமாபதியின் குரலில் ஆர்வம் நிறைந்திருந்தது.

"உமாபதி!.......நான் பதில் சொல்லக் கொஞ்சம் தயங்கினாலும் உடனே இந்தப் பார்க் பெஞ்சு மேலே ஏறி நின்று சொல்லி விடுவாய் போலிருக்கிறதே! இந்தப் பள்ளிக் கூட உபாத்தியாயர் ரத்தம் நீ ஓய்வு எடுத்துக் கொண்ட பிறகுதான் வேகமாக ஓடுகிறது உன் உடலில்" என்றார் குருமூர்த்தி.

"இதிலே ஆச்சரியமில்லை குரு! உத்தியோக காலத்தில் நமது திட்டங்களையும் தீர்மானங்களையும் அமுலாக்க நிறைய வசதி இருக்கும். ஆனால் கூடவே பல நிர்ப்பந்தங்கள் இருக்கும். அந்த நிர்ப்பந்தங்களுக்குப் பயந்து வசதியை இழந்து விடுவோம். இப்போது நமக்கு வசதியும் இல்லை; நிர்ப்பந்தங்களும் இல்லை. கற்பனையிலாவது நம் தீர்மானங்களை அமுலாக்கலாம் பாரு!....நம்ப வாசு இருக்கானே! அவன் கிட்டே இந்த விஷயத்தில் நாம் பிச்சை வாங்க வேண்டும். இன்னமும் வீட்டில் அவன் ஒரு சூப்பரெண்ட்தான். வரும் கடுதாசிகளை யெல்லாம் அவனே பிரித்துப் படித்து விட்டு உத்தியோக கால நினைவில் ஓரத்தில் குறிப்புகளையும் உத்தரவுகளையும் சிவப்புப் பென்சிலாலும் நீலப் பென்சிலாலும் எழுதி எழுதித் தள்ளுகிறான்..."

"உமா!...நீ சும்மாயிருக்க மாட்டாயா?" என்று போலிக் கோபத்துடன் கடிந்து கொண்டார் வாசுதேவன்.

அந்த இடைவெட்டலைக் கவனிக்காமலேயே உமாபதி தொடர்ந்தார். "என்ன சொல்லிக் கொண்டு வந்தேன்! ஆமாம். சிவப்புப் பென்சில் நீலப் பென்சில் விவகாரம். சிவப்புப் பென்சில் குறிப்பு அவசரத்தைக் குறிக்கும்; நீலப் பென்சில் நிதானத்தைக் குறிக்கும். சமீபத்திலே வாசு சம்பந்திகிட்டேயிருந்து ஒரு கடுதாசி வந்ததாம். வாசு அதைப் பார்த்து விட்டு ஓரத்தில் ஓர் இடத்தில் சிவப்புப் பென்சிலாலே கோடு போட்டு, 'ப்ளீஸ் ஸ்பீக்' அதாவது 'இது விஷயமாக நேரில் பேசவும்' என்று எழுதி வேலைக்காரி மூலம் சம்சாரத்துக்கு அனுப்பியிருக்கிறான்."

"ஆபீஸ் பைல் டிஸ்போஸ் பண்ணுற நினைவு போலிருக்கு!" என்று குறுக்கிட்டார் குருமூர்த்தி.

"முழுவதும் கேளு. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சம்சாரம் அந்தக் கடுதாசியைக் கையில் எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தாள்.

'நீங்களும் உங்க சிவப்புப் பென்சிலும்! நன்றாகத்தான் இருக்கு. சம்பந்தி பொங்கல் சீருக்கு வெள்ளியிலே வெங்கலப் பானைவாங்கி அனுப்பச் சொல்லி எழுதியிருக்கிறார். இதிலே என்ன பேச வேண்டியிருக்கு? நான் என்ன உங்க குமாஸ்தாவா?' என்றாள் மிஸஸ் வாசுதேவன்.

'உஷ்! .... உன் பேச்சில் வார்த்தைக் கோவை சரியாக இல்லை! திருத்திப் பேசு: வெள்ளியிலே எப்படி வெங்கலப் பானை வாங்குகிறது? வெள்ளிப் பானை என்று சரியாக மறுபடியும் எழுதச் சொல்லிச் சம்பந்திக்கு ஒரு கடுதாசி எழுதிக் கொண்டா. கையெழுத்துப் போடுகிறேன்' என்றான் வாசு.

'சம்பந்தி என்ன, உங்க 'சபார்டினேட்டா?' -உங்க கீழே வேலை பார்க்கிற சிப்பந்தியா? நீங்க வெள்ளிப் பானை வாங்கிக் கொடுத்தாலும் சரி தகரப்பானை வாங்கிக் கொடுத்தாலும் சரி! எனக்கென்ன வந்தது?' என்று உள்ளே போகத் திரும்பினாளாம். அப்போதும் வாசு ஆபீஸ் பிரமையிலேயே உழன்று கொண்டிருக்கிறான். 'வெள்ளிப் பானை வாங்குறதுன்னு நூறு ரூபாய்க்கும் மேலே ஆகுமே! அதை வாங்குவதற்கு நமக்கு 'பைனான்ஷியல்' பவர் இருக்கிறதா? 'ஆடிட் அப்ஜெக்ஷன்' வருமா? எல்லாவற்றையும் பார்த்துக் குறிப் பெழுதிக் கொண்டு வா, போ!' என்றான்.

'ஆடிட்டுமாச்சு! ஆட்டு வாலுமாச்சு! இனிமேல் உங்களுக்கு நான்தான் ஆடிட் ஆபீஸ்! வெள்ளிப்பானை வாங்குகிற வழியைப் பாருங்கள்!' என்று மிஸஸ் வாசுதேவன் கூப்பாடு போட்ட பிறகு தான் வாசுவுக்குத்தான் ரிடயர் ஆன நினைவு வந்ததாம்" என்று உமாபதி கூறி முடித்தார்.

வாசுதேவன் மடமட வென்று சிரித்தார். "இந்த விஷயம் உனக்கு எப்படித் தெரியும், உமா!..... சரி சரி!..... இது பெண்மணிகள் சர்க்யூட் வழியாக வந்திருக்கும்! எனக்கென்னவோப்பா! ரிடையரான நினைவு அடிக்கடி ஓடிப் போய் விடுகிறது" என்றார் வாசுதேவன். தொடர்ந்து "உமா! அந்தக் காலத்திலே, நீ வகுப்புகளிலே சரித்திரப் பாடத்தை ஆரம்பித்துத் தன்னை மறந்து ஜாகரபி பாடத்திலே கொண்டு போய் முடிப்பாய் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இப்போதும் அந்த நிலைமை மாறினதாகத் தெரியவில்லை. நம்ப குருமூர்த்தி பையனுக்குப் பெண் பார்க்கப் போன கதையிலே ஆரம்பித்து, நான் பொங்கல் பானை வாங்கின கதையில் கொண்டு வந்து முடிக்கிறாய்! 'பள்ளிக்கூட வாத்தியார்கள் ஒரு நாளும் ரிடையர் ஆக முடியாது' என்று சொல்வதில் உண்மை இருக்கத்தான் செய்கிறது!" என்று வாசுதேவன் உரிமையுடன் உமாபதியின் முதுகில் தட்டிக் கொடுத்தார்.

"குரு! நீ சொல்லப்பா, பெண்ணைப் பையனுக்குப் பிடித்திருக்கிறதா? உனக்குச் சம்பந்தியின் சீர்வரிசைத் திட்டங்கள் பிடித்திருக்கின்றனவா?" என்று ஆரம்பித்தார் உமாபதி.

"பெண்ணைப் பையனுக்கு ரொம்ப ரொம்பப் பிடிச்சிருக்காம்! ஆனால் அந்தப் பெண் நாங்கள் பார்க்கப் போகத் திட்டமிட்ட பெண் இல்லை. அது வேறே! இது வேறே!" குருமூர்த்தி கம்பளி மப்ளரை நன்றாக இறுக்கி விட்டுக் கொண்டார்.

''என்ன புதிர் போடுறே? புரியறாப் போலே சொல்லு'' என்று பாய்ந்தார் உமாபதி.

''இது புரியலியா உமா! பையன் ஏதோ காதல் விவகாரத்திலே இறங்கியிருக்கிறான்! நீ என்னவோ இந்தக் காலத்திலே பையன்களோட 'எபிஷியன்ஸி' அதுதான், திறமை குறைஞ்சு போச்சு, குறைஞ்சு போச்சுன்னு அடிச்சுக்கறியே? பார்த்தாயா? எதிலே எபிஷியன்ஸி குறைந்தாலும் நம்ப பசங்களுக்கு இந்தக் காலத்தில் காதல் விவகாரங்களில் துணிந்து இறங்குவதில் எபிஷியன்ஸி குறையவில்லே'' என்றார் வாசுதேவன் வேடிக்கையாக.

உமாபதி நிமிர்ந்து உட்கார்ந்தார். ''நீ சும்மா இரு வாசு. குரு என்னடான்னு மனசு ஒடிஞ்சு இருக்கான். நீ தமாஷாகப் பேசறியே. குரு! பயலுக்கு நீ ஒரு 144 போட்டு விட்டாயல்லவா?'' என்றார் உமாபதி.

''காலம் தெரியாமல் சொல்லுறியே! அப்புறம் எனக்கு இருபத்துநாலு மணி நேரத் தடையுத்தரவே போட்டுடுவான் வீட்டுக்குள் வராதேன்னு. ஹூம்! யோசித்து ஒரு முடிவுக்கு வர வேண்டிய விஷயம். முதலில் இந்த விஷயத்தில் துப்புத் துலக்கியாக வேண்டும். இந்தப் பயல் மனத்திலே நுழைஞ்சிருக்கிற மோகனாங்கி யாருன்னு தெரிஞ்சுக்கணும். அப்புறம் ஒரு 'சர்ப்பிரைஸ் ரெய்டு'. பயலைத் தன்னுலே கட் பண்ணிடலாம்'' என்றார் குருமூர்த்தி நிதானமாக.

வாசுதேவன் வேகமாக அந்த யோசனைக்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் தலையை ஆட்டினார். ''நோ! நோ! அது சரியான வழியில்லே குருமூர்த்தி. இந்த மாதிரி விவகாரங்களிலே நீ ஒரு புது முறையைக் கடைப்பிடித்திருந்தால் வெற்றியே கண்டிருப்பாய்! பையனோட நோக்கம் தெரிஞ்சவுடனேயே 'அப்படியா மணி! வெரிகுட்! எனக்கு எத்தனையோ சிரமம் மிச்சம். ஆல் ரைட்! அந்தப் பெண்ணையே பண்ணிக் கொண்டு வந்து சேரு! இப்பவே ஆசீர்வாதம் பண்றேன். வெரிகுட்' என்று அலட்சியமாகச் சொல்லியிருந்தால், பயல் அப்படியே ஆடிப் போய்ப் பின்வாங்கி விருப்பான். எப்போ நீ எதிர்ப்பு உணர்ச்சியைக் காண்பிக்கிறேயோ அப்போதுதான் அவனுக்குத் துணிச்சல் அதிகமாகிறது. இது இந்தக் கால மனோதத்துவ வேகம்! உமா! நீ என்னுடைய தத்துவத்தை ஒப்புக் கொள்கிறாயா?'' வாசுதேவன் மேடைப்பிரசங்கி பாணியில் பார்த்தார்.

''கரெக்ட்! 'ஏன்டா பாடத்தைப் படிக்கலே?' ன்னு இந்தக் காலத்துப் பையனைப் பார்த்துக் கேட்டால் அதை ஓர் அநாவசிய எதிர்ப்பாகக் கருதி 'அவசியம் படிக்கத்தான் ஆகணுமோ?' என்று அவன் கேட்கிற காலம்.'' உமாபதி ஆமோதித்தார்.

''என் பையன் விஷயத்திலே உங்க 'சைக்காலஜி' எல்லாம் பிரயோசனப் படாதுன்னுதான் நினைக்கிறேன். பயலின் பித்தம் எலுமிச்சம்பழம் தலையில் தேய்க்கிற அளவுக்கு முத்தியிருக்கிறது என்று இன்றுதான் தெரிய வந்தது. அடுத்துத் திருநீர்மலைக்குப் போய்த் திருமணத்தை முடித்துக் கொண்டு வரத் திட்டமிட்டிருந்தானாம். இந்தப் பெண் பார்க்கும் பிரச்னை வந்து அந்தக் குட்டை உடைத்து விட்டது. நான் 'வெரிகுட்' என்றால் பயல் விடியறதுக்குள்ளே தாலியைக் கட்டிக் கூட்டிக் கொண்டு வந்து விடுவான்.'' குருமூர்த்தி கடுமை கலந்த கிண்டலாகப் பேசினார்.

''ஹூம்! காலம் கெட்டுப்போச்சு வாசு! அந்தக் காலத்திலே நான் பெண் பார்க்கப் போன கதை உனக்குத் தெரியுமோ? இனி மாதிரி பெண்ணைக் கண்ணை மூடிக் கொண்டு கோட்டை விட்டேனே! உனக்குத் தெரியுமா?'' எத்தனையோ வருடங்கள் கழித்தும் அந்த நினைவு உமாபதியின் குரலில் பதற்றத்தைத் தோற்றுவிக்கத் தவறவில்லை.

''நீ பெண் பார்க்கப் போயிருக்கமாட்டாய்! பெண்ணுக்காகத் தவம் செய்யப் போயிருப்பாய். அந்தப் பெண் தெய்வம் நீ தவம் என்ற பெயரில் தூக்கம்தான் போடுறேய் என்று நினைத்துப் பிரத்யட்சமாகாமல் இருந்திருக்கும்!'' என்றார் வாசுதேவன்.



''நான் உனக்குச் சொல்லியிருக்க மாட்டேன் என்றுதான் நினைக்கிறேன். வெளியூரில் பெண்ணைப் பார்க்கப் போய்ச் சேர்ந்தேன். என் தகப்பனார் தாயார் உறவினர் புடைசூழத் தான் போயிருந்தேன். நாற்பது வருஷங்களுக்கு முன்னாலே உலகம் இவ்வளவு நாகரிக மடையவில்லையல்லவா? நான் சுபாவத்திலே கொஞ்சம் கூச்ச முள்ளவன். அந்தக் கூச்சத்தின் காரணமாக கொஞ்சம் பிடிவாதமுண்டு. 'குழந்தை, வந்து நமஸ்காரம் பண்ணம்மா' என்று பெண்ணுக்கு அப்பா சொன்னவுடனேயே எனக்கு ரொம்ப வெட்கம் வந்து விட்டது. முன்பின் தெரியாத ஒரு சிறு பெண் நம் முன்னால் வந்து நமஸ்காரம் பண்ணினாள், பெரிய ரிஷி, முனி புங்கவர் போல் கையைத் தூக்கி 'சர்வமங்க

ணானி பவந்து' என்று ஆசீர்வாதம் செய்துவிட முடியுமா? தலையைக் குனிந்து கொண்டேன். ஆனால் என்னை அறியாமலேயே கண்களையும் மூடிக் கொண்டு விட்டேன்.

''சில விநாடிகளில் என் முன் ஏதோ புடவைச் சலசலப்பும் கைவளை குலுங்கும் சத்தமும் கேட்டது. அப்போதுதான் நான் கண்களை விழித்துக் கொண்டு நிமிர்ந்து பார்த்தேன். நேராகப் பின் கட்டு வாசற்படியருகில் அந்தப் பெண் நின்று கொண்டிருந்தாள். பார்க்கச் சகிக்கவில்லை. அப்போதே நான் ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டேன். அப்புறம் வெளியே வந்து என் தகப்பனார் என்னவெல்லாமோ சொல்லிப் பார்த்தார். பெண்ணைக் கிளியென்றும் மானென்றும் வருணித்தார். அவருடைய ரசிகத் தன்மையை மனத்துக்குள் சபித்துக்கொண்டு நான் பிடிவாதமாக அந்தக் கல்யாணத்துக்கு ஒப்புக்கொள்ள மறுத்து விட்டேன். அந்த வருடத்திலேயே எனக்கு வேறு இடத்திலே திருமணமும் ஆகி விட்டது...''

உமாபதி படபடவென்று பேசி விட்டதால் மூச்சுவிடச் சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்டார்.



கண்மூடித் திட்டம்-வெறும்
காற்றடிப் பட்டம்
ஆடுது பார் பட்டம்-புதிய
ஐந்தாண்டுத் திட்டம்

அந்த நேரத்தில் உமாபதியின் பேச்சின் கடைசிப் பகுதியைக் கேட்டுக் கொண்டே கோபாலசாமி 'டக் டக்' என்று கைத்தடியை ஊன்றிக் கொண்டு கம்பளிக் கோட்டு சகிதம் வந்து சேர்ந்தார். கோபாலசாமி அந்தக் காலத்தில் ரெவினியூ இலாக்காவில் தாசில்தாராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர்.

''ஓஹோஹோ! நம்ம உமாபதி சார் அவருடைய கல்யாணக் கதையைச் சொல்றாராக்கும். முடிச்சுட்டாரா, இல்லே, 'கிளைமாக்ஸ்' கட்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறாரா?'' என்று கேட்டுக் கொண்டே கோபாலசாமி பெஞ்சியின்மேல் உட்கார்ந்தார்.

அந்த 'ரிடையர்டு' கோஷ்டியில் கடைசியாக வந்து சேர்ந்த கோபாலசாமி இன்னும் மற்றவர்களை ஒருமையில் அழைத்துப் பேசும் அன்யோன்யத்தைக் கையாள ஆரம்பிக்கவில்லை. அதனால் மற்றவர்களும் 'நீர், நீங்கள்' என்ற விதத்திலேயேதான் பேசினார்கள்.

''உங்களுக்கு அந்தக் கதை தெரியுமா, கோபாலசாமி! நீங்கதான் சொல்லுங்களேன்'' என்றார் வாசுதேவன்.

''சொல்லுகிறேன்! நம்ப உமாபதி சாருக்குக் கல்யாணம் ஆன மறு வருடம், ஏதோ காரியமாக மதுரைக்குப் போயிருந்தார். முன்னிரவு வேளையில் கோவிலுக்குப் போய் விட்டு மேலச் சித்திரை வீதி வழியாக ஒரு நண்பருடன் வந்து கொண்டிருந்தார். எதிரே கல்யாண ஊர்வலம் ஒன்று வந்து கொண்டிருந்தது. உமாபதி நின்று கவனித்தார். திறந்த காரிலிருந்த மணப் பெண்ணைப் பார்த்தார். 'ஆஹா! மாப்பிள்ளைப் பையன் கொடுத்து வைத்தவன். பெண் அழகின் அவதாரமாக இருக்கிறாள்' என்று சொல்லிப் பெருமூச்சு விட்டார், கூட வந்த நண்பர் சிரித்தார்.

''உனக்கு அதிருஷ்டமில்லே! பைத்தியக்காரத்தனமாக இந்தப் பெண் வேண்டாம் என்று நீதானே தட்டிக் கழித்தாய்?'' என்றார் நண்பர்.

''சே! சே! என்ன பேத்தல்! இந்தப் பெண்ணை நான் பார்க்கவே யில்லையே?'' என்றார் உமாபதி.

''ஏன்? போனவருஷம் கும்பகோணத்துக்குப் போயிட்டு வந்தது மறந்து போச்சா? நீதானே பிடிவாதம் பிடித்தாய்...?''

''அந்த அசட்டுப் பெண் ஒரு வருஷத்துக்குள்ளே இப்படி அழகாக மாறிடுமா? தனிஞ்ச குருவி மாதிரின்னு இருந்தது அப்போ?''

நண்பர் ஒருகணம் யோசித்தார். ''நாசமாகப் போச்சு போ! நீ அப்படியென்று அந்தப் பெண்ணைப் பார்க்கவேயில்லே. நீ பார்த்தது இந்தப் பெண்ணின் தங்கையை. அதனால் தான் மாட்டேனென்றுயா?''

அவர் மடமடவென்று சிரித்தார். உமாபதிக்கு மயக்கமே வந்து விட்டது. அதற்கு முன்கண்களில் நீர் துளித்துவிட்டது. ''ஹாம்! நான்தான் கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந்து தொலைத்தேனே! அதன் பலன் நான் விழித்துக் கொண்ட போது அவள் தங்கையையா பார்த்துத் தொலைத்தேன்?'' உமாபதி தலையில் அடித்துக் கொண்டார்.

கோபாலசாமி பேச்சை நிறுத்தி உமாபதியைப் பார்த்தார். 'சொன்னது சரிதானா?' என்று கேட்பது போலிருந்தது. வாசுதேவன் பலமாகச் சிரித்தார். ''பலே! பலே! உமா! இந்தக் கதையை உன் சம்சாரம் காது கேட்கிறாற் போலே சொல்லி விடாதே! கையிலே அகப்பட்டதைத் தூக்கிக் கொண்டு சண்டைக்கு வந்துவிடுவாள்'' என்றார் குருமூர்த்தி.

''ஹாம்! ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் பண்ணலாம் என்று அந்தக் காலத்தில் சுலபமாகச் சொல்லிவைத்தார்கள். என் கல்யாணத்தைப் பொறுத்த வரை அந்தக் காலத்தில் என் மாமனார் ஒரே ஒரு பொய்யைத்தான் சொன்னார். நான் அப்புறம் நினைத்துக் கொண்டேன்; அந்த மனிதர், அந்த ஒரு விஷயத்தில் உண்மையைச் சொல்லி விட்டு மற்றத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றி ஒன்பது பொய்யைச் சொல்லி யிருக்கலாமே என்று!'' வாசுதேவன் சோகத்தில் ஆழ்ந்து விட்டது போல நடித்தார்.

"அதென்ன பொய் வாசு!" என்று ஏக காலத்தில் குருமூர்த்தியும் உமாபதியும் கேட்டார்கள். கோபாலசாமியும் ஆவலுடன் வாசுதேவனைப் பார்த்தார்.

'அதுவா...? 'என் பெண் மகாசாது! பேசவே தெரியாது' என்று சொன்னார். அப்புறம்தான் அவளுக்குப் பேசுவதைத் தவிர அதுவும் புருஷனை எதிர்த்துப் பேசுவதைத் தவிர, வேறு ஒன்றும் தெரியாது என்று எனக்குத் தெரிய வந்தது." வாசுதேவனுடன் சேர்ந்து எல்லோரும் கோஷ்டி கானமாகச் சிரித்தார்கள்.

"நல்ல வேளை! இது தேவலையே! 'என் பெண் தங்கம் என்றால் தங்கம். வம்பு தும்புக்குப் போக மாட்டாள். யார் என்ன சொன்னாலும் ஒரு வார்த்தை கூடக் காதில் போட்டுக் கொள்ள மாட்டாள்' என்று நிஜமாகவே ஒரு தகப்பனார் சொல்லிப் பெண்ணின் கல்யாணத்தை நடத்தினாராம். அப்புறம்தான்,— 'அந்த மனிதர் சொன்னது வார்த்தைக்கு வார்த்தை உண்மை. பெண் டமாரச் செவிடு' என்று தெரிய வந்ததாம்." கோபாலசாமி தம் ஹாஸ்யத்தைக் கூறிவிட்டு மற்றவர்கள் ரசிக்கிறார்களா என்று தம் பார்வையைச் சுழற்றினார்.

"இன்றைக்கென்ன பேச்சு மிதிலா காண்டத்திலேயே சுற்றிச் சுற்றி வருகிறது! ஒரே சுயம்வர நினைவாக இருக்கிறதே!" என்றார் உமாபதி.

"ஏன்? மிதிலா காண்டத்துக்கு முன்னாலேயே நம்ப ராமாயணத்திலே ஆரண்யகாண்டம் வந்து விட்டது! அதோ பாரு உமாபதி! அந்தப் பெஞ்சியிலே ஒரு ராட்சதன் படுத்துக்கொண்டிருக்கிறான்!" என்று குருமூர்த்தி சற்றுத் தள்ளியிருந்த சிமெண்டு பெஞ்சியைக் காண்பித்தார். அதில் ஒரு முரட்டு ஆசாமி நிம்மதியாக அந்த வேளையில் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான். பக்கத்து ரோட்டுச் சந்தடியும் பூங்காப் பேச்சொலியும் அந்த மனிதன் தூக்கத்தைப் பாதித்ததாகத் தெரியவில்லை.

"ஹூம்! அந்தக் குறட்டை ஒலியிலும் ஓர் இன்பம் இருக்கத்தான் செய்கிறது" என்றார் வாசுதேவன், சங்கீத விமரிசக பாணியில்.

"குறட்டை ஒரு சாதாரணக் கலை இல்லை வாசு! ஓர் அபூர்வக் கலை. அந்தக் கலையை அப்பியசிக்கிறவனுக்கு அதைப் பற்றி ஒன்றுமே தெரியாது. பிறர் ரசிக்க வேண்டுமென்றே தோன்றிய கலை அது! யாரையாவது குறட்டை விடுகிற ஆசாமியைப் போய் 'ஏன் இப்படிக் குறட்டை விடுகிறாய்?' என்று கேட்டுப் பார். 'நானா குறட்டை விட்டேன்? இருக்காது!' என்பான். உனக்கு இந்த அனுபவம் உண்டா?" என்று வழக்கமான பள்ளிக்கூட உபாத்தியாயர் பாணியிலேயே ஆரம்பித்தார் உமாபதி.

"இந்தக் கேள்வியை வாசுவிடம் கேட்டு என்ன பயன்? இல்லை என்ற பதில்தான் வரும்! வாசு சமசாரத்திடம் கேட்டால் குட்டு வெளியாகும்!" என்றார் குருமூர்த்தி.

"அந்தக் காலத்திலே என்னோடே முத்து மாணிக்கம் என்று ஒரு பயல் படித்தான். கண்களை விழித்துக் கொண்டே வகுப்புகளில் தூங்குவதில் பெரிய எமன். ஆனால் தொடர்ந்து குறட்டையும் விட ஆரம்பித்தான். 'பயலே! நீ உருப்படமாட்டேடா! வகுப்பிலே குறட்டை விடுகிறவன் வாழ்க்கையிலே குட்டிச் சுவராகத்தான்டா போவான்' என்று அடிக்கடி நான் சொல்லுவேன்! ஆனால் அந்த முத்துமாணிக்கம் இப்போ, அந்தக் குறட்டையையே முதலாக வைத்துக்கொண்டு ஆயிரக் கணக்கிலே சம்பாதிக்கிறான். நான் திட்டினது தான் மிச்சம்!" என்று உமாபதி அலுத்துக் கொண்டார்.

"எங்கேயாவது சினிமாவிலே கும்பகர்ணன் வேஷம் போட்டுக் கொண்டானா?" என்று கேட்டார் குருமூர்த்தி.

"நோ! நோ! முதல்தரமான இலவம் பஞ்சு, மெத்தை தலகாணி இவற்றின் வியாபாரம் நடத்துகிறான் மாம்பலத்திலே! ஏகப்பட்ட கிராக்கி. இனிமேல் தூக்கம் வராது என்று கவலையால் உருகுபவர்கள்கூட அவன் தயாரிக்கும் படுக்கைகளில் படுத்தவுடன் மூன்றாம் நிமிஷம் குறட்டை விட ஆரம்பிக்கிறார்களாம்" உமாபதி மடமடவென்று சிரித்தார்.

"இதிலிருந்து படிப்புக்கும் வாழ்க்கைக்கும் சம்பந்தமில்லை என்று ருசுவாகிறது. அப்படித்தானே?" என்றார் வாசுதேவன்.

"முன்பெல்லாம் மாணவர்கள் படிப்பை வாழ்க்கையோடு பிணைத்துக் கொண்டு முன்னுக்கு வந்தார்கள். இந்தக் காலத்தில் தங்கள் படிப்பிற்கு முற்றும் மாறுபட்ட தொழிலில் ஈடுபடுகிறார்கள். இந்தக் காலத்திலே 'எபிஷியன்ஸி'யும் குறைந்து போச்சு. ஊக்கமும் குறைந்து போச்சு!" என்று உமாபதி பெருமூச்சு விட்டார்.

"'எபிஷியன்ஸி' குறைந்து போய்விட்டது என்று நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். அது கூடித்தான் இருக்கிறது குறுக்கு வழியிலே போவதில்!" என்று கூறிய வாசுதேவன் தொடர்ந்தார் :

"அப்போது நான் திருநெல்வேலியிலே சூப்பிரண்டெண்டாக இருந்தேன். பிரணதார்த்தி என்று ஒரு விடலைப் பையன் என் அலுவலகத்தில் குமாஸ்தா வேலை பார்த்துக் கொண்டிருந்தான். அடிக்கடி ஒரு நாள் இரண்டு நாள் என்று லீவு போட்டு விட்டு, பஜனை, பூஜை என்று போய்விடுவான். ஒரு நாள் நான் ஏதோ கடினமான 'பைலி'ல் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருக்கும் போது 'சார், எனக்கு மூன்று நாட்கள் லீவு வேண்டும். எனக்குச் சொந்தமான ஒரு நிலத் தகராறு காரணமாகக் கிராமத்துக்குப் போய் வர வேண்டியிருக்கிறது' என்றான்.

# வனஸ்பதிக்கு வர்ணம் கொடுக்கக்கூடாது

## என்பதற்கு மூன்று காரணங்கள்

பொது ஜனங்களுக்குப் பரிசுத்தமான நெய் கிடைக்கச் செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன் வனஸ்பதிக்கு வர்ணம் கொடுக்க வேண்டுமென்று சிலர் வற்புறுத்துகிறார்கள்—அப்படிச் செய்வதால் நெய்யில் வனஸ்பதி கலப்படம் செய்வதைத் தடுத்து விடலாமென அவர்கள் நம்புகிறார்கள். இந்த நம்பிக்கை தவறானது மட்டுமல்லாமல் வர்ணம் கொடுப்பது நடைமுறையில் இயலக்கூடியதுமல்ல.

1. கொடுக்கப்படும் வர்ணம் அகற்ற முடியாததாய் இருக்கவேண்டும். இல்லாவிடில் வர்ணம் கொடுப்பதினால் பிரயோஜனம் ஒன்றுமில்லை. நிஜமாக அகலாத கெட்டிச் சாயங்கள் விஷமாக மாறக்கூடியவை அல்லது புற்று நோயை உண்டு பண்ணக் கூடியவை என்று தெரிய வந்திருக்கிறது. அத்தகைய சாயங்கள் வனஸ்பதியில் சேர்க்கப்பட்டால் அன்றாட சாப்பாட்டில் வனஸ்பதியை உபயோகிக்கும் லக்ஷக்கணக்கான நம் மக்களின் ஆரோக்கியம் பாதிக்கப்படும்.

2. நம் நாட்டில் பல்வேறு பாகங்களில் தயாராகும் நெய்யிற்கே பல நிறங்கள் உள்ளன. இந்த இயற்கை நிறங்களில் சில வனஸ்பதிக்கு கண்ணைப் பறிக்கும் வர்ணம் கொடுத்தால்கூட அதை மறைக்கும் சக்திவாய்ந்தவை. ஆகையால் வனஸ்பதிக்கு வர்ணம் கொடுப்பதினால் நினைத்தபடி எண்ணம் ஈடேறாது.

3. நெய்யில் கலப்படம் செய்வதற்கு வனஸ்பதி ஒன்று மட்டும் அல்ல உபயோகிக்கப்படுகிறது. ஆனால் மற்ற பொருள்களைப் போலில்லாமல், பரிசுத்த உணவுப் பொருளான வனஸ்பதியைக் கலப்படம் செய்வது முற்றிலும் அபாயமற்றது. மிருகக்கொழுப்பு போன்ற இதர பொருள்கள் பரிசுத்தமற்றவையாதலால் சேர்க்கத் தகாதவை. நெய்யில் கலப்படம் செய்யும் இரக்கமற்றவர்களுக்கு வனஸ்பதி கிடைக்காமல் போனால், நெய்யில் கலப்படம் செய்வதற்கு இந்தத் தகாத பொருள்களை இன்னும் அதிகமாக உபயோகப்படுத்துவார்கள்.

வனஸ்பதி அபாயமற்ற, ஆரோக்கியமான, போஷாக்கு வாய்ந்த ஆகாரம். வனஸ்பதியில் வர்ணம் சேர்ப்பதானது ஒரு சுத்தமான ஆகாரத்தில் கலப்படம் செய்வதை தடுப்பதற்காக இன்னொரு சுத்தமான ஆகாரப் பொருளில் கலப்படம் செய்வது போல் ஆகும்.

**வனஸ்பதியிலேயே அபாயமற்ற, ஒரு மறைமுக வர்ணம் இருக்கிறது**

வனஸ்பதியில் சேர்க்கப்படும் எள்ளெண்ணெய் அபாயமற்ற, மறைமுக வர்ணத்தைப் போல் உதவுகிறது. ஒரு சுலபமான ரஸாயனப் பரீட்சை மூலம் இந்த வர்ணம் தவறாமல் தெரியவரும். ஆகையால் வனஸ்பதிக்கு வேறு வர்ணம் சேர்க்க அவசியமில்லை!

**உலகம் பூராவும் வனஸ்பதி போன்ற கொழுப்புகள் உபயோகிக்கப் படுகின்றன**

அமெரிக்கா - அயர்லாந்து - அர்ஜென்டினா - அல்பேனியா - அல்ஜீரியா - ஆஸ்திரேலியா - ஆஸ்திரியா - இங்கிலாந்து - இத்தாலி - இந்தியா - இஸ்ரேல் - ஈராக் - ஈரான் - எத்தியோப்பியா - ஏமன் - கனடா - கிரீஸ் - செக்கோஸ்லவேகியா - டென்மார்க் - துருக்கி - தென் ஆப்பிரிக்க யூனியன் - நார்வே - நெதர்லாண்ட்ஸ் - நைஜீரியா - பர்மா - பல்கேரியா - பாகிஸ்தான் - பிரான்ஸ் - பிரிட்டிஷ் கிழக்கு ஆப்பிரிக்கா - பிரேஜில் - பின்லாந்து - பெல்ஜியம் - போர்ச்சுகல் - போலந்து - மத்திய ஆப்பிரிக்க பெடரேஷன் - மலாயா - மெக்ஸிகோ - மொராக்கோ - யுனைடெட் அரபு ரிபப்ளிக் - யூகோஸ்லேவியா - ரஷ்யா - ருமேனியா - லிபியா - ஜப்பான் - ஜெர்மனி (கிழக்கு-மேற்கு) - ஸவூதி அரேபியா - ஸ்விட்ஜர்லாந்து - ஸ்வீடன் - ஹங்கேரி

அதிக விவரங்களுக்கு, இந்த விலாசத்துக்கு எழுதுங்கள் :

**தி வனஸ்பதி மான்யுபாக்சரர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா**

இந்தியா ஹவுஸ், போர்ட் ஸ்ட்ரீட், பம்பாய் 1

JWT/VMA-2691

''பொய்க் காரணம் சொல்லுகிறான் என்று நான் சந்தேகப்பட்டேன். 'மிஸ்டர் பிரணதார்த்தி! நிலச்சுவான்தார்களெல்லாம் இந்த மாதிரி உத்தியோகத்துக்கு வருவது தப்பு; நீர் ஒரு நிலச்சுவான்தார் என்பதை நிரூபிக்க உமது நில சம்பந்தப்பட்ட பட்டா முதலியவற்றைக் கொண்டு வந்து காண்பித்தால் உமக்கு வீடு கொடுப்பதைப் பற்றி யோசனை செய்யப்படும்' என்றேன் கண்டிப்பான குரலில். பிரணதார்த்தி பதில் பேசாமல் போய் விட்டான்.''

''இரண்டுமாதங்கள் கழித்து ஒருநாள் அதே பிரணதார்த்தி கையில் ஒரு வீடு அப்ளிகேஷனுடன் என் அறைக்குள் நுழைந்தான். அடுத்த கணத்தில் ஒரு முதியவரும், ஒரு யுவதியும் உள்ளே வந்தார்கள். முதியவர் எனக்கு வணக்கம் தெரிவித்தார். யுவதி நாணிக் கோணி நின்றாள். பிரணதார்த்தி தொடர்ந்தான். 'இவர் என் சாக்ஷாத் மாமா. அது அவர் பெண். அவளைத்தான் நான் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொள்ளப் போகிறேன். வீடு கொடுக்கும் விஷயத்தில் உங்களுக்குச் சந்தேகம் வரக் கூடாதே என்றுதான் இவர்களை இன்று வரவழைத்தேன்' என்றான்.''

எல்லோரும் சிரித்தார்கள். குருமூர்த்தி பொடி டப்பாவைத் திறந்து ஒரு சிமிட்டா கையில் எடுத்தார். காற்றின் வேகத்தில் தூள்கள் உமாபதியின் கண்களில் பட்டன.

''குரு! என் கண்களை ஏன் அவிக்கிறாய்? நல்ல பொடிப் பைத்தியம் போ! எந்தக் காலத்திலேயோ கேடி முனிரத்தினம் உன் கண்களில் பொடியை வீசினான் என்பதற்காக இப்போது நீ என் கண்களில் பொடியைத் தூவுகிறாயா?'' என்றார் உமாபதி.

''நம்ம குருமூர்த்திகிட்டே அந்தக் காலத்திலே பொடி புகையிலை முதலிய கெட்ட வழக்கம் ஒண்ணும் கிடையாது. அப்பாவி இன்ஸ்பெக்டராகத் தான் இருந்தார். ஒரு சமயம் தஞ்சாவூர் மாரியம்மன் கோவில் திருவிழாவின் போது ரொம்ப நாட்களாகப் பதுங்கி வாழ்ந்த கேடி முனிரத்தினம் நம்ம குருவின் கண்ணில் தட்டுப் பட்டு விட்டான். குருமூர்த்தி சாமர்த்தியமாகப் பூனை போலப் பதுங்கிப் போய் முனிரத்தினத்தைப் பிடித்து விட்டான். ஆனால் அந்தப் பாவி கையிலிருந்த பொடி மட்டையை, வேகமாகப் பிரித்துக் குருமூர்த்தியின் முகத்தில் வீசி விட்டான்.

''குருவுக்குக் கண் மூக்கெல்லாம் நெடி பிடித்து காற்போல ஆகி விட்டது. அந்த வேதனையில் பிடி தளரவே முனிரத்தினம் ஓடிப் போய் விட்டான். குரு ஏமாற்றத்துடன் கண்களையும் மூக்கையும் துடைத்துக் கொண்டான். மூக்கைத் துடைத்துக் கொண்ட போது, ஏதோ புத்துணர்ச்சி பெற்றது போல் பிரமை. அவ்வளவுதான்! அப்புறம் குரு முனிரத்தினத்தைப் பிடிக்கவேயில்லை! ஆனால் பொடி குருவைப் பிடித்துக் கொண்டு விட்டது.''

அப்போது எழுந்த சிரிப்பு தெருவில் ஓடிக் கொண்டிருந்த டிரான்ஸ்போர்ட் பஸ் சத்தத்தையும் அமுக்கிக் கொண்டு எழுந்தது.

அவர்களின் கோஷ்டி கானச் சிரிப்பொலி அடங்கவும் பூங்காவுக்குள் ஒரு கணவன் மனைவி ஜோடி நுழையவும் சரியாக இருந்தது. அவர்களைத் தாண்டி அந்த ஜோடி போகும் வரையில் உமாபதி சும்மா இருந்தார். பிறகு மெ

## காங்கிரஸ் ஆட்சியில்....

கைப் புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா, என்ன? காங்கிரஸ் ஆட்சி செலுத்தத் தொடங்கியதிலிருந்து இந்தப் பதினைந்து ஆண்டுகளாக மக்கள் உபயோகிக்கும் பொருட்களின் விலைகள் இரட்டித்தாற்போல் உயர்ந்து கொண்டே இருப்பது பிரத்தியட்சமான உண்மையாகும். அரசாங்கப் புள்ளி விவரங்களின்படி பண்டங்களின் மொத்த விலை சென்ற ஐந்தாண்டுகளில் மூன்றில் ஒரு பங்கு அதிகமாகியிருக்கிறது. எனவே பொதுமக்கள் சில்லறையாக வாங்கும்போது இவ்விலைகள் குறைந்தபட்சம் முன்பு இருந்ததைப்போல் இருமடங்காகவாவது உயர்ந்திருக்கும் என்று கொள்ளலாம்.

இதே காலத்தில் மக்களுடைய சராசரி வருமானம் நூற்றுக்கு அரை ரூபாய் (ரூ. 275.60 லிருந்து ரூ. 276.90 ஆக) உயர்ந்திருக்கிறதாம். அதாவது, ஒரு முழு ஆண்டில் இந்தியன் ஒருவனின் சராசரி வருமானம் வல்லிசாக 33 நயாபைசாக்கள் உயர்ந்துள்ளனவாம். விலை உயர்வு இரு மடங்கு; ஊதிய உயர்வு இருநூற்றில் ஒரு பங்கு. என்னே சோதனையிது!

விலை உயர்வுக்கு ஒரு முக்கியமான காரணம், சர்க்கார் காகித நோட்டுக்களை ஏராளமாக அச்சிட்டு, உடனடியாகப் பலன் தராத தங்களுடைய திட்டங்களை நிர்மாணிக்கும் கண்ட்ராக்டர் கூட்டத்துக்கும், ஊழியர்களுக்கும் அளிப்பதுதான். மக்கள் உபயோகத்துக்கு வரும் பொருட்கள் அதே அளவில் இருக்கும் போது, அவற்றுக்காக நாடு செலவிடக் கூடிய ரூபாய் நோட்டுக்கள் மட்டும் பெருகினால் விலைகள் உயரத்தானே செய்யும்? இது வரை வரிகள் கடன் போக சர்க்கார் 500 கோடி ரூபாய்க்கு நோட்டுக்கள் அச்சடித்து விநியோகம் செய்ததால் விலைகள் இரு மடங்காகியிருக்கின்றன. புதிய திட்டத்தின் ஐந்தாண்டுகளிலோ மேலும் 550 கோடி ரூபாய் அச்சடிக்கப் போவதாகக் காங்கிரஸ் கூறியிருக்கிறது. இது மிகவும் குறைவான மதிப்பீடாகும். சேமிப்பு, சர்க்கார் நிறுவனங்களின் லாபம் இவைகுறித்து சர்க்கார் வேண்டுமென்றே மிக உயர்வான மதிப்பீடுகள் செய்திருக்கிறது. எனவே இந்தப் பண வீக்கம் உண்மையில் 3500 கோடி ரூபாயாக இருக்கும் என்கிறார்கள் அறிஞர்கள். காங்கிரசுக்கு மீண்டும் பட்டா கொடுப்பது விலைகளை இன்றிருப்பது போல் பலப் பல மடங்கு உயர்த்தி விடும். ஐயமே வேண்டாம்!

ரென்று ''வாசு! அந்த ஊர்வலத்தைப் பார்த்தாயா?'' என்று கேட்டார்.

ரஸ்தா போக்குவரத்தில் ஒரு கணம் தன் பார்வையைச் செலுத்திய வாசுதேவன், ''ஊர்வலமா? எங்கே உமா?'' என்றார்.

''அந்தத் தம்பதிகள் நடந்து போகும் விதத்தைச் சொன்னேன். அவருக்குப் பின்னாலே இடைவெளி விட்டே அந்த அம்மாள் நடக்கிறாள் பாரு. அவர் நின்றால் அந்த அம்மாளும் 'டக்' என்று நின்று விடுவாள்.''

உமாபதி மேலும் தொடருவதற்குள் கோபாலசாமி குறுக்கிட்டார். ''ஒரு வேளை அவர்கள் இருவருக்குமிடையே ஏதாவது மனஸ்தாபம் தோன்றியிருக்கலாம்'' என்றார்.

''இந்த ரக தம்பதிக்கு 'ஊர்வல நாயன' ரகம் என்று பெயர். இந்தமாதிரி ஜோடிகளைப் பார்த்தால் எனக்குப் பெரிய இடத்துக் கல்யாணங்கள் தான் நினைவுக்கு வரும். அந்தமாதிரி கல்யாணங்களில் பிரபல நாதஸ்வர வித்வான்கள்தான் ஊர்வலத்தில் நாதஸ்வரம் வாசிப்பார்கள். அந்த நாதஸ்வரக்காரர் மாப்பிள்ளை - பெண் அமர்ந்திருக்கும் காருக்குச் சற்று முன்னும் போவார் கோஷ்டியுடன். நாதஸ்வரக்காரர் தெரு முனையில் நின்று வாசிக்க ஆரம்பித்தவுடன் கூட்டமெல்லாம் அவரைச் சூழ்ந்து கொண்டு விடும். ஊர்வல மோட்டார் பின்னால் சற்றுத் தூரத்தில் கவனிப்பாரற்று நிற்கும். இப்போது போகிறாரே அந்த மனிதர், அவர் வழியில் தென்படும் சிநேகிதர்களைக் கண்டு பேச ஆரம்பித்தால், அந்த அம்மாள் டக் என்று பின்னால் நின்று விடுவாள்.'' உமாபதி முகவாய்க் கட்டையைத் தேய்த்துக் கொண்டார். சில் என்று காற்று வீசத் தொடங்கியது.

குருமூர்த்தி சிரித்தார். ''பலே! உமா!..... தம்பதிகளை அப்படியானால்' 'இரட்டை மாட்டு வண்டி' ரகத்திலே தான் சேர்க்கணும். இரட்டை மாட்டு வண்டியில் மாடுகளைப் பக்கத்தில் பக்கத்தில்தானே பூட்டி ஓட்டுகிறார்கள். அந்த ரகத் தம்பதிகள் இடித்து இடித்துக் கொண்டு ஒரே வரிசையில் தான் நடப்பார்கள். அனேகமாக இவர்கள் நாகரிக வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாகவே இருப்பார்கள். மூன்று நிமிடத்துக்குப் பத்து ரூபாய் கொடுத்துக் கொள்ளை போகும் அவசரத்தில் டிரங்க் டெலிபோனில் பேசும் வியாபாரிகள் போல ரஸ்தாவின் போக்குவரத்து நிலையைக் கவனிக்காமலே பேசுவார்கள்'' என்றார்.

''குரு! பழி வாங்கிவிட்டியேபோலிருக்கே? பேஷ்! உன் சமாசாரம் எனக்குத் தெரியாதாக்கும்? நீ 'ஏரோப்ளேன் வால்' ரகத்தைச் சேர்ந்தவன். ஏரோப்ளேனில் திசை திருப்பங்களுக்கெல்லாம் ஏரோப்ளேன் வால்தான்பொறுப்பு. இந்த ரகத் தம்பதிகள் 'ஊர்வல நாயன' ரகத்துக்கும் 'இரட்டை மாட்டு வண்டி' ரகத்துக்கும் இடையே உள்ள நிலையில் இருப்பவர்கள். ஆனால் கணவனின் செய்கைகள் அசைவுகள் எல்லாவற்றுக்குமான கன்ட்ரோல்களெல்லாம் மனைவி கையில்தான் இருக்கும். 'பராக்குப் பார்க்காமல் போங்கள்! அதோ வரும் சிநேகிதருடன் வளவளவென்று பேசிக் கொண்டு நின்று விடாதீர்கள்!' என்று ஆக்ஞைகள் அந்த அம்மாளிடமிருந்து நிமிஷத்துக்கு ஒரு தடவை பறக்கும்! உன்னை அப்படித்தானே உன் சம்சாரம் ஆட்டி வைக்கிறாள்!'' வாசுதேவன் யுத்தத்தில் வெற்றி பெற்ற வீரன் போல் எல்லாரையும் பார்த்தார்.

உமாபதி எழுந்து விட்டார். ''குரு! காற்று ரொம்பச் சில் என்று இருக்கிறது! கிளம்பலாமா!'' என்றார் பொதுப்படையாக.

வாசுதேவனும் குருமூர்த்தியும் கூட எழுந்து விட்டார்கள். ''என்ன குரு! உன் பையன் சுயம்வர விஷயத்தில் என்ன முடிவுக்கு வரப் போகிறாய்?'' என்றார் வாசுதேவன். பத்தடி முன்னால் கோபாலசாமியும் உமாபதியும் நடந்து கொண்டிருந்தார்கள்.

குருமூர்த்தி சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுத் தணிந்த குரலில் ''என்ன முடிவுக்கு வருவது? அந்தக் காலத்திலே என் அப்பா சொல்லுக்குக் கட்டுப்பட்டு அவர் தேர்ந்தெடுத்த பெண்ணுக்குத்தான் தாலியைக் கட்டினேன். வெளி உலகத்துக்குத்தான் நான் போலிஸ் புலியே தவிர வீட்டுக்குள்ளே என்னை ஒரு பூனையாகத்தான் வைத்திருக்கிறாள் அவள். நம்ப பயனாவது அவன் இஷ்டப்படி கல்யாணம் பண்ணிக் கொண்டு சுதந்திரமாக இருந்து விட்டுப் போகட்டுமே!'' என்றார்.

வாசுதேவன் சிரிப்பொலி உமாபதியின் கவனத்தை மாத்திரம் கவரவில்லை. பூங்காவில் உட்கார்ந்திருந்த மற்றும் சிலரும் திரும்பிப் பார்த்தார்கள். ஆனால் குறட்டை விட்டுக் கொண்டிருந்த ஆசாமி மாத்திரம் இன்னும் குறட்டை விட்டுக் கொண்டுதானிருந்தான். நான்கு ஓய்வு பெற்ற நண்பர்கள் அலசி ஆராய்ந்த எந்த விஷயமும் அவனைப் பாதித்ததாகத் தெரியவில்லை!

# பெரிய இடத்துக் கல்யாணம்..!

## டி.எஸ். கோதண்டராமன்

### காட்சி 1

முத்துசாமி (மலர்ந்த முகத்துடன் வீட்டுக்குள் நுழைந்து கொண்டே): கப்பு, கப்பு! இங்கே பார்த்தாயா? என் கையிலே என்ன இருக்கிறதென்று பார்.

கப்பு (சமையற்கட்டிலிருந்து வெளியே வந்தபடி): என்ன, என்ன கொண்டு வந்திருக்கீங்க? ரொம்ப நாட்களாகக் கேட்டுக் கொண்டிருந்தேனே, புடவை அதுவா?

முத்து: சேச்சே, உனக்கு எப்போதும் புடவை ஞாபகம்தான்! வருஷத்துக்கு எட்டுப் புடவை வாங்கிக் கொடுத்தாலும், மறுபடியும் 'புடவை எங்கே?' என்றுதான் கேட்பாய்!

கப்பு (ஏமாற்றத்துடன்): சரி, சரி. நான் உள்ளே போகிறேன்.

முத்து: இந்தா. ஒரு சந்தோஷ சமாசாரம் சொல்லப் போகிறேன். கேட்டு விட்டுப் பிறகு போ.

கப்பு (எரிச்சலுடன்): போதுமே, அன்றி வாரம். விஷயத்தைச் சொல்லுங்களேன். உள்ளே அடுப்புக் காயுது.

முத்து: வந்து.....என்னுடைய சிநேகிதன் ராமகிருஷ்ணன்னு ஒருத்தனைப் பற்றிச் சொல்லியிருக்கேனே, ஞாபகமிருக்கா? இருபது வருஷங்கள் கழிச்சு இன்னிக்குச் சாயங்காலம் அவனைச் சந்திச்சேன்.

கப்பு: உடனே அவரையும் அழைத்துக் கொண்டு ஹோட்டலுக்குப் போய் எட்டு ரூபாயைத் தொலைச்சீங்க. இதுதானே சந்தோஷ சமாசாரம்?

முத்து: கப்பு! உன்னோட தரித்திர நினைப்பு உன்னை விட்டு என்றைக்கும் போகாது. நான் வாங்கிக் கொடுத்துச் சாப்பிடுகிற நிலையிலே இல்லை அவன். இப்போ அவன் வீட்டைக் காவல் காக்கிற நாய்க்கு எட்டு ரூபாய் செலவாகுது. ஆமா, தெரிஞ்சுக்கோ.

கப்பு: சரி, தெரிஞ்சுக்கிட்டேன். அப்புறம்?.....

முத்து: அவன் பெண்ணுக்குப் பதினெட்டாம் தேதி வெள்ளிக்கிழமை அன்னிக்குக் கல்யாணமாம். கையிலே பத்திரிகையைக் கொடுத்துக் குடும்பத்தோட கட்டாயமாக வந்து சேரணும்னு உத்தரவு போட்டு விட்டான்.

கப்பு: அவர் உத்தரவு போட்டுட்டாரில்ல, அப்போ சிரப்படிய வேண்டியதுதான்!

முத்து: இந்தா, கப்பு! உனக்கு அவனைப் பற்றி ஒன்றும் தெரியாது. நானும் அவனும் அந்தக் காலத்திலே எவ்வளவு அன்னியோன்யம்? ஒரே பாயிலே படுத்துப் புரண்டவங்க. இன்னிக்குச் சாயங்காலம் நான்பாட்டுக்கு நடந்து வந்துகொண்டிருந்தேன். சுங்காராம் மங்காராம் துணிக் கடையிலிருந்து வெளியே வந்த இந்தப் பயல் என்னைப் பார்த்து விட்டான்!

கப்பு: அப்படியே ஓடி வந்து உங்களைக் கட்டிக்கிட்டாராக்கும்!

முத்து: கப்பு, நீ சும்மா கிண்டல் பண்றே. ஆனால் உண்மையிலேயே நடந்தது அதுதான். என்னை விட்டுப் பிரியவே மனசில்லே அவனுக்கு. என்ன பண்றது? பெண் கல்யாணத்துக்கு இன்னும் மூணு நாள்தானே இருக்கு. மூச்சு விடக்கூட நேரமில்லையாம்.

கப்பு: ஏன், அதுக்குன்னு ஒரு ஆளைப் போடறதுதானே?

முத்து (விறைப்புடன்): இது எங்கேயோ பத்திரிகையிலே படிச்ச ஹாஸ்யம் மாதிரி இருக்கிறதே!

கப்பு: தேவலையே! படிச்சதெல்லாம் உங்களுக்கு ஞாபகம்கூட இருக்கா?

முத்து: நான்சென்ஸ்! உனக்கு வாய் ரொம்ப நீண்டு போச்சு. சரி, சரி. வெள்ளிக்கிழமையன்னிக்கு விடியற்காலை அஞ்சு மணிக்கெல்லாம் நாம் புறப்படத் தயாராக இருக்கணும். உன் புத்திர ரத்தினங்களிடத்திலேயும் இப்பவே சொல்லிப்புடு. வழக்கம் போல அன்னிக்கு எட்டு மணிக்கு மேலே எழுந்திருக்கப் போகிறான்கள்!

கப்பு: ரொம்பக் கண்டிப்பாகத்தான் தாக்கீது பண்றீங்க. ஏன், நாளைக்கே எல்லாரையும் தயாராக இருக்கச் சொல்லட்டுமா?

முத்து: இப்ப, இப்படித்தான் இடக்குப் பண்ணுறியே. நீ. அன்னிக்கு ராமகிருஷ்ணன் பண்ணுகிற உபசாரத்தைப் பார்த்தால் அப்படியே மயங்கி விழுந்து விடுவே.

கப்பு (உள்ளே போய்க் கொண்டே): நீங்க என் பின்னாலேயே நின்னுக்கிட்டிருங்க. கிழே விழாமல் பிடிக்கலாம்.

### காட்சி 2

[மறு நாள் காலை முத்துசாமியின் மூத்த மகன் சுந்து கையில் ஒரு கடிதத்துடன் உள்ளே வருகிறான்.]

சுந்து: அப்பா, அப்பா! சித்தப்பாகிட்டேயிருந்து கடிதாசு வந்திருக்கு.

முத்து: இங்கே கொண்டா. (கடிதத்தை வாங்கிப் படிக்கிறார்.)

கப்பு: யாரு கடிதாசு போட்டிருக்காங்க? (முத்துவின் முகம் மாறுவதைக் கண்டு) நான் இப்ப என்ன கேட்டுப்புட்டேன்? எதற்காகக் கோபம் தெறிக்கிற மாதிரி பார்க்கிறீங்க? எங்க வீட்டு மனுஷா யாராவது வருவதாகக் கடிதம் போட்டாலே உங்களுக்கு இப்படி ஆத்திரம் பொத்துக் கொண்டு வரும்.

முத்து (தலையில் அடித்துக் கொண்டே): கப்பு! உன்னை நான் என்ன சொன்னேன்? எதற்காக மயான காண்டம் நடிக்கிறே?

கப்பு: பின்னே? லெட்டர் எங்கேயிருந்துன்னு கேட்டதற்குப் பதில் சொல்லாமே, சும்மா முறைச்சுப் பார்த்தீங்கன்னு....

முத்து: என் தம்பி கடிதம் போட்டிருக்கான். வெள்ளிக்கிழமை காலம்பற இங்கே வந்து சேருகிற ரயிலிலே அம்மாவை அனுப்பறானாம். ஸ்டேஷனுக்கு வந்து அழைத்துக் கொண்டு போகணுமாம்.

சுந்து: ஆ! பாட்டி வராளா? வரட்டும். வரட்டும். இனிமேல் தினம் ராத்திரி பல

காரம் கிடைக்கும். அப்பா, நானும் ஸ்டேஷ னுக்கு வரேம்பா...

முத்து (கையை ஓங்கி): மடப் பயலே, குட்டிச்சுவராட்டமா வயசாச்சு. வெட்கமில் லாமல் குதிக்கிறதைப் பாரு. சேச்சே! இந்தச் சமயம் பார்த்து அம்மா வருகிறாளே!

கப்பு: வந்தால் என்னவாம்? நானும்தான் ரொம்ப நாட்களா வீட்டிலேயே அடைந்து கிடக்கிறேன். அம்மா வந்து குழந்தைகளைப் பார்த்துக் கொண்டாலாவது ரெண்டு இடத் துக்குப் போயிட்டு வருவேன்!

முத்து: உனக்கு எப்பவும் சுயநலம்தான். வெள்ளிக்கிழமை அல்லிக்கு ஒரு முக்கியமான கல்யாணத்துக்குப் போகணும்னு சொன் னேனே, ஞாபகமில்லையா? இப்போ, இந்தத் தொல்லைக்கு என்ன செய்யறது?

கப்பு: தொல்லையுமில்லே, கொல்லையுமில்லே; அம்மாவை வீட்டிலே கொண்டு வந்து விட் டுட்டு நீங்க மட்டும் கல்யாணத்துக்குப் போய் விட்டு வாங்க.

முத்து: நோ, நோ. ராமகிருஷ்ணன் ரொம்பக் கண்டிப்பாகச் சொல்லியிருக்கான், குடும்பத்தோட வரணும்னு!

கப்பு: நல்லதாகப் போச்சு. ஸ்டேஷனிலே யிருந்து அப்படியே அம்மாவையும் அழைத்துக் கொண்டு போயிடுவோம்!

முத்து: உன் யோசனையிலே தீயை வை. (சிறிது நேரம் யோசித்து விட்டு) அ.. இப் படிச் செய்தால் என்ன?

கப்பு: எப்படி?

முத்து: 'நான் ஆபீஸ் காரியமாக வெளியூர் போகிறேன். அம்மாவை அடுத்த வாரம் அனுப்பு'ன்னு ஒரு தந்தி கொடுத்துடறேன்.

கப்பு: நீங்க சொல்றது நல்லாயில்லே. பெத்த தாயிடமா பொய் சொல்லுவாங்க?

முத்து: சரிதான்டி, போடி! கல்யாணத் துக்குப் போகாமல் இருந்தாலோ, ராமகிருஷ் ணன் சும்மா விடமாட்டான். டேய், சுந்து! பேப்பரும் பேனாவும் கொண்டு வா. உன் சித்தப்பாவுக்கு ஒரு தந்தி கொடுத்திடலாம்.

### காட்சி 3

[வியாழக் கிழமை. முத்துசாமி வேலை பார்க்கிற அலுவலகம். காலை, சுமார் பதினொன்றரை மணி. மானேஜரின் அறைக்குள் நுழைகிறார் முத்துசாமி.]



தானே அவன் வரணும்? நந்து, தெருப் பக்கத்திலே போய்ப் பார், சுந்து வரானான்னு.

நந்து: நான் மாட்டேன், போ. அப்பா! கல்யாணம்னு அங்கே பீப்பீ ஊதுவானே?

முத்து: சனியன், சனியன்! ரொம்பக் கவலை இவனுக்கு! அந்த மணிக்கே கிளம்பணும்னு நாலு நாள் முன்னாடியே முட்டிண்டேன். பிரயோசனம்? ஏழு மணிக்கு வீட்டை விட்டு ஒரு அடி எடுத்து வைத்தபாடில்லே!

நந்து: அப்பா, அப்பா கார்!

(டாக்ஸி வந்து நிற்கிறது)

சுந்து (இறங்காமலே): ஏறிக்குங்கோ, எல்லாரும். நேரமாச்சு. அட்டே, பேப்பர் பையன் இப்பத்தான் வரானா?...

முத்து: மடையன், பேப்பர் பார்க்க நல்ல சமயம் பார்த்தே? (டாக்ஸியில் அமர்ந்து கொண்டு) நேரே அடையாற்றுக்குப் போ, டிரைவர்.

(அரை மணிக்குப் பின்)

நந்து: அதோ பாரு அப்பா! பெரிய பந்தல் தெரியறது.

முத்து (மகிழ்ச்சியுடன்): அதுதான்டா, நாம் போகிற கல்யாண வீடு.

சுந்து: ஏம்பா, கல்யாண வீடு இருக்கிற தெருவுக்கே வந்து விட்டோம். ஆனால் ஒரு சந்தடியையும் காணோமே?

கப்பு: மேள தாளத்தையும் காணலே. நாம் வீடு தப்பி வந்திருக்கோம் போலிருக்கு.

முத்து: இ...ல்...லை...லை..... இதே விலாசம்தான் பத்திரிகையிலே போட்டிருக்கு. ஒரு வேளை, கல்யாணம் அடுத்த வெள்ளிக்கிழமையன்னைக்குஇருக்குமோ? (குழம்புகிறார்)

சுந்து: இல்லேப்பா, பதினெட்டாம் தேதி என்று போட்டிருந்தது. இன்னைக்குத்தான் தேதி பதினெட்டு!

(முத்துசாமி இறங்கிப் போய் யாருடனோ பேசி விட்டுத் திரும்புகிறார்.)

கப்பு, சுந்து, நந்து: என்னவாம்?

முத்து (சாந்தமில்லாமல்): கல்யாணத் தேதியைத் தள்ளிப் போட்டு விட்டார்களாம்!

கப்பு: அடக் கடவுளே! அப்புறம்?

முத்து: அழைப்பிதழ் கொடுத்திருந்தவர்களுக்கெல்லாம் முடிந்தவரை செய்தி தெரிவித்தார்களாம். நம் ரோட்டிலே பார்த்து எனக்குப் பத்திரிகை கொடுத்திட்டதாலே, விலாசம் தெரியலே! நேத்திக்குச் சாயங்காலம் இன்னிக்குக் காலம்பர பேப்பர்களிலேயும் தனியாக நோட்டீஸ் போட்டிருக்கிறார்களாம். ராமகிருஷ்ணனோட சம்சாரத்துக்குத் திடீர்னு உடம்பு சரியில்லாம போச்சாம். வேலூருக்குப் போயிருக்கார்.......

கப்பு: நான், வீட்டைத் தேடி வந்த விருந்தாளிகளை வெளியிலைப் பிடித்துத் தள்ளாத குறையா விரட்டி அடிச்சேங்க, நேத்திக்கு.

சுந்து: பாட்டியும் வரவேண்டாம்னு தந்தி கொடுத்தே! பேப்பரையும் பிரிக்க விடல்லே!

முத்து (முணுமுணுத்த குரலில்): ஏன், ஆபீஸில் எனக்கு வரவேண்டிய நல்ல பெயரும் அதிகப்படித் தொகையும் போச்சு.

நந்து: அப்போ, பீப்பீ இல்லையாதாப்பா?

சுந்து. பீப்பீ இல்லையாது: பெப்பே உண்டு!

(முத்துசாமி முறைக்கிறார்)

கப்பு: அவனை முறைச்சுப் பார்த்து என்ன பண்ணுறது? ஆயிரம் வேலையைத் தள்ளிப் போட்டுட்டு, அவசரமா இங்கே வந்தோம் இல்லே....!

முத்து: சரி, சரி. உன் பிரலாபத்தை இங்கேயே ஆரம்பிச்சுடாதே. (டிரைவரிடம்) திரும்பி வீட்டுக்குப் போப்பா.

நந்து: அப்பா, லட்டு, ஜிலேபி....

சுந்து: எல்லாம் நோட்டீஸ்லே இருக்கு!

(அவன் காதைப் பிடித்துத் திருகுகிறார் முத்துசாமி. டாக்ஸி எழுப்பிய ஒலியில் அவன் கதறல் மங்குகிறது.)

## காங்கிரஸ் ஆட்சியில்.....

கொள்ளை லாபம் சம்பாதிப்பவர்களைத் தண்டிக்க வேண்டியது சர்க்காரின் பொறுப்பு என்பது உலக வழக்கு. ஆனால் நம் காங்கிரஸ் சர்க்காரோ தொழில் துறையில் புகுந்து, தானே கொள்ளை லாபம் சட்டி வந்திருக்கும் ஒரு விவரத்தைப் பாருங்கள்!

1956–57ம் ஆண்டு, உள்நாட்டில் உற்பத்தியாகும் சிமெண்ட் விலை, வெளியிலிருந்து இறக்குமதி செய்த சிமெண்ட் விலையை விடக் குறைவாக இருந்தது. எனவே, வெளி நாட்டிலிருந்து சர்க்கார் இறக்குமதி செய்த சிமெண்டை இங்கு நிலவும் குறைந்த விலைக்கு விற்றால், 45 லட்சம் ரூபாய் நஷ்டமேற்படுமெனத் தெரிந்தது. இதை ஈடு செய்வதற்காக அது உள்நாட்டு சிமெண்டின் விலையை உயர்த்தியது. இது நியாயமே! ஆனால் எந்த அளவுக்கு உயர்த்தியது என்ற அநியாயத்தை பார்லிமெண்டின் மதிப்பீட்டுக் கமிட்டியே கண்டித்திருக்கிறது. உள்நாட்டு சிமெண்டின் டன்னுக்கு ஏழு ரூபாய் விலையை ஏற்றி அதனால் மூன்றரைக் கோடி ரூபாய் சம்பாதித்தது அரசாங்க வர்த்தக கார்ப்பரேஷன். அதாவது அந்நிய சிமெண்ட் விற்பனையில் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடு செய்தது போக மூன்று கோடி ரூபாய்க்கு மேல் சம்பாதித்தது. ஒரு பிடிகை கூட சிமெண்ட் உற்பத்தி செய்திராத சர்க்கார், மற்றவர்கள் உற்பத்தி செய்த பண்டத்தை விநியோகிப்பதில் ஏகபோக உரிமை பெற்றிருந்ததால் இவ்வாறு அதிகமாக லாபம் சம்பாதித்திருக்கிறது! இந்த லாபமெல்லாம் சிமெண்ட் வாங்கிய பொது மக்களிடமிருந்து கிடைத்ததுதான்!

சர்க்கார் தொழில் நடத்தினாலும் அதுவே ஏகபோக உரிமை பெற்றிருக்கும். அதனுடன் யாரால் போட்டியிட முடியும்? எனவே அது நிர்ணயித்த விலையை மக்கள் அழுதுதான் தீர வேண்டும். அந்நிய நாட்டு விருந்தாளிகள் பார்த்துப் பிரமிப்பதற்காக உருவாகும் அணு உலைகளுக்கும், விமானக் கப்பல்களுக்கும் நிதி கிடைப்பதற்காகப் பொது மக்கள் துன்புறுத்தப்படுவார்கள். தனி நபர் முதலாளித்துவம் போய் சோஷலிஸம் வருவதன் விளைவு இதுவே!

அத்தியாயம் பத்தொன்பது

## புலிக் குகையில்

சித்திராவின் வீட்டுக்கு முருகையன் வந்ததிலிருந்து அந்த வீட்டுத் தாத்தாவுக்குத்தான் வேலை அதிகமாய்ப் போய்விட்டது. முருகையனுக்கு வேண்டிய வசதிகளைக் கவனிப்பதற்காகச் சித்திரா அவரை வாட்டி வதைத்து விட்டாள். முருகையனுக்கு எப்போதுமே தனக்காக மற்றவர்களைச் சிரமப்படுத்தி வேலைவாங்குவது பிடிக்காது. அதிலும் வயதில் பெரியவரான அவருக்குத் தொல்லை கொடுப்பதை அவன் விரும்பவில்லை.

ஆனால், பெரியவரோ ஒவ்வொன்றையும் தாமே இழுத்துப் போட்டுக் கொண்டு உற்சாகமாய்க் கவனித்தார். காரணம் அவர் முருகையன் மீது எவ்வளவுக்கெவ்வளவு அக்கறை காட்டினாரோ அவ்வளவுக்கவ்வளவு வருமானமும் கிடைத்தது. சித்திரா பண விஷயத்தில் சற்றுத் தாராளமாகவே நடந்து கொண்டாள்.

முருகையன் ஒரே வாரத்துக்குள் அவரிடம் கார் ஓட்டுவதற்குப் பயிற்சி பெற்றுக் கொண்டான். ஒவ்வொரு நாள் காலை நேரத்திலும் கடற்கரைச் சாலைக்குக் கார் கிளம்பி விடும். மூன்றாவது நாளே முருகையன் காரைத் தனியாக ஓட்டிச் செல்வது கண்டு மூக்கின் மேல் விரல் வைத்தார் தாத்தா. அன்றைக்கு வீட்டுக்குத் திரும்பும்போது முருகையன் அதை ஓட்டிக்கொண்டு வந்தான். தாத்தா அவனுக்கு அருகில் இருந்தார்.




மாடியிலிருந்து அந்தக் காட்சியைக் கண்ட சித்திராவுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. தன்னுடைய முருகையன் ஏதோ ஒரு மகத்தான சாதனையை வெற்றியுடன் முடித்துவிட்டுத் திரும்பியதுபோலிருந்தது அவளுக்கு. பரபரப்போடு கீழே இறங்கி ஓடி வந்தாள். முருகையன் காரைத் தோட்டத்தில் நிறுத்தி விட்டுக் காரிலிருந்து




இறங்குவதற்குள் அவனுடைய கரங்களைப் பற்றிக்கொண்டு குதூகலத்துடன் குலுக்கினாள்.

"அத்தான்! நீங்கள் பொல்லாத அத்தான்; மிக மிகப் பொல்லாதவர்!"

இந்த எதிர்பாராத அன்பின் ஆதிக்கம் முருகையனுக்கு ஒரு கணம் அதிர்ச்சியைத் தந்தது. அவளுடைய கரங்களின் மென்மையையும் உள்ளத்தின் துணிவையும் தாங்க முடியாமல் அவன் நாணித் தலை கவிழ்ந்தான்.

"சித்திரா! நான் ஒன்றும் இனிமேல் மாப்பிள்ளைக்குச் சொல்லித் தர வேண்டியதில்லை. அவரே எனக்குச் சொல்லிக் கொடுப்பார் போல் இருக்கிறது!" என்று துதி பாடினார் தாத்தா.

"ஏன் நாளையிலிருந்து எனக்கு லீவு கொடுத்து விட்டு நீயே கூடப் போய் வரலாமே!"

"வேண்டாம் சித்திரா!" என்றான் முருகையன்.

சித்திராவின் முகம் சுருங்கியது.

"இன்னும் நாலைந்து நாட்களில் நான் நன்றாய்க் கற்றுக் கொண்டவுடன், நீ எங்கு அழைத்துப் போகச் சொல்கிறாயோ அங்கு அழைத்துக் கொண்டு போகிறேன்."

சுருங்கிய சித்திராவின் முகம் ஆனந்தத்தால் மலர்ந்தது. குதித்தவாறே வீட்டுக்குள் ஓடி மறைந்தாள். முருகையன் தாத்தாவிடம் காரின் இயந்திரங்கள் செய்யும் வேலைகளைப் பற்றிக் கேட்கலானான். எதையும் எளிதில் புரிந்து கொண்டு, கண்ணால் கண்டதையும் காதால் கேட்டதையும் செயலுக்குக் கொண்டு வரத் துடிக்கும் ஆர்வம் அவனிடம் இருந்தது.

வீட்டுக்குள் தாத்தா மற்றவர்களிடம், "மாப்பிள்ளை கார் ஓட்டக் கற்றுக் கொள்வார் என்று நினைத்தேன். மோட்டார் 'மெகானிக்'காகவே ஆகி விடுவார் போலிருக்கிறது!" என்று பெருமையடித்துக் கொண்டார். அந்தப் பெருமையெல்லாம் தனக்கே சொந்தம் என்று சொல்லிக் கொண்டாள் சித்திரா.

மாணிக்கம் முருகையனுக்குத் தம்முடைய அலுவலகத்தில் ஓர் அறையை ஒழித்துக் கொடுத்து அவன் எழுதவேண்டிய கணக்குகளைச் சொல்லி வைத்தார். முருகையன் அவற்றையும் ஒழுங்காகவே எழுதி வந்தான். உண்மையிலேயே அவனுடைய வேலைத் திறன் அவரை வியக்கச் செய்தது. பல வகைகளிலும் அவனால் தமக்கு உதவி என்ற எண்ணம் அவரிடம் உருவாகிக் கொண்டு வந்தது.

ஒரு நாள் முற்பகலோடு அலுவல்கள் முடிந்து விட்டதால் விரைவிலேயே வீட்டுக்குத் திரும்பி வந்தான் முருகையன்.



அவன் முன்பு வாக்களித்தபடி தன்னைக் காரில் அழைத்துக் கொண்டு வெளியில் போகவேண்டுமென்று பிடிவாதம் பிடித்தாள் சித்திரா. முருகையனுடைய மனமும் அப்பொழுது பொழுதுபோக்கை விரும்பியது.

''சரி, கிளம்புவோம்'' என்றான் முருகையன்.

தன்னுடைய அறைக்குள் நுழைந்து அரை மணி நேரத்துக்கெல்லாம் புதிய தோற்றத்துடன் வெளியில் வந்தாள் சித்திரா. அலங்கரிப்புக் கலையில் அவள் பெற்றிருந்த தேர்ச்சி முருகையனைப் பிரமிக்க வைத்தது. தோகை மயிலைப் போன்ற எழிலுடன் நடந்து சென்று காருக்குள் அமர்ந்தாள். முருகையனுடைய கரங்கள் காரின் 'ஸ்டியரிங்'கைப் பற்றியவுடன் இலேசாக நடுங்கின. பெறுவதற்கரியதொரு வாய்ப்பை அவனாலேயே நம்ப முடியாததோர் அதிர்ஷ்டத்தை அடைந்தவன் போல் மெல்லக் காரை எடுத்துக் கொண்டு தெருவுக்கு வந்தான்.

''எங்கு போகலாம் சித்திரா?''

''எங்கே அழைத்துக்கொண்டு போகச் சொன்னாலும் போவதாய்ச் சொல்லியிருக்கிறீர்களல்லவா?'' சித்திரா தன் கழுத்தை வளைத்துக் கொண்டு தன் விழிகளால் குறும்புத்தனமாகச் சிரித்துக் கொண்டு இப்படிக் கேட்டாள்.

''ஆமாம், சொன்னேன்.''

''மாமல்லபுரத்துக்குக் காரை விடுங்கள். நான் வழி சொல்லுகிறேன்.''

''சித்திரா!''

''உங்களுக்குப் பயமாக இருந்தால், என்னிடம் காரைக் கொடுக்கிறீர்களா?''

சென்னை நகரத்துக்குள் எங்காவது போகச் சொல்வாள் என்று நினைத்த முருகையன், அவள் விருப்பத்தைக் கண்டு ஒருகணம் தயங்கினான். ''வீட்டில் தேடமாட்டார்கள்; நான்சொல்லி விட்டுத்தான் வந்திருக்கிறேன்'' என்றாள் சித்திரா.

கார் நகரத்தைக் கடந்து மாமல்லபுரத்தை நோக்கிச் சென்றது. மணம் நிறைந்த மல்லிகைக் காற்றை நுகர்ந்தபடியே மதுவுண்ட வண்டு போல் ஒரே நிதானத்துடன் காரை ஓட்டிக்கொண்டு சென்றான் முருகையன். எதிரில் தெரிந்த உலகம் அவனுடைய இன்ப நினைவுகளுக்கு வழி விட்டு வெகு வேகமாகப் பின்னால் ஓடி மறைந்தது.

''வேகம் இவ்வளவுதானா?'' என்று கேட்டாள் சித்திரா.

அது வரையில் ஐம்பது மைல் வேகத்தில் போய்க் கொண்டிருந்த கார் அறுபது மைல் வேகத்தில் பறந்தது. முள்ளைப் பார்த்து விட்டு, ''ஊஹூம், போதவே போதாது!'' என்றாள் சித்திரா. முள் இப்போது அறுபதுக்கும் எழுபதுக்கும் இடையில் கிடந்து ஊசலாடியது.

பெருங் கடலில் கப்பலில் மிதந்து செல்வது போன்ற ஓர் உணர்ச்சி முருகையனுக்கு. ஆனால் அதுவே அவனுக்குப் பயங்கரமாகவும் தோன்றியது. இப்போது அவன் கவனமெல்லாம் எதிரில் தென்பட்ட சாலையிலும், அவன் இயக்கிக் கொண்டிருந்த இயந்திரங்களிலும்தான் ஒன்றியிருந்தன. சித்திராவோ மெய்ம்மறந்த ஆனந்தத்தில் ஏதேதோ உற்சாகமாகப் பேசி வந்தாள்.

''மேகக் கூட்டத்தின் மேல் பறப்பது போல் இருக்கிறது அத்தான்!''

''ஆமாம். தரையில் நடப்பவர்கள் கீழே விழுந்தால் அதிகமாக அடிபடாது; உயரத்தில் மிதப்பவர்கள் கீழே விழுந்தால் உயிருக்கு ஆபத்துதான்'' என்றான் முருகையன். ''இப்போது ஏதாவது நேர்ந்தால் என்ன செய்வது சித்திரா?''

''ஒன்றுமே நேராது; வீணாக என்னைப் பயமுறுத்தாதீர்கள்!'' என்று சிணுங்கினாள் அவள்.

மாமல்லபுரத்துக்குச் சென்றவுடன் அங்கு நிறைந்திருந்த சிற்பக் கலைச் செல்வங்களைக் காணத் துடித்தான் முருகையன். சித்திராவோ, ''இன்னொரு நாள் நிதானமாக இவைகளைப் பார்த்து ரசிக்கலாம்; இப்போது என்னோடு புலிக் குகைக்கு வாருங்கள்!'' என்றாள்.

''புலிக் குகைக்கா!''

''ஆமாம்!''

பயங்கரமானதொரு குகையையும் அதில் ஒரு புலியையும் கற்பனை செய்து கொண்டு அவள் காட்டிக் காட்டிய திசையில் காரைத் திருப்பினான். ஊருக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு சவுக்குத் தோப்பின் அருகில் காரை நிறுத்தி விட்டு அவர்கள் இறங்கி நடந்தார்கள். சவுக்

## காங்கிரஸ் ஆட்சியில்......

சமூகத்துக்குத் தீங்கு விளைவிக்காத எந்தப் பொருட்களையும் தயாரிப்பதற்கு ஜனநாயகத்திலுள்ள மக்கள் உரிமை பெற்றிருக்கிறார்கள். அவற்றில் தங்களுக்கு வேண்டிய பொருட்களையும், ஒவ்வொரு பொருளிலும் தாங்கள் விரும்பும் ரகத்தையும் தேர்ந்தெடுக்க மக்கள் சுதந்திரம் பெற்றிருந்தால்தான் அது உண்மையான மக்களாட்சி. மக்கள் இன்னின்ன பொருட்களைத்தான் தயாரிக்கலாம், வாங்கலாம் என்ற கட்டுப்பாடுகள் ஏற்பட்ட பின் அது எப்படி ஜனநாயகமாகும்? இந்தக் கோணத்தில் பார்த்தால் இந்திய ஜனநாயகத்துக்கு உலை வைக்கும் புண்ணியத்தையே கட்டிக் கொண்டிருக்கிறது திட்டக்கமிஷன்.

இன்று இந்த நாட்டிலுள்ள ஒரு சில பணக்காரர்கள் நான்கைந்து மோட்டார் கார் வகைகளுக்குள் தான் தங்களுக்குப் பிடித்ததைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று திட்டக்கமிஷன் விதித்திருக்கிறது. இதனால் சாமானிய மக்கள் பாதிக்கப்படவில்லைதான். ஆனால் இந்த கபதேர்வு உரிமைப் பறிப்பதனுக்கு ஒரு விதத்தில் இன்று நாம் இடமளிப்பதால், நாளைக்கே சாமானிய மக்கள் தினந்தோறும் உபயோகிக்கும் சோப்புக்கும், சீப்புக்கும் கூடச் சர்க்கார் சலுகை பெற்ற ஒரு சில ஏகபோக உரிமையாளர்களின் சரக்கை விட்டால் வேறு கிடையாது என்ற நிலை உண்டாகலாமல்லவா? உரிமையை இழக்க மக்கள் என்றும் உடன்படலாகாது.

மக்களுக்குத் தேவைப்படும் அன்றாட உபயோகப் பொருட்களின் உற்பத்தியில் திட்டக்கமிஷனுக்கு அக்கறையே கிடையாது. மூன்றும் திட்டத்தில், நாட்டு மக்களில் எழுபது சதவிகிதத்தினர் ஈடுபட்டுள்ள விவசாயத்துக்கு 1,000 கோடி ரூபாயும், மக்களில் ஒரு சதவிகிதத்தினர்கூட ஈடுபடாத சர்க்கார் தொழிலுக்கு 1500 கோடி ரூபாயும் ஒதுக்கி யிருப்பதொன்றே இதை நிரூபிக்கப் போதுமானது. இதுவரை இந்தச் சர்க்கார் நிறுவனங்களில் நூறு ரூபாய் முதல் போட்டால் அதற்கு வருவதுக்கெல்லாம் அரை ரூபாய்—ஆமாம், ஐம்பதே நயே பைசே—வருமானம்தான் கிடைத்திருக்கிறது என்ற பேருண்மையையும் தெரிவித்து வைக்கிறோம்.

காங்கிரஸ் திட்டங்களால் மக்களின் வேலை வாய்ப்பு உயரவும் வழி கிடையாது. இரண்டு திட்டங்களுக்குப் பிறகு தொண்ணூறு லட்சம் பேர் இன்று வேலையின்றித் தவிக்கிறார்களென்றும், பதினோராயிரம் கோடி ரூபாயில் தயாரித்துள்ள மூன்றும் திட்டத்துக்குப் பிறகு வேலையற்றோர் எண்ணிக்கை நூற்றிருபது லட்சமாக உயருமாம். திட்டத்தினால் ஏற்படும் கணிசமான உயர்வு இது ஒன்றுதான்! முழுக்க முழுக்க மனித சக்தியையே உபயோகித்துச் சாலைகளும், பாலங்களும், கட்டடங்களும் நிறுவினால் 500 கோடி ரூபாய் செலவில் — அதாவது திட்டத்தின் மொத்தச் செலவில் இருபதில் ஒரு பங்கைக் கொண்டு—இருபது லட்சம் தொழிலாளருக்கு மாதம் நாற்பது ரூபாய் வருமானப்படி ஐந்தாண்டுகளுக்கு வேலை அளிக்கலாம். ஆனால் மனித சக்தியை ஒதுக்கி இயந்திர பூதத்தின் உதவியையே நாடும் காங்கிரஸ் திட்டத்தின்படி ஐம்பது கோடி, நூறு கோடி செலவாகும் நிறுவனங்களில் கூடப் பத்து, பன்னிரண்டாயிரம் மக்களுக்குமேல் வேலை கிடைப்பதில்லை. எந்த அபிவிருத்தி இனங்களுக்கு முதலிடம் அளிப்பது என்ற யோசனையே யில்லாமல் தான்தோன்றித்தனமாக நாட்டுப் பொருளாதாரத்தைச் சீரழியச் செய்யும் திட்டங்களின் பட்டியல் மயக்குறுகிறீர்கள்!

லிப்டன்

லாவோஜி

டீ

சிக்கனத்தின்
சின்னம்
சிறப்பின் சிகரம்




LLC-1 TM

---




குடும்பத்திற்
கேற்ற
இணையற்ற
சோப்

**மார்கோ சோப்**

மாதர் மற்றும் குழந்தைகளின் மிருதுவான சருமத்திற்குப் பாதுகாப்பு அளிக்கும் ஹானியற்ற மிருதுவான சோப். துர்க்கந்தம் நீக்கப்பெற்ற வேப்பெண்ணையிலிருந்து தயாரிக்கப்பட்டு, வாசனையுள்ளதால், சுகாதாரத்திற்கு ஏற்றது. சருமத்தில் மாசுகளின்றி சுத்தமாக வைத்திருக்கும்.

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெட் கல்கத்தா-29

தென்னிந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை - 1

குத் தோப்பின் மத்தியில் ஒரு குன்றைச் செதுக்கி அழகியதொரு கலை அரங்கு போல் உருவாக்கி யிருந்தார்கள் அந்தக் காலத்துச் சிற்பிகள்.

படம் விரித்தாடும் பெரியதொரு நாகத்தின் தலை போல் காட்சியளித்தது சின்னஞ் சிறு கலை அரங்கு. யாளியின் தலைகளைப் போன்ற சிற்பச் சித்திரங்கள் அதன் மேற்பரப்பை அலங்கரித்திருந்தன. அந்த அரங்குக்கு எதிரில் சிறியதொரு பொட்டல்.

''இதுதானு புலிக் குகை?'' என்று கேட்டான் முருகையன்.

''ஆமாம்!''

''இதற்குப் பெயர் 'யாளிக் கலை அரங்கு' என்று வைத்திருக்கலாம், சித்திரா! யாரோ கலை உணர்ச்சி இல்லாதவர்கள் இப்படி யொரு பெயரை வைத்து நம்மைப் பயமுறுத்தி விட்டார்கள்....''

''உங்களுக்குக் கலையைக் கூட ரசிக்கத் தெரிகிறதே!'' என்று சொல்லிக் கல கலவென்று சிரித்து விட்டு, ஓடிச் சென்று அந்த அரங்கத்தின் மத்தியில் உட்கார்ந்து கொண்டாள் சித்திரா.

பழம் பெரும் வரலாற்றுக் காலத்தின் நினைவு வந்து விட்டது முருகையனுக்கு. பல்லவர் காலத்து இளவரசியோ அல்லது கலையரசியோ ஒருத்தி அங்கே ஒய்யாரமாக உட்கார்ந்திருப்பது போல் கற்பனை செய்து கொண்டான். உயிர்ச் சிற்பத்துக்கு மத்தியில் மற்ெறாரு உயிர்ச் சிற்பமும் சேர்ந்தவுடன் அவனுடைய இதயம் நிலவு கண்ட பெருங்கடலாகப் பொங்கியது. வெகு நேரம் அவளையே பார்த்துக் கொண்டு நின்றான் முருகையன். கடல் காற்றும் சவுக்குத் தோப்பும் ஒன்று சேர்ந்து கொண்டு தங்களுக்குள் ஏதோ இன்ப ரகசியம் பேசிச் சிரித்தன. அலையோசை குழலோசை போல் மெல்லத் தவழ்ந்து வந்து கொண்டிருந்தது. சித்திராவோ சித்திரப் பூம்பாவை யெனக் கண்ணிமைக்காமல் அவனைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

'உலகம் எத்தனை இன்பமயமானது!' என்று நினைத்தான் முருகையன். அதன் அழகும், அதன் அன்பும், அதன் இளமையும், அதன் புதுமையும் அவனை அணு அணுவாகத் தடுமாற்றத்துக்குள் ஆழ்த்தின.

''பேசாமல் எவ்வளவு நேரந்தான் இப்படி நிற்கப் போகிறீர்கள்?'' என்றாள் சித்திரா.

''எனக்கு ஒன்றுமே பேசத் தோன்றவில்லை சித்திரா! இன்றைக்கு...இன்றைக்கு....நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய், தெரியுமா?''

சித்திராவின் செவிகளில் தேனருவி பாய்வது போலிருந்தது. . என்றாலும் அவன் சொற்களை மறுமுறையும் கேட்பதற்காக, ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்! காதில் விழவில்லையே'' என்று கேட்டு வைத்தாள்.

காதருகில் ரகசியமாக அவன் கண்ட உண்மையைச் சொல்வதற்காக முருகையனும் அந்த அரங்குக்குச் சென்றான். அவள் அருகில் நெருங்கி அமர்ந்தான்.

## அத்தியாயம் இருபது

# தங்க மோதிரம்

சித்திராவின் அழகைப் பற்றி அவளுடைய தோழிகளே பல முறை அவளிடம் சொல்லியிருக்கிறார்கள். தினந்தோறும் அவள் பார்க்கும் நிலைக் கண்ணாடி வேறு அவளிடம் அதைச் சுட்டிக் காட்டியிருக்கிறது. என்றாலும் முருகையனின் வாயால் அதைக் கேட்ட பிறகு அவளால் ஆனந்தத்தைத் தாங்கவே முடிய வில்லை.

'அத்தான்! இதையே திரும்பத் திரும்ப எப்போதும் என்னிடம் சொல்லிக் கொண்டிருக்க மாட்டீர்களா?' என்பது போல் அவனைப் பார்த்துவிட்டு, இடீரென்று நாணிக் கண் புதைத்தாள் சித்திரா.

சித்திராவைப் பலவிதத் தோற்றங்களில், பல் வகை உணர்ச்சிகளோடு, முருகையன் இதற்கு முன்பு கண்டிருக்கிறான். ஆனால் பெண்மணியின் குழைவு நாணம், நளினம், மென்மை இவையெல்லாம் ஒன்று சேர, இந்தத் தோற்றத்தில் அவன் இதற்கு முன்பு கண்டதில்லை. 'சித்திரா! நாணத்தால் உன் முகம் சிவக்கும்போது, நீ இன்னும் அழகாக இருக்கிறாய் சித்திரா!' என்று சொல்லத் துடித்தான் அவன்.

முருகையனுக்கு எதைப் பேசுவது என்றும் தெரிய வில்லை; எதைப் பேசாமல் இருப்பதென்றும் விளங்கவில்லை.. சென்னை நகரத்தை விட்டு விலகியிருந்த இந்தத் தொலை தூரத்துத் தனிமையில் இயற்கையாகவே ஓர் இன்ப மயக்கம் நிலவத்தான் செய்தது. இருவருமே இரு உயிர்ச் சிற்பங்கள் போல் அங்கு மெய்ம் மறந்திருந்தார்கள்.

கடற் பறவைகள் இரண்டு வானத்தில் பறந்து கடலை நோக்கிச் சென்றன. அதைப் பார்த்த சித்திரா, ''எனக்கும்



பார், பார்! பலூன் பார்!
பணவீக்கப் பலூன் பார்!
வெடித்துச் சிதறப் போகுது!
வேடிக்கை காட்டப் போகுது!

கடற்பறவையாக மாறிப் பறக்க வேண்டும் போல் இருக்கிறது!'' என்றான்.

''தனியாகவா!''

''ஆமாம், தனியாகத்தான்!'' என்று வேண்டுமென்றே சொல்லி விட்டு, அவளுடைய முகத் துடிப்பைக் கண்டு, ''தனியாகத்தான், உங்களோடு!'' என்று சொல்லி விட்டு வேறு புறம் திரும்பிக் கொண்டான்.

அந்த நேரத்தில் தான் முருகையனுக்கு, 'நாம் இன்னும் இவளைக் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்கிறோமே!' என்ற ஏக்கம் பிறந்தது. செய்து கொண்டிருந்தால் இவள் இப்படிச் சொல்லியவுடன், அவளைத் தூக்கிக் கொண்டே பறந்திருக்கலாமல்லவா? தவியாய்த் தவித்தான் முருகையன்.

சித்திராவுக்கு இப்போது கோபம் கோபமாக வந்தது. முருகையன் தன்னுடைய கரங்களை இறுகப் பற்றிக் கொண்டு, 'எப்போது சித்திரா நம்முடைய கல்யாணம்?' என்று கேட்கப் போகிறான் என்று எதிர்பார்த்தாள். கேட்க வேண்டுமென்று விரும்பினாள்.

கிராமத்துப் பண்பாட்டில் ஊறிய முருகையனுக்கோ சித்திராவின் கரத்தைத் திருமணத்துக்கு முன்பு தீண்டுவதற்குக் கூட மனம் வரவில்லை. 'உள்ளத்துக்குள்ளே கட்டுப்பட்டிருக்கும் அன்புக்கு உன்னதமான சக்திகள் உண்டு. பச்சை மரத்துக்குள் கட்டுப்பட்டுக் கனிந்து கொண்டிருக்கும் நெருப்புத் தான் மலர்க் கூட்டமாக வெளிப்பட்டு மணம் சிந்தக் கூடியது. அன்பென்னும் நெருப்பு அகத்தை விட்டுப் புறத்துக்குத் தாவுமானால் ஒரே சாம்பல் குவியல் தான்!' என்று எங்கோ ஓரிடத்தில் கவிஞர் தாகூர் எழுதியதையும் அவன் நினைவில் வைத்திருந்தான்.

ஆகவே அவனுக்கு அதற்கு மேல் அந்த இடத்தில் தங்கியிருப்பதற்குக்கூட தயக்கமாக இருந்தது.

''புறப்படலாமா, சித்திரா!'' என்று மெல்ல அவளை அழைத்தான்.

கோபமாக அவனை விழித்துப் பார்த்தாள் சித்திரா. பிறகு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

''ஏன், இந்தப் புலிக் குகையில் எங்காவது புலி பதுங்கி யிருக்கப் போகிறதென்ற பயமா உங்களுக்கு?''

''நம் ஒவ்வொருவருக்குள்ளேயும் ஒரு புலி பதுங்கிக் கொண்டு தான் இருக்கிறது சித்திரா!'' என்றான் முருகையன். பிறகு சற்று நேரம் யோசனை செய்து விட்டு, ''உன்னுடைய பேரழகும் இந்தத் தனிமையும் என்னைப் பைத்தியக்காரனாக மாற்றி விடும் போல் இருக்கிறது; நாம் கல்யாணம் செய்து கொண்டவுடன் மறுபடியும் இந்த இடத்துக்கு வருவோம்'' என்றான்.

திருமணப் பேச்சை அவன் வாயால் கேட்டவுடன், சட்டென்று அவன் கரங்களைப் பற்றித் தன் கண்களில் வைத்துக் கொண்டாள் சித்திரா. தன் கரங்களை முருகையன் விடுவித்துக் கொள்ளவில்லை.

''இந்த இடத்துக்கு என்னை நீ அழைத்து வந்ததை என்றைக்குமே தான் மறக்க மாட்டேன். நம்முடைய கல்யாணத்தின் அவசியத்தை இப்போது தான் நான் அதிகமாக உணர்கிறேன்.''

சித்திராவின் விழிக் கோணங்களில் ஆனந்தக் கண்ணீர் திரண்டு நின்றது. அவளுடைய மகிழ்ச்சியை எப்படி அவனிடம் வெளியிட்டுக் கொள்வதென்று அவளுக்குத் தெரியவில்லை. சட்டென்று தன்னுடைய அழகுப் பையைத் திறந்து அதற்குள்ளிருந்து ஒரு தங்க மோதிரத்தை எடுத்தாள். புத்தம் புதிய மோதிரம். அதை முருகையனுடைய விரலில் மெதுவாகப் போட்டுவிட்டாள்.

''சித்திரா! எனக்கு எந்த நகையுமே போட்டுக் கொண்டு பழக்கமில்லை சித்திரா! இதெல்லாம் எதற்கு?''

''பழக்கமில்லாவிட்டால் பழக்கப் படுத்திக் கொள்ளுங்கள்!'' என்றாள் சித்திரா. ''கார் ஓட்டக் கற்றுக் கொண்டு என்னை முதன்முதலாக இங்கே அழைத்து வந்திருக்கிறீர்கள் அல்லவா? அதற்குப் பரிசு! என்னுடைய அன்புக்கு அடையாளம்!''

''அன்புக்கு அடையாளம் அன்பு ஒன்றுதான் சித்திரா! தங்க மோதிரத்தினால் அது நினைவுக்கு வரவேண்டும் என்பதில்லையே?''

"துறவியைப்போல் பேசாமல், எனக்காக இதைப் போட்டுக்கொள்ளுங்கள்!" என்று செல்லமாக அதட்டினாள் சித்திரா. "தங்கமும் வெள்ளியும் இல்லாவிட்டால் உலகத்தில் ஒன்றுமே நடக்காது அத்தான். நமக்குக் கார் இருப்பதால், அடுத்த தெருவுக்குப் போவது போல் இந்த இடத்துக்கு வந்து பேசிக்கொண்டிருக்கிறோம். இல்லாவிட்டால் எல்லோரும் இங்கே நினைத்தவுடன் வந்துவிட முடியுமா?"

உண்மைதான் என்று நினைத்துக் கொண்டான் முருகையன்.

"அத்தான்! இன்னும் நான் எத்தனை ஆசைகள் வைத்துக் கொண்டிருக்கிறேன் என்று உங்களுக்குத் தெரியாது. நாம் கல்யாணம் செய்துகொண்டு இந்த உலகம் முழுவதையும் சுற்றி வரவேண்டும். எங்கெங்கே எப்போது போக வேண்டும் என்று நான் திட்டம்போட்டு வைத்திருக்கிறேன். அத்தான்! நீங்கள் நினைப்பதைவிட நீங்கள் பாக்கியசாலி!"

சித்திராவின் ஆசைகள் அவனுக்கு வியப்பைத் தந்தன வென்றாலும் அன்பு உள்ளத்தை உருக்கி விட்டது.

"சித்திரா! எனக்குத் தாயாரும் இல்லை; தகப்பனாருமில்லை; வேறு உற்றார் உறவினர்களும் கிடையாது. என்னிடம் ஆழ்ந்த அன்பு செலுத்தக் கூடிய ஒரே ஒரு பெண் நீதான். எனக்கு உன்னால் வேறு எந்தப் பலனுமே வேண்டாம். என்னிடம் இதேபோல் நீ அன்பு செலுத்தினால் போதும்!"

"நீங்கள் ஒரு குழந்தை அத்தான்" என்றாள் சித்திரா. முரட்டுத்தனமும், நூதனமான வாழ்க்கையும், கூர்ந்த அறிவும் கொண்ட முருகையன் அப்போது அவளுக்குக் குழந்தையாகத்தான் காட்சியளித்தான்.

நேரம் சென்றது. கடற் கரையில் சிறிது சிறிதாக நிலவின் மங்கலான ஒளி கசிந்தது. தூரத்தில் எங்கோ நரிக்கூட்டம் ஊளையிடத் தொடங்கியது. இருவரும் ஒன்றாகத் தோப்புக்குள் நடந்து வந்து காரில் அமர்ந்தார்கள்.

"மெதுவாகவே காரை விடுங்கள். ஊர்வலத்தில் போவது போல் இரவு முழுவதும் நாம் பிரயாணம் செய்வோம்" என்றாள் சித்திரா.

இப்போது அவள் குழந்தையாக மாறி மழலை பேசத் தொடங்கி விட்டாள் என்பதைக் கண்டு, வழக்கமான வேகத்தில் புறப்பட்டான் முருகையன். காற்றில் கலந்த அவளுடைய நறுமணக் கூந்தல் அவனுடைய நெற்றியைத் தழுவியதையும் அவன் கவனிக்கவில்லை.

சென்னை நகரத்துக்குள் வந்து ஒரு தெருவில் திரும்பும் போது சட்டெனக் காரை நிறுத்தினான் முருகையன். அவன் நிறுத்திய இடத்தருகில் நடை பாதையில் ஒரு ரிக்ஷா இருந்தது. அதன் அருகில் கவலையோடு தலையைத் தொங்க விட்டு அமர்ந்திருந்தான் முனியாண்டி.

"முனியாண்டி!"

பரபரப்போடு எழுந்து, ஆளையும் காரையும் மாறி மாறிப் பார்த்து அடையாளம் தெரிந்து கொள்ளாமல் விழித்தான். முருகையனின் கரம் அப்போது அவன் தோளைப் பற்றியது. "என்னைத் தெரியவில்லையா, முனியாண்டி?"

முனியாண்டியின் வாயெல்லாம் பல்லாகியது. சித்திரா அந்தக் காட்சியை உற்றுப் பார்த்தாள். இருவரும் சிறிது நேரம் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். பிறகு முருகையன் காருக்குத் திரும்பி வந்தான்.

"யார் அது?" என்றாள் சித்திரா முகத்தைச் சுளித்துக் கொண்டே.

"கஷ்டம் வந்த காலத்தில் என்னைக் காப்பாற்றிய ரிக்ஷாக்காரன் முனியாண்டி. நாளைக்கு என்னை வந்து பார்க்கச் சொல்லியிருக்கிறேன்; ஏதாவது ஒரு வேலை போட்டுக் கொடுத்தால் நாணயமாக உழைப்பான்; அவன் குடும்பத்துக்கும் உதவியாக இருக்கும்."

"அவனே வேலை தேடி வந்தால் கொடுத்துக் கொள்ளலாமே! அதை விட்டு விட்டு, இப்படியா என்னையும் தெருவில் காரில் வைத்துக் கொண்டு அவனோடு பேசப் போவது?"

"மன்னித்துக் கொள், சித்திரா! ஏழைகளைக் கண்டால் என்னால் மனமிரங்காமல் இருக்க முடியாது. அதிலும் இவன் எனக்கு மறக்க முடியாத உதவிகளைச் செய்திருப்பவன்."

கார் புறப்பட்டது. "அத்தான்! ஏழைகளை நினைவில் வைத்துக் கொள்ளுவதற்காக இந்த ஏழைச் சித்திராவை மறந்து விடாதீர்கள்!" என்றாள் அவள்.

முருகையன் தனக்குள் சிரித்துக் கொண்டான். வெளி உலகத்தைப் பற்றிச் சிறிது கூடக் கவலைப்படாத அந்தப் பெண்ணின் மனப் போக்கு அவனுக்கு வேடிக்கையாக இருந்தது.

அவர்கள் வீட்டுக்குள் நுழைந்த போது, மாணிக்கத்தின் அறையில் இரண்டு விருந்தினர்கள் வந்திருப்பதைக் கண்டார்கள். ஒரு கணம் வெளியில் நின்று அவர்களை உற்றுப் பார்த்துவிட்டு உள்ளே ஓடினாள் சித்திரா. முருகையன் தன்னுடைய அறைக்குச் சென்றான்.

மாணிக்கத்தோடு அவர்கள் பேசிக் கொண்டிருந்ததால் முருகையனையோ, சித்திராவையோ அவர்கள் கவனிக்கவில்லை. முருகையனுக்குக் குமரவேலுடன் வந்திருந்த செல்வரத்தினத்தைக் கண்டவுடன் தனியாகப் பேசும் ஆவல் எழுந்தது.

(தொடரும்)

# எது பொய்?

ஆட்டுக் கல்லில் உளுந்தை இட்டுக் கடகடவென்று குழவியால் சுற்றி அரைத்துக்கொண்டிருந்தாள் ஞானவி. நெற்றியெல்லாம் வியர்வைத் துளிகள் அரும்பிப் பொட்டுப் பொட்டாய்க் கசிந்தன. கூர்மையான மூக்கும், கவிந்த இமைகளையுடைய கண்களும் குவிந்த அதரங்களும் அவளை எழிலுடையவளாக்கிக் கொண்டிருந்தன.

காதில், மூக்கில், ஒன்றுமில்லை. அசப்பிலே அவள் தலையை உயர்த்தினால் நெற்றி நடுவில் செஞ்சாந்துத் திலகம் பளபளவென்று மின்னியது. காதோரத்தில் குழற்கற்றைகள் சுருண்டு சுருண்டு விளையாடின.

முதுகின் மேல் புரண்ட சாயம் போன மேலாக்கை இழுத்து இடுப்பில் செருகியிருந்தாள். அங்கும் இங்கும் கிழிந்த ரவிக்கை. இடையிலே வெளுத்துப் போன பச்சைப் பாவாடை. வைத்த கண் வாங்காமல் தன்னையே உற்றுப் பார்க்கும் அம்புஜத்தை ஏறிட்டுப் பார்த்தாள் ஞானவி.

''என்ன மாமி அப்படிப் பார்க்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லையம்மா! திடீரென்று இளைத்துப்போயிருக்கிறாயே. உடம்புக்கு ஏதாவது..'' அம்புஜம் எரிந்து கொண்டிருந்த 'ஸ்டவ்'வின் சுருதியைக் குறைத்தவாறு கேட்டாள்.

ஞானவி ஆட்டுக்கல்லையும், குழவியையும் மாறிமாறிப் பார்த்தாள். பிறகு ஈரம் கசிந்த தன் கண்களை மேலாக்கினால் ஒற்றி எடுத்துக் கொண்டாள்.

''ஒன்றுமில்லை மாமி, ஒன்றுமில்லை! ஏழையாகப் பிறக்கக் கூடாது.'' அம்புஜத்துக்கு நறுக்கென்று உறைக்கிறாற்போல் இருந்தது.

''ஏன் ஞானவி? பணக்காரராக இருந்து விட்டால் மட்டும் மகிழ்ச்சியோடு வாழ்ந்து விட முடியுமா, என்ன? மனித ஜன்மத்துக்கே குறையில்லாமல் இருக்க முடியாது. ஒவ்வொருத்தருக்கு ஒரு விதத்தில் குறை.''

''ஒவ்வொருத்தருக்கும் ஒருவிதத்தில் குறை இருக்கும், மாமி. என் ஜன்மத்துக்கு எப்பொழுதும் எதற்கும் குறைதான்.'' நாற்றுக் கிழவி மாதிரி ஞானவி பேசிக் கொண்டே உளுந்து விழுதை வழித்து வழித்து அடுக்கில் போட்டுக் கொண்டிருந்தாள். எத்தனையோ ஏழைப் பெண்களில் ஞானவியும் ஒருத்தி. தாய் யாருடைய வீட்டிலோ சமையல் வேலை செய்ய, தந்தை இருக்குமிடம் தெரியாமல் அவதிப்படும் நித்திய தரித்திரக் குடும்பத்தில் பிறந்தவள் ஞானவி. அருமை மகளுக்கு ஆசையாக அழகிய நாமத்தைச் சூட்டிய தாய் அன்று பலவாறுகக் கனவு கண்டிருப்பாள் எதிர் காலத்தைப் பற்றி. இன்று ஞானவி சம்பளமில்லாமல் படித்தாலும், மாதா மாதம் நடக்க வேண்டிய சில்லறைச் செலவுகளுக்கே அம்புஜத்தின் வீட்டில் இட்டிலிக்கு அரைத்துக் கொடுக்க வேண்டியிருந்தது.

அன்று பத்தாவது பரீட்சைக்குப் பணம் கட்ட வேண்டிய கடைசித் தினம். ரத்தம் சொட்டுவது போல் வியர்வை வழிய அடுப்படியில் நெருப்பின் முன்பாக வெந்து நீறும் அவள் அன்னை அவளை அரும் பாடுபட்டுப் படிக்க வைத்துக்

ஸரோஜா ராமமூர்த்தி



கொண்டிருந்தாள். எப்படியாவது இந்தப் பரீட்சையில் தேறி விட்டால் மகள் அறுபதோ, எழுபதோ சம்பாதித்துத் தன்னையும், நொண்டிப் பையன் ஒருவனையும் காப்பாற்றி விடுவாள் என்கிற அசையாத நம்பிக்கையின் முன்பு அடுப்பின் சூடு தெரியாமல் அந்தத் தாய் உழைத்து ஓடாகி வந்தாள்.

உடன் பிறந்த நொண்டித் தம்பியும், வாழ்க்கையில் சுகம் இன்னதென்றே அறியாத தாயின் முகமும் அவள் நினைவில் தோன்றி அவளை உருக வைத்தார்கள்.

அம்புஜம் நல்லவள் தான். ஞானவி எத்தனையோ முறைகளில் உதவி யிருக்கிறாள். நறுக்கென்று பதினைந்து ரூபாயை எப்படி அவளிடம் கேட்பது?

உளுந்தை அரைத்து எடுத்துவிட்டு உரலைத் தேய்த்துக் கழுவிய ஞானவியைச் சாப்பிட அழைத்தாள் அம்புஜம்.

"இங்கேயே சாப்பிட்டு விட்டுப் பள்ளிக்கூடத்துக்குப் போயேன். உன் முகத்தையே பார்க்கச் சகிக்க வில்லை எனக்கு. ஆயிரம் வேதனை இருந்தாலும் இப்படிக் கூம்பிப் போய் விட மாட்டாயே ஞானவி? என்ன விஷயம்? என்னிடம் சொல்லேன்." தாயினும் சாலப் பரிந்து பேசும் அவளிடம் காரணத்தைத் தயக்கத்துடன் வெளியிட்டாள் ஞானவி.

"பூ! இதுதானா பிரமாதம்? என்னிடம் பணமில்லை. இருந்தாலும் ஒருத்தரிடம் வாங்கித் தருகிறேன். இரு....." என்று சொல்லிக் கொண்டே அம்புஜம் வெளியே போய் விட்டாள். போனவள் அரை மணி ஆகியும் வரவில்லை. ஞானவிக்குப் பள்ளிக்கூடம் போவதற்கு நேரம் ஆகிக் கொண்டிருந்தது. கடைசியாக அம்புஜம் சோர்வுடன் வந்து பணம் எங்கும் கிடைக்கவில்லை என்று தெரிவித்த போது ஞானவியின் கண்களின் முன்பாக அவளுடைய எதிர்காலம் இருளாகப் பரவிக் கிடந்தது. தாயின் பல ஆண்டுக் கனவுகள் சிதைந்து விழுந்தாற் போல் இதயத்தில் வெறுமை நிழலாடியது.

ஞானவியின் சோர்ந்திருந்த முகத்தில் கவிந்த துயரச் சாயையின் முன்பாக அம்புஜத்தின் உள்ளத்தில் திடீரென்று ஓர் எண்ணம் உதித்தது. "இரு ஞானவி இரு...இதோ



வந்து விட்டேன்'' என்று கூறிப் புடவைத் தலைப்பில் வைத்ததை மறைத்தவாறு தெருவில் இறங்கி வேகமாக நடந்தாள் அம்புஜம்.

மறுபடியும் அவள் திரும்பியதும் ஜானகியிடம் பதினைந்து ரூபாயைத் தெரிவித்தாள். ''போ....போ...மணி பத்து அடிக்கப் போகிறது. இன்றைக்குப் புதன்கிழமை இல்லையா? ஒன்றரை வரை ராகு காலம் இருக்கிறது. பிறகு பணம்கட்டு. மறந்துவிடாதே!''

''மாமி....மாமி... நீங்கள் எப்படிச் சமாளித்தீர்கள் என்று எனக்குத் தெரியும். மூளியின் வெள்ளிக்கிண்ணியை எடுத்துப் போய் எனக்காக அடகு வைத்து வாங்கியிருக்கிறீர்கள் மாமி.....''

தேம்பியபடி நின்ற ஜானகியை, ''போ, போ'' என்று விரட்டினாள் அம்புஜம்.

ஃ ஃ ஃ

ஓட்டத்தில் இடித்து மோதிக் கொண்டு மின்சார வண்டியில் ஏறி ஜானகி கோடம்பாக்கத்தை அடையும்போது மணி பத்தே கால் ஆகிவிட்டது.

''எல்லோரும் பணம் கொண்டு வந்திருக்கிறீர்களா?'' என்று ஆசிரியை கேட்டதும் கடைசிப் பெஞ்சியில் உட்கார்ந்திருந்த பெண் ஜெயலட்சுமி, ''மச்சர்! என் பணத்தைக் காணோம் மச்சர். இங்கேதான் வைத்து விட்டு வெளியே போய் விட்டு வந்தேன் மச்சர்....'', என்று கூக்குரல் போடவும் சரியாக இருந்தது.

வகுப்பில் ஒரு விநாடி மௌனம் சூழ்ந்து கொண்டது.

அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஜானகியின் மீது எல்லார் பார்வையும் நிலைத்து நின்றது. கிட்டுத்திட்டாய் வெளுத்த மேலாக்கும், கிழிந்த ரவிக்கையும், சாயம் போன பாவாடையும், சோர்ந்த முகமும், எதிலும் நம்பிக்கை, பற்று இல்லாத தோற்றமும் அவளை ஏழைமை என்கிற மீளா நரகத்தில் விழுந்திக் காட்டின.

''எல்லோரும் அவரவர் பெட்டி, பைகளை உதறிக் காட்டுங்கள்.''

ஒரு சிலரின் பைகளில் ஒன்றுமில்லை. ஏற்கெனவே அவர்கள் பணம் கட்டியவர்கள். சிலர் அன்று பணம் கட்டுவதற்கு எடுத்து வந்திருந்தார்கள். வசதியுள்ளவர்கள், வாயுள்ளவர்கள். அவர்களில் யாரைக் குற்றம் சாட்ட முடியும்? சீறிப் பாய்ந்து அடுத்த நாளே அவர்கள் தந்தம் பெற்றோருடன் பள்ளி ஆசிரியை மீது போர் தொடுக்கவல்லவர்கள்.

ஜானகி தன்னுடைய பையை உதறினாள். பதினைந்து ரூபாய்கள் படபடவென்று பறந்து கீழே விழுந்தன.

''ஜானகி! நீ பணம் வீட்டிலிருந்து கொண்டு வந்தாயா?''

## காங்கிரஸ் ஆட்சியில் ....

இந்த நாட்டுக்குக் காங்கிரஸ் இழைத்துள்ள தீமைகளில் மன்னிக்க முடியாதது நம் மண்ணில் ஆயிரமாயிரம் சதுர மைல்களைச் சீன இரையாக்கிக் கொள்ள அது இடமளித்து விட்டதுதான். நேருஜிக்கும் ராஜதந்திரத்துக்கும் எவ்வளவு தொலைவு என்பதைச் சீன ஆக்கிரமிப்பு தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. சீனப் பிரதமரை இந்தியாவுக்கு வரவழைத்து நேரு அவர்கள் தடபுடலாக விருந்துபசாரம் அளித்து, சமாதான சகவாழ்வு முதலிய பஞ்சசீலக் கொள்கைகளில் அவருடன் கையெழுத்திட்டு மகிழ்ந்து போன அதே சமயத்தில் நம்முடைய தலைவாசலான திபேத்தில் பிரவேசிக்கும் திட்டங்களைச் சீன உருவாக்கிக் கொண்டிருந்தது. 1955-ம் ஆண்டிலிருந்தே நம் எல்லைப் புறங்களை இணைத்துச் சாலைகள் போட்டுக் கொண்டு ஆக்கிரமிப்பில் இறங்கி விட்டது சீன. இருந்தாலும் அதன் பின் நான்காண்டு வரையில் — அதாவது பன்னிரண்டாயிரம் சதுர மைல்களை அந்நியனுக்கு இழந்த வரையில் — இவ் விஷயத்தை நாட்டுக்குத் தெரிவிக்காமல் பத்திரமாகப் பாதுகாத்து வந்தனர் பிரதமரும், பாதுகாப்பு மந்திரி ஸ்ரீ மேனனும். வேறெந்த ஜனநாயகத்திலேனும் இவ்விதமாக மக்களிடமிருந்து மாபெரும் உண்மைகளை மறைத்திருந்தால் அந்நாட்டு மக்கள் பிரதமரையும், பாதுகாப்பு மந்திரியையும் பதவியிலிருந்தே இறக்கி விருப்பார்கள். ஆக்கிரமிப்பை மூடி மறைத்தது மட்டுமின்றி இதுவரை அதனை முறியடிக்கத் தக்க நடவடிக்கை ஏதுமே எடுக்கவில்லை காங்கிரஸ் சர்க்கார். அதோடு மேலும் மேலும் நம் நாட்டுப் பகுதிகளைச் சீன கபளீகரம் செய்ய அனுமதித்திருக்கிறது. சென்ற நவம்பர் மாதத்தில் நாடெங்கும் இதுபற்றி வதந்திகள் பரவி, பார்லிமெண்டிலும் கேள்வி எழுப்பப்பட்ட பின்னரும் பாதுகாப்பு மந்திரி தமக்கு இது விஷயமாக ஒன்றும் தெரியாது என்று முதலில் கூறினார்; பின்பு தான் ஆக்கிரமிப்பு அதிகரித்திருப்பதை ஒப்புக் கொண்டிருக்கிறார். வெட்கமில்லாமல் மீண்டும் தேர்தலுக்குப் போட்டியிடுகிறார்.

ராணுவ பலத்தில் நம்மை மிஞ்சிய சீனாவைத் தடுத்து நிறுத்த வேண்டுமானாலும் ராணுவக் கூட்டுக்கள் சேர்வதில் தவறில்லை என்று சர்க்கார் உணரும் வழியாக இல்லை. நம்முடன் நேசம் பூண்டிருந்த அண்டை நாடுகளும் சீனாவுடன் சேர்ந்து விட்டன. 'சுய பலத்தாலேயே சீனாவை முறியடிப்போம்; ஆனால் சுயபலம் பெற இன்னும் காலம் பிடிக்கும்; அதுவரையில் எதிர் நடவடிக்கை எடுப்பதற்கில்லை' என்று 'தர்க்கம்' பேசுகிறார் பாதுகாப்பு மந்திரி. நம் ராணுவ பலம் பெருகும் வரையில் சீன தூங்கிக் கொண்டிருக்குமா என்ன?

நம் நாட்டு மண்ணைப் பாதுகாக்கும் திறச் சாமர்த்தியமற்ற காங்கிரஸ் கட்சியிடம் மீண்டும் ஆட்சியை அளிக்கலாமா என்று யோசனை செய்து பாருங்கள்.

# மனக்கொதிப்பும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன



நம் வயிறும், மூளையும் நரம்புகளின் மூலம் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு முறையும் நாம் மனக் கொதிப்பினாலோ அல்லது கவலையினாலோ பாதிக்கப்படும்பொழுது இந்த நரம்புகள் ஜீரணம் செய்வதை தற்காலிகமாக தடுப்பதுடன் ஆட்ரினலின் என்ற சக்திவாய்ந்த அமிலத்தை வெளிப்படுத்தி ரத்தத்துடன் கலக்கிறது. இந்த அமிலம் ஓடியாடி வேலை செய்வோருக்கு மனக்கொதிப்பை எதிர்த்துப் போராட உதவுகிறது. ஆனால் மற்றவர்கள் விஷயத்தில் இது நீண்டநாள் பலக்குறைவுடன் அவர்தம் ஜீரண சக்தியையும் குறைக்கிறது. அதனால்தான் வியாபாரத் துறையிலுள்ளவர்களில் 10 பேர்களில் 6 பேர் அஜீரணத்திற்குள்ளாகி, அதன் விளைவாக சாப்பிட்ட பின் வயிற்று வலியினால் கஷ்டப்படுகிறார்கள்.






ஹ்யூலட்ஸ் மிக்சர் வயிற்றுவலியை விரைவாகவும் அடியோடும் நிவர்த்திக்கிறது. எரிச்சலை உண்டாக்கும் அமிலத்திலிருந்து இரைப்பையின் சவ்வுறைக்காப்பாற்றுவதோடு உணவை நன்றாக கரைத்து ஜீரண சக்தி ஏற்படுவதற்கும் உதவுகிறது. 80 வருடங்களுக்கு மேலாக உலகத்திலுள்ள எல்லா டாக்டர்களும் சிபாரிசு செய்யும் மருந்து இதுவே. குழந்தைகளின் வயிற்று உபாதைகளையும் தீர்க்கவல்லது ஹ்யூலட்ஸ் மிக்சர்.

வயிற்றுக் கடுப்புக்கு அபினி கலந்த ஹ்யூலட்ஸ் மிக்சரை உபயோகியுங்கள்.

## “ஹ்யூலட்ஸ் மிக்சரை

உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து நான் நன்றாக சாப்பிட முடிகிறது.”



ஸி.ஜே. ஹ்யூலட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
56/A, கவியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3

> மக்களுக்குக் காரணம் காட்டித் தம்முடன் அழைத்துச் செல்ல முடியும் என்பதில் சீர்திருத்தவாதிகள் நம்பிக்கை இழக்கும் போது தான் சோஷலிஸம் என்கிற சித்தாந்தத்தின் நுணுக்கங்களைப் பற்றிப் பேசத் தொடங்குகிறார்கள். நானும் அவர்களுக்குள்ள அதே பிரச்னைகளைத்தான் தீர்ப்பதில் ஈடுபட்டிருக்கிறேன் ஆனால் பூரணமான அஹிம்சா முறையே என்னுடைய வழி
>
> காந்தியடிகள்

"ஆமாம், டீச்சர்!"

"அவள் எங்கேயிருந்து கொண்டு வந்திருக்கப் போகிறாள் டீச்சர்? 'எங்களிடம் சல்லிக் காசுகூட இல்லை. ஒரு வேளை சாப்பிட்டால் ஒரு வேளை பட்டினி. நாளைக்குக் கடைசியாக ஒரு ஆசை. யாரிடமாவது கேட்டுக் கிடைத்தால் உண்டு. அதுவும் இல்லையென்றால் நான் பரீட்சைக்குப் போக முடியாது' என்று என்னிடம் சொன்னாள் டீச்சர். அவள்தான் எடுத்திருப்பாள்" என்று பணத்தை இழந்த பெண் உச்ச ஸ்தாயியில் இரைந்து பேசினாள்.

"உஸ்... இரையாதீர்கள். என்னாலும் இந்தத் தொல்லையெல்லாம் பட முடியாது. நடவுங்கள். தலைமை ஆசிரியையின் அறைக்கு."

ஞானவி இதயச் சுமையுடன் தலைமை ஆசிரியையின் அறைக்குள் நுழைந்தாள். பட்டும், நைலானும் உடுத்திப் பணத்தைத் தொலைத்து விட்டு நின்ற அந்தப் பெண்ணும் ஆசிரியை முன்பாக நின்றாள்.

"இவள் சொல்கிறது உண்மையா ஞானவி?"

"இல்லை, டீச்சர்....பணம் நான் வீட்டிலிருந்து கொண்டு வந்தேன்."

ஆசிரியைக்கு ஒரே குழப்பமாகப் போய் விட்டது. பணத்தை இழந்த பெண் தாறுமாறாகப் பேசிக்கொண்டே இருந்தாள். "திருட்டுப் பிழைப்புப் பிழைக்கிறவர்கள் துணிந்து எதையும் செய்வார்களாம். நேற்று வரை பணத்துக்குப் பஞ்சாகப் பறந்தவளுக்கு இன்று திடீரென்று இறக்கை முளைத்துப் பணம் பறந்து வந்ததாக்கும்!"

பள்ளிக்கூட மாணவிகளின் முன்பாக ஞானவி ஒரு குற்றவாளியாகவும், பரிதாபத்துக்குரிய பெண்ணாகவும் நின்றாள். திருட்டுப் பணமா, சொந்தப் பணமா என்கிற முடிவுக்கு வராமல் அவளிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டு விட்டார்கள்.

மாலை நைந்த உள்ளத்துடன் வீடு திரும்பிய ஞானவி தாயின் முன்பாகச் சோர்வுடன் வந்து உட்கார்ந்தாள்.

"என்னம்மா? பணம் கட்டினாயா? அம்புஜம் மாமி ஏதாவது ஏற்பாடு பண்ணி யிருப்பாளே...."

கண்களிலிருந்து கண்ணீராகச் சொரிந்த மகளை ஆதரவுடன் அணைத்துக் கொண்டாள் அன்னை.

"வைத்தியம், வைத்தியம் இந்தப் பரீட்சை ஒன்றை நம்பியா உலகத்தில் பிறவி எடுத்திருக்கிறோம்? அது கிடக்கிறது சனியன்."

"அம்மா, நாம் ஏழைதானே?"

"ஆமாம். ஏழைதான். இந்தக் கையைப் பாரு, ஞானவி. உழைத்து உழைத்துக் காய்ந்து முரடுபோய் இருப்பதை. ஏழையாக இருந்தாலும் உழைக்கிறதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது."

"அம்மா, நாம ஏழையாக இருந்தாலும் திருடமாட்டோமே?" இதைக் கேட்டுவிட்டு ஓவென்று அழுதாள் ஞானவி.

"திருடுவதா? நாமா? யார் சொன்னார்கள்? அது நாம் செய்கிற வேலையில்லை. சோம்பேறிகள் செய்கிற வேலை."

"உன் மகளை இன்று திருடி என்று பட்டம் கட்டிப் பலர் அறிய நிற்க வைத்துப் பலர் அறிய விசாரித்தார்கள் அம்மா!"

இவ்வளவு காலம் அடுப்பின் சூட்டைத் தண்மையாக நினைத்து உழைத்த அந்தத் தாய் அடுப்பில் விழுந்த மாதிரி துடி துடித்துப் போய்விட்டாள்.

"உன்னையா? ஏன் எதற்காக? நாம் ஏழையாகப் பிறந்துவிட்டோம் என்பதற்காக எதை வேண்டுமானாலும் பேசி விட்டார்களா?" எரிமலை வெடித்துத் தீக்கங்குகளைச் சிதற விடுவது போல் அவள் நெருப்புத் துண்டங்களாக வார்த்தைகளை உதிர்த்தாள்.

"அம்மா! அம்புஜம் மாமி வீட்டில் வேலைக்குப் போய்விடுகிறேன் அம்மா. இந்தப் பரீட்சைக்காக நான் கட்டிக் கொண்ட திருட்டுப் பட்டம் போதும் அம்மா. வலுவுள்ள இரண்டு கரங்கள் இருக்கிற வரையில் நமக்கு உழைப்புக்குப் பஞ்சம் இல்லை. பரீட்சை எழுதும்படியான உற்சாகத்தை நான் இழந்து விட்டேன்."

பள்ளிக்கூடத்தில் ஞானவியைப் பற்றியே பேச்சாக இருந்தது. அந்தப் பெண் ஏழையாயிற்றே. பத்தாவது பாஸ் செய்து விட்டால் ஒரு வேலையில் ஒண்டிக் கொண்டு குடும்பத்தைக் காப்பாற்றுமே! ஆசிரியைகள் பேசிக் கொண்டுதான் இருந்தார்கள். பரீட்சைக்கென கட்டிய பணத்தைப் பற்றி ஞானவி கவலைப்படவில்லை. அவள் பரீட்சைக்குப் போகவில்லை.

ஒரு நாள் — பரீட்சைகள் முடிந்து விடுமுறையில் ஒரு நாள் — அம்புஜம் மாமியின் மகன் முரளியை இடுப்பில் எடுத்துக் கொண்டு கோவிலுக்குப் போய் வந்தாள் ஞானவி.

எதிரே வருவது யாராக இருக்கும்? ஆம், அவளைத் திருடி என்று நாலு பேர்கள் முன்னிலையில் இழிவுபடுத்திய அதே பெண்தான்.

"ஞானவி! என் பணம் அகப்பட்டு விட்டது ஞானவி. வீட்டில் ஒரு புஸ்தகத்தில் வைத்து விட்டு வந்து விட்டேன். நீதான் அடுத்த நாளிலிருந்து பள்ளிக்கு வரவேயில்லையே. உன்னிடம் சொல்ல முடியவில்லை." அன்று திருடி என்று கூறிய பெண்ணுக்கு எல்லாமே எளிதாக இருந்தது. திருட்டுப் பட்டம் கட்டுவது, மறுபடியும் இல்லை என்பது.

"ஓஹோ!" என்றாள் ஞானவி.

இதுகாறும் அவள் மனத்தை உறுத்தி வந்த அந்த வேதனை முள்ளை யாரோ பிடுங்கி எறிந்தாற் போல் இருந்தது.

"மிக்க நன்றி!" என்று சொல்லிக் கொண்டே குழந்தையுடன் நடந்தாள் ஞானவி வீட்டை நோக்கி. மாகாணத்திலேயே முதலாவதாகத் தேறிய மாணவியைவிட அவள் முகத்தில் பெருமையும், கர்வமும் ஒளிவிட.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

# எங்களுடைய 'பணம் பிறகு செலுத்துங்கள்' திட்டம் இன்னும் வசதியாக்கப் பட்டுள்ளது




எங்களது, திருத்தியமைக்கப்பட்ட, 'பணம் பிறகு செலுத்துங்கள்' திட்டத்தால் பலன் பெறுங்கள். முதலில் செலுத்த வேண்டிய பணம் முன்னைவிட சொற்பமாக்கப் பட்டுள்ளதோடு பாக்கியை வசதியாகச் சிறு தொகைகளாகச் செலுத்தக் கூடியவாறு காலவரையறை இன்னும் நீடிக்கப்பட்டுள்ளது! இப்பொழுதைய ஏற்பாட்டின்படி பிரயாணக் கட்டணத்தின் தொகையில் 15% உடனடியாகச் செலுத்தினால் போதும்—மீதியை, 20 மாதங்களில் சுலபமான தவணைகளில் செலுத்தலாம்! 'பஸ்ட் கிளாஸ்' 'எகானமி' வகுப்புகளுக்கு, எல்லா சர்விஸ்களிலும் இந்தச் சலுகை உண்டு!

எந்த டிராவல் ஏஜெண்டிடமிருந்தோ, பாங்க் ஆப் இந்தியாவிடமிருந்தோ அல்லது நேராக எங்களிடமிருந்தோ அதிக விபரம் பெறலாம்!

**ஏயர்-இந்தியா**

பி. ஓ. ஏ. ஸி. மற்றும் காண்டாஸின் ஒத்துழைப்புடன்

JWT/AII-2718

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




சுத்தமே சுகமென்பார், குளிப்பதே குஷியென்பார்
லைப்பாய் தேய்த்து நீராடுவோர். புழுக்கம், சோர்வு—
அழுக்கிலுள்ள கிருமிகள்—அனைத்தையும் அறவே விரட்டிப்
புதுமலர்ச்சியூட்டுவதில் லைப்பாய்க்கு எதுவுமே ஈடாகாது.
நம் குடும்ப முழுமைக்கும் நல்வாழ்வு நல்குவது
லைப்பாய் நல்லுறவு..எல்லாம் இன்பமயம்!

**லைப்பாய் இருக்குமிடம், அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்!**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

L.30-X32 T